# இந்த ஆச்சரியமான சோப்புத்தூள் வெள்ளைத் துணிகளை—வெள்ளை வெளேரென்று—வெளுக்கிறது—கஷ்டப்பட்டுக் கசக்காமல்!

ரின்ஸோவிலும்—இந்த ஆச்சரியமான சோப்புத் தூளிலும் — வெளுக்கப்பட்ட எந்த ஆடையையும் சாதாரணமாக வெளுக்கப்பட்ட ஆடையுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். நீங்கள் உடனே காண்பீர்கள் — ரின்ஸோ எவ்வளவு அதி வெண்மையாக வெளுத்திருக்கின்றது என்று! ரின்ஸோவின் சக்தி வாய்ந்த நுரை எல்லா அழுக்கையும் வெளிப்படுத்துகிறது. வீட்டில் விழும் எல்லா, கலர், மற்றும் வெள்ளை ஆடைகளையும் வெளுப்பதற்கு ரின்ஸோவை உபயோகப்படுத்துங்கள். நீங்களே காண்பீர்கள் — அது உங்களுடைய பாதி வேலையை செய்துவிடுகிறது என்பதை! கஷ்டப்பட்டுக் கசக்க வேண்டியதில்லை! அடித்துத் துவைக்க வேண்டியதுமில்லை! நீங்கள் அதனுடைய அதிகப்படியான வெண்மைக்கு வேறொன்றும் சேர்க்கவேண்டியதில்லை.

ரின்ஸோவை இன்றே உபயோகியுங்கள்!









## ரின்ஸோ மிக வெண்மையாக வெளுக்கிறது!

R. 4-50 TM லீவர் பிரதர்ஸ் (இந்தியா) லிமிடெடினால் இந்தியாவில் தயாரித்தது

மலர் 15 இதழ் 21

# கல்கி

மன்மத ௵ மார்கழி 10

## பொருளடக்கம்

1955 டிசம்பர் 25


| | | |
|---|---|---|
| அமெரிக்க உதவி | (தலையங்கம்) | ... 3 |
| பாரதத்தில் சீன உப ஜனாதிபதி | ... | ... 4 |
| நல்லுறவின் வெற்றி | ... | ... 4 |
| என்ன சேதி? | ... | ... 5 |
| மருண்டவன் கண்ணுக்கு! (கார்ட்டூன்) | சாமா | ... 6 |
| ரகுபதி ராகவ | ராஜாஜி | ... 9 |
| கடவுள் சித்தம் (பரிசுக் கதை—3) | கோபால கிருஷ்ணன் | ... 12 |
| புது உலகம் பார்த்தோம் | பகீரதன் | ... 18 |
| ஆற்றங்கரையினிலே | பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை | ... 25 |
| வாழையின் கதை (பாலர் பகுதி) | ராஜாஜி | ... 28 |
| பர்மா ரமணி (பாப்பா மலர்) | அழ. வள்ளியப்பா | ... 31 |
| கல்கியின் அமரதாரா | ஆனந்தி | ... 35 |
| ஹாஸ்யக் களஞ்சியம் | சாமா | ... 42 |
| தமிழ் கூறும் நல்லுலகம் | ... | ... 48 |
| பாக்யசாலி | ஸோமாஸ் | ... 51 |
| மைசூர் மல்லிகை | ஜயலக்ஷ்மி நரசிம்மன் | ... 59 |
| பலே பேர்வழி! | ரா. வீ. | ... 67 |
| டி. கே. சி.யின் கடிதங்கள் | ... | ... 74 |
| அழியாத அன்பு | ஸ்ரீப்ரியா | ... 77 |
| சிவன் கீர்த்தனைகள் | செம்மங்குடி சீனிவாச ஐயர் | ... 80 |
| ரவிசந்திரிகா | சோமு | ... 83 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 15
இதழ் 21

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மன்மத ஆண்டு
மார்கழி மீ 10

# அமெரிக்க உதவி

தற்போது ஏற்பட்டிருக்கும் நிலைமையில் வெளி நாடுகளிலிருந்து உதவியை எதிர்பார்ப்பதும், உதவி கேட்பதும் உசிதம் ஆகாது என்று நேருஜி சொல்லி விட்டார். இது அவருக்கு ஒரு புதிய கொள்கை யல்ல. பழைய சங்கோஜமே யாகும். ஆயினும் நட்புறவுக்கு முரணாகுமே என்று பயந்து இதுவரை வெளிப்படையாகச் சொல்லாமல் இருந்து வந்தார். நிதி திரட்டும் சகாக்களும், திட்டம் போடும் சகாக்களும் இதைக் கவனிக்காமல் நடந்து வந்தார்கள். இப்போது எல்லாருமே கவனிக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

சோதனைகள்தான் மனிதனுக்குப் பலம் தரும். ஒரு ஜன சமூகத்துக்கும் இதுவே உண்மை. பெரிய பெரிய அணைக்கட்டுகளும், பூதாகாரமான ஆலைகளும் இருந்தால் நாட்டுக்குப் பெருமைதான். ஆனால் அவற்றை உண்டாக்குவதற்கு வெளி நாடுகளின் உதவி பெரிய அளவில் அவசியம் ஆகிறது. அந்த உதவியினால் பல கோளாறுகளும் உண்டாகி விடுகின்றன! நட்புக்கும் உறவுக்கும் பல சந்தேகங்களும் தடைகளும் போட்டிகளும் தோன்றி விடுகின்றன. தவிர சமுதாயத் தொழில் அமைப்பில், உதாரணமாகக் கைத்தறித் தொழிலில், பல சிக்கல்கள் ஏற்பட்டுப் பலருக்கு வேலையில்லாத நிலைமையும், வறுமையும் ஏற்படுகின்றன. உற்பத்தி என்றால், உற்பத்தியின் நன்மையில் பெரிதளவு யாருக்குப் போய்ச் சேருகிறது என்னும் பிரச்னையையும் ஆராய வேண்டும். தனி மனிதர்களின் சொத்தாகிய பெரிய ஆலைகளினால், நாட்டின் செல்வ நிலையில் மேடு பள்ளங்கள் அதிகரிக்கின்றன.

எல்லாக் காரணங்களையும் ஆராய்ந்து பார்க்கும் போது, வெளி நாடுகளின் உதவி குறைவதினால் தாற்காலிகமாகத் தாமதமும், புதிய திட்டங்களுக்குத் தடையும் உண்டான போதிலும் முடிவில் லாபமே யாகும். தன்முயற்சியே உண்மைச் செல்வம்.

பலவந்தமாகவும் உதவி கொடுக்க வருவார்கள் என்பது நிச்சயம். வேண்டாம் என்று தைரியமாகச் சொல்லுவதில் நன்மை இருக்கிறது. சந்தேகப்பட்டுக் கொண்டும், வருத்தப்பட்டுக் கொண்டும் கொடுக்கிற தானத்தை, வேண்டாம் என்று சொல்வதில் மரியாதைக் குறைவு ஒன்றும் இல்லை! வேண்டாம் என்றே சொல்லலாம். இல்லா விடில், மக்களுக்குத் தன்முயற்சிக்கான படிப்பு ஏற்படாது.

களங்கமற்ற உள்ளத்துடன் கொடுக்கப்படும் உதவியை எடுத்துக் கொள்வதில் தீமை இல்லை. அமெரிக்காவில் இப்போது நடந்துவரும் வாதங்களையும் இனி நடக்கப் போகும் வாதங்களையும் ஆராய்ந்து பார்த்துச் சரியான முடிவுக்கு வரவேண்டும்.

# பாரதத்தில் சீன உப ஜனாதிபதி

பாரத நாட்டுக்கு இப்பொழுது சீனக் குடியரசின் உப ஜனாதிபதி ஸ்ரீமதி சுங் சிங்-லிங் வந்திருக்கிறார். ஸ்ரீமதி சுங்சிங்-லிங் சீனக் குடியரசைத் தோற்றுவித்த ஸ்ரீ சன் யாட்-சென் என்ற சரித்திர நாயகரின் மனைவி. ஸ்ரீ சன் யாட்-சென் போலவே சீன நாட்டின் விடுதலை இயக்கத்தில் அரும் பாடு பட்டு உழைத்தவர் ஸ்ரீமதி சுங் சிங்-லிங். பாரதத்துடன் மாறாத நேசம் பூண்டவர். பாரத மக்களிடம் எல்லையற்ற அன்பு கொண்டவர்.

புது தில்லியில் ஸ்ரீமதி சுங் சிங்-லிங் அவர்களுக்கு ராஜமரியாதை செய்து வரவேற்பளிக்கப்பட்டது. ஆயிரக்கணக்கான மக்கள் கூடியிருந்து சீன உப ஜனாதிபதியை வரவேற்றனர். சீனக் குடியரசு பாரதத்திடமும் பாரத மக்களிடமும் தங்களுடைய நட்பையும் நல்லெண்ணத்தையும் காட்டிக் கொள்வதற்காகவே இந்தியாவுக்கு வந்திருப்பதாக ஸ்ரீமதி சுங் சிங்-லிங் கூறியிருக்கிறார்.

ஸ்ரீமதி சுங் சிங்-லிங் அவர்களை வரவேற்று இந்திய மக்களின் சார்பாக நமது பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு நல்வரவு கூறினார்.

இந்த வரவேற்புக்குப் பதிலளித்து சீன உப ஜனாதிபதி பேசுகையில் ஒரு பேருண்மையை வெளியிட்டார். சமீபத்தில் சோவியத் தலைவர்கள் கூறிய கருத்தையே இன்னும் அழுத்தம் திருத்தமாகக் கூறி வலியுறுத்தினார்.

கோவா மீது அன்னியர் ஆதிக்கம் செலுத்துவதானது ஒரு சுதந்திர நாட்டில் அதன் பிரதேச எல்லையை மீறுவதற்கு ஒப்பாகும் என்றார். கோவாப் பிரச்னையில் இந்திய மக்களுக்குச் சீனா முழு ஆதரவு அளிக்கும் என்று சீன உபஜனாதிபதி கூறினார்.

ஒரு சுதந்திர நாட்டில் மற்ற நாட்டினர் ஆதிக்கம் செலுத்தும் காலனி ஆட்சி ஒழிய வேண்டும் என்பது ஐக்கிய நாடுகள் உலக மகாசபையில் அமெரிக்கா, பிரான்ஸ்பிரிட்டன் போன்ற வல்லரசுகளே சேர்ந்து ஏற்படுத்திய விதி. அந்த விதிக்கு இணங்க அந்த நாடுகள் தங்கள் ஆதிக்கத்திலிருந்த காலனி ஆட்சிகளை விட்டு வெளியேறி விட்டன. அப்படி யிருந்தும் கோவா விஷயத்தில் அமெரிக்காவின் அபிப்பிராயம் சமாதானத்தில் விருப்பமுள்ள எல்லாருக்கும் ஒரு பெரும் அதிர்ச்சியையே ஏற்படுத்தி யிருக்கிறது.

இந்த அதிர்ச்சிக்குச் சிகிச்சை அளிப்பது போல சீன உதவி ஜனாதிபதி ஸ்ரீமதி சுங் சிங்-லிங் கோவாவில் போர்ச்சுகல் ஆட்சியைக் கண்டித்துப்பேசியதைக் கேட்டுப் பாரதநாட்டு மக்கள் மகத்தான சந்தோஷம் அடைவதில் என்ன வியப்பு இருக்கிறது!

காலனி முறை அடியோடு ஒழியவேண்டும் என்று தொண்ணூற்றுறு கோடி மக்களைக் கொண்ட சீனாவும், மிகப் பெரிய வல்லரசான ருஷ்யாவும், உலகில் சமாதானத்தை நிலை நாட்டப் பாடுபடும் இந்தியாவும் விரும்புவதைப் போர்ச்சுகலும், உலக வல்லரசுகளும் உணர்ந்து நடந்து கொள்ள வேண்டும்.

# நல்லுறவின் வெற்றி

ருஷ்யத் தலைவர்கள் பாரத நாட்டு மக்களுடைய அன்பைப் பெற்றார்கள்.

பாரத நாட்டு முக்கிய பிரச்னைகளான காஷ்மீர், கோவா சம்பந்தமாகத் தமது கருத்துக்களை ஒளிவு மறைவின்றி, சிறிதும் சந்தேகத்துக் கிடமின்றிச் சொன்னார்கள்.

நமது பிரதமர் நேருவின் பஞ்ச சீலக் கொள்கைகளில் பரிபூரண நம்பிக்கை தெரிவித்து, நேருஜியுடன் கையெழுத்திட்ட அறிக்கையை வெளியிட்டார்கள்!

இவை மட்டுமா! நேருஜியின் ஆலோசனைப் படி உலகில் பதினாறு நாடுகள் ஐ. நா. சபையில் இடம்பெற, தங்கள் 'வீட்டோ' அதிகாரத்தை வாபஸ் பெற்று உலக மக்களின் பெரு மதிப்புக்குப் பாத்திரரானார்கள்.

நேருஜியின் யோசனைக்கு மதிப்புக்கொடுத்து ரஷ்யா புரிந்த இந்தச் செய்கை உலக வல்லரசுகளைத் திக்கு முக்காடச் செய்து விட்டது! 'ராஜ தந்திர காரியத்தில் ரஷ்யா நம்மை மிஞ்சி விட்டதே!' என்று அமெரிக்கப் பத்திரிகைகள் தம் கைகளை உதறுகின்றன!

* * *

ஐ. நா. சபை உலக மக்களின் பிரதிநிதிகளை, உலக நாடுகளின் பிரதிநிதிகளைக் கொண்ட சபை என்று பெயர். ஆனால் உலக ஜனத்தொகையில் மூன்றில் ஒரு பங்கைப் பெற்றுள்ள கம்யூனிஸ்ட் சீனாவுக்கு அதில் இடங் கிடையாது. அது தவிர இன்னும் பல ஆசிய, ஆப்ரிக்க நாடுகளுக்கு அதில் இடம் கிடையாது. அப்படிப்பட்ட நாடுகளில் பதினெட்டு நாடுகளை ஐ. நா. சபையில் அனுமதிக்க ஒரு தீர்மானம் கொண்டு வரப்பட்டது. அதில் வெளி மங்கோலியாவை அனுமதிக்க முடியாது என்று சியாங் பிரதிநிதி தமது தடை அதிகாரத்தைப் பிரயோகித்தார். ரஷ்யா அதன்மேல் மற்ற ஜனநாயக நாடுகளையும், அமெரிக்கச் சார்புள்ள நாடுகளையும் அனுமதிக்க முடியாது என்றும் தனது தடை அதிகாரத்தைச் செலுத்தியது. இப்படியொரு நிலை ஐ. நா. சபையில் ஏற்பட்டிருப்பதை நமது பிரதிநிதி ஸ்ரீ வி. கே. கே. மேனன் பிரதமர் நேருஜிக்குத் தெரிவித்தார். அந்தச் சமயத்தில் ரஷ்யப் பிரதமர் புல்கானின் இந்தியாவில் இருந்தார். இரு பிரதமர்களும் அவசரப் பேச்சு வார்த்தை நடத்தியதன் விளைவாகப் பன்னிரண்டு நாடுகளின்மீது விதித்திருந்த தன் தடை அதிகாரத்தை ரஷ்யா வாபஸ் பெற்று விட்டதாக அறிவித்தது.

முடிவில் ஜப்பான், வெளி மங்கோலியா ஆகிய இரு நாடுகள் தவிர மீதிப் பதினாறு நாடுகளுக்கு ஐ. நா. வில் ஸ்தானம் கிடைத்து விட்டது. இப்பதினாறு நாடுகளில் நமக்கு அண்டை நாடுகளாக உள்ள இலங்கையும், நேப்பாளமும் உள்ளன என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும்.

# என்ன செதி?

## திருப்தி தரும் விஷயம்

இவ்வளவு நாட்கள் நியாயத்தையும் உண்மையையும் மறந்து விட்டுப் பல ஆங்கில நாட்டுப் பத்திரிகைகள் எழுதி வந்த அக்கிரமப் பேச்சுக்களுக்குப் பிராயச் சித்தமாக "அப்ஸர்வர்" பத்திரிகை சென்ற ஞாயிறு அன்று நேருஜியின் நடு நிலைமையைப் பாராட்டி எடுத்துக் காட்டி யிருக்கிறது. "நாம் வெறுக்கும் ஜனங்களை அவர் வெறுக்க வேண்டும் என்கிற அவசி யம் இல்லை, எல்லாரிடமும் சிநேகமாக இருக்க முயல்கிறார். யாரையும் அவர் அவலட்சணமாகத் தூற்றாமலே எப்போ தும் பேசி வருகிறார். அவருடைய மன சாட்சிக்கு விரோத மில்லாமல் எந்த அளவு எல்லாரையும் பற்றி இன்சொல்லே பேசலாமோ அவ்வளவில் பேசி வருகிறார். இதை மறுக்க முடியாது. ருஷிய நாட்டை அவர் மிகவும் மதிக்கிறார். ஆனால் அதைச் சொல்லிக் காட்டும் போதெல்லாம் ஆங்கில நாட்டிடம் தாம் வைத்திருக்கும் நட்பை யும் கூடவே எடுத்துக் காட்டி வருகிறார். மேல் நாடுகளுடன் தமக்குள்ள சிநேகத்தை மறவாமல் எதிர்த்தட்டில் வைத்து எடுத் துக் காட்டியே ருஷிய மக்களிடம் அவருக் குள்ள பெருமதிப்பை விளக்கி வருகிறார். ஆனால் ஆங்கிலப் பத்திரிகைகளில் அநேக மாக இதை மறைத்து விட்டே அவரைத் தாக்கி வருகிறார்கள். அவருடைய பேச் சைப் பிரசுரிக்கும் போது மேல் நாடுக ளுடன் தமக்குள்ள நட்பை அவர் வற் புறுத்தும் பேச்சுக்களை எல்லாம் விட்டு விடுகிறார்கள். இது சரி அல்ல. இந்தியா பூரண சுதந்திரம் அடைந்து விட்டதை விட மிக வியக்கத்தக்க விஷயம் என்ன வென்றால் சுதந்திர மடைந்த பின் பிரிட் டன் தேசத்துடன் இந்தியா வைத்திருக்கும் நட்பே ஆகும். இந்தியாவுக்குத் தற்போது சென்று வரும் ஒவ்வொரு ஆங்கிலேயரும் இதைக் கண்டு வியந்து வருகிறார்கள். அவர்கள் உறுதி கூறும் விஷயம் இது."

ஒன்றிரண்டு ஆங்கிலப் பத்திரிகைகளா வது இவ்வாறு உண்மையைக் காண்பது திருப்தி தருகிறது.

## ஆசையைக் காட்டும் பரிகாசம்

சென்னையைத் தமிழ் நாட்டில் சேர்த் ததைப் போலப் பம்பாய் நகரத்தையும் மகாராஷ்டிரத்தில் ஏன் சேர்க்கக் கூடாது என்று ஒருவர் டில்லி மக்கள் சபையில் பேசியபொழுது, சென்னையைத் தமிழ் நாட்டில் சேர்த்தது தவறு என்று கனம்



உதவி சபா நாயகர் அனந்தசயனம் அவர் கள் குறுக்கிட்டு ஒரு பரிகாசம் செய்தார். பரி காசம் ஆயினும், அவ ருடைய உள்ளத்தில் கிடக்கும் சபலத்தையே இது காட்டுகிறது! "அடுத்தது காட்டும் பளிங்கு" போல், ஆசையைக் காட்டுகிறது பரிகாசம்!

## மகாபாரதம்

வியாசர் விருந்து என்ற தலைப்பில் தலைவர் ராஜாஜி அவர்கள் 'கல்கி' வாசகர் களுக்கு அளித்த மகா பாரதக் கதையின் ஆங்கில மொழிபெயர்ப்பை 'மகாபாரதா' என்ற பெயருடன் பம்பாய் பாரதீய வித்யா பவன் வெளியிட்டிருக்கிறார்கள். இந்தப் புத்தகம் சுமார் நான்கு ஆண்டுகளுக் குள் 58,000 பிரதிகள் வெளியாகி யிருக் கின்றன என்பது இந்தியப் பிரசுரங்களின் சரித்திரத்திலேயே ஒரு தனிச் சிறப்பாகும். இப்பொழுது வெளி வந்திருக்கும் நான்கா வது பதிப்புக்கு ராஜாஜி எழுதியுள்ள முன்னுரையில் குறிப்பிடுகிறார் :

"அரசியல் தொண்டனாகவும் தேசப் பணி யாளனாகவும் இருந்து, நாட்டு நலனுக்கான பதவிகளை ஏற்பதும், தீவிர சேவை செய் வதும் நல்ல காரியங்களே. ஆனால் மேற் கண்ட பணிகளைவிடச் சிறந்ததாக என் அனுபவத்தில் நான் கண்டது என்ன வென்றால், அப் பணிகளைத் துறந்து, நம் நாட்டு மகரிஷிகளின் கூட்டுறவில் வாழ்ந்து, அவர்கள் இன்றைய மக்களோடு மீண்டும் உறவாடுவதற்கு வேண்டிய காரியத்தைச் செய்து கொடுப்பதே யாகும்!"

## நடனக் கலை விழா

பாரத நாட்டின் பழம் பெருங் கலை யான பரதநாட்டியத்துக்கு இந்தக் காலத் தில் புத்துயிர் கொடுத்ததோடு, அந்தக் கலைக்கு உரிய கௌரவத்தையும் சிறப்பை யும் உலக நாடுகளே அறிந்து மதிக்கும் வண்ணம் நிலைநாட்டி னார் ஸ்ரீமதி ருக்மிணி தேவி. இதற்காக அவர் எடுத்துக் கொண்ட சிரமம் கொஞ்ச நஞ்சமல்ல. அந்த அரிய கலைச் செல்வத்தை அருமை



## மருண்டவன் கண்ணுக்கு !




" இதென்ன பயங்கர பூதம் !"—டல்லெஸ்

யாகப் போற்றி வளர்த்து வருவதற்காக "கலாக்ஷேத்திரம்" என்ற கலை ஸ்தாபனத்தை நடத்தி வருகிறார்.

இவ்வாறு கலைக்காகவே தொண்டாற்றி வரும் அடையாறு கலாக்ஷேத்திரத்தில் வரும் 24-உ யன்று கலைவிழாக் கொண்டாட்டத்தை ஆரம்பிக்கிறார்கள். தலைவர் ராஜாஜி அவர்கள் இந்த விழாவைத் துவக்கிவைக்கிறார்கள்.

விழா ஒன்பது தினங்கள் நடைபெறும். சீதா சுயம்வரம் நடன நாடகத்துடன் ஜனவரி முதல் தேதி கலை விழா முடிவடைகிறது.

கலாக்ஷேத்திரக் குழுவினரின் "குமார சம்பவம்" "குற்றாலக் குறவஞ்சி" "சீதா சுயம்வரம்" போன்ற நிகழ்ச்சிகளுடன், "சந்தான கோபாலம்" என்ற கதகளி நிகழ்ச்சியும், அர்ஜென்டைனாவைச் சேர்ந்த குமாரி மிர்த்தா பார்வேயின் "பாலே" நடனமும் விழாவில் நடக்க இருக்கிறது.

அடையாறு கலாக்ஷேத்திர அரங்கில் நடைபெறும் கலை விழாவில் ரஸிகர்கள் திரளாகக் கலந்து கொண்டு மகிழ்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

### இலங்கைக் காங்கிரஸ் தலைவர்

இலங்கையின் சரித்திரத்திலே மிக முக்கியமானகாலத்தில் அதாவது 1949-51 வரை இலங்கை ஜனநாயக காங்கிரஸின் தலைவராக இருந்த திரு கே. ராஜலிங்கம் மீண்டும் தலைவராக 17ம் தேதி நடந்த கட்சிக் கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப் பட்டிருப்பதாக அறிகிறோம். இவருடைய தலைமைப் பதவி காலத்தில் இ. ஜ. கா. விலுள்ள பிளவுகள் நீங்கி ஒற்றுமை ஏற்பட்டு இலங்கை இந்தியர்களுக்கான பணி ஆக்க வகையில் தொடர்ந்து நடைபெறும் என்று எதிர்பார்க்கிறோம்.

### கலைஞர்கள் திரட்டும் நிதி

தஞ்சை, திருச்சி, ராமநாதபுரம் முதலிய ஜில்லாக்களில் புயலும், மழையும், உடைப்பும், வெள்ளமும், கடல் பொங்குதலும் ஆகிய இயற்கை உற்பாதங்கள் ஏற்பட்டு லட்சக் கணக்கில் மக்கள் வீடிழந்து, உடையிழந்து, உற்றார் உறவினர் இழந்து படும் கஷ்டம் சொல்லி முடியாது! அவர்களுக்காக இரக்கப்பட்டுத் தேசத்தின் பல பகுதிகளிலிருந்தும் உதவிகள் வந்து கொண்டிருக்கின்றன. இன்னும் வரவேண்டும்.

சென்ற வாரம் கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் தலைமையில் தென்னிந்தியக் கலைஞர்கள் புயல் நிவாரண நிதிக் குழு அமைத்து, பல திரைப்பட நட்சத்திரங்கள், நாடக நடிகர்கள், பின்னணிப் பாடகர்கள்

இவர்களிடமிருந்தெல்லாம் நிதி திரட்டி ரூ. 41,000 நமது நிதி மந்திரி அவர்களிடம் சென்ற ஞாயிற்றுக்கிழமை ஒப்படைத்தார்கள். அவ் வைபவத்தில் என்.எஸ்.கே. அவர்கள் தாங்கள் ஒரு லட்ச ரூபாய் நிதி திரட்டித் தரப் போவதாக வாக்களித்தார். ஆனால் நிதி மந்திரி திரு சி. சுப்பிரமணியம், "கலைஞர்கள் மனம் வைத்தால் ஒரு லட்சமென்ன? அதற்கு மேலும் நிதி திரட்டித் தரலாமே!" என்றார். உண்மை. வருகிற டிசம்பர்மீ 24, 25 தேதிகளில் திருவல்லிக்கேணி கலா மண்டபத்தில் இரண்டு நாட்கள் பிரபல சினிமா நடிக நட்சத்திரங்கள் கலந்து கொண்டு இசை, நடன, நாடகப் பெருவிழா நடத்தப் போகிறார்கள். பானுமதி, அஞ்சலி, சாவித்திரி, வி. நாகய்யா, சிவாஜி கணேசன், ஜெமினி கணேசன், என். எஸ். கிருஷ்ணன், டி. கே. எஸ். குழுவினர், எம். எல். வசந்தகுமாரி, பி. லீலா, ஜிக்கி முதலிய ஐம்பதுக்கு மேற்பட்ட நடிகர்கள் நடிகைகள், பின்னணிப் பாடகிகள், பாடகர்கள் கலந்து கொண்டு சிறப்பிக்கப் போகிறார்கள். இந்தப் பெருவிழாவுக்குக் கட்டணம் உண்டு. ஏராளமான மக்கள் விஜயம் செய்து தென்னிந்தியக் கலைஞர்களின் புயல் நிவாரண நிதி எதிர்பார்ப்பதை விட அதிகமாகச் சேரும்படி செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

## தேசபக்தர் திரு தேவநாகய்யா

தேச பக்தர் திரு தேவநாகய்யா சென்ற பதினாறாந் தேதி கடலூரில் காலமாகிவிட்டார் என்ற செய்தி கேட்டு எண்ணற்ற தேசபக்தர்கள் திடுக்கிட்டிருப்பார்கள். 'இம்' என்றால் சிறை வாசம், 'ஏன்?' என்றால் வனவாசம் என்றிருந்த காலத்தில் திரு தேவநாகய்யா அஞ்சா நெஞ்சத்துடன் தேசத் தொண்டு ஆற்ற முன் வந்தார். தென்னாற்காடு மாவட்டத்தில் தேசபக்தியைத் தட்டி எழுப்பினார். காங்கிரஸ் நடத்திய எல்லாப் போராட்டங்களிலும் ஈடுபட்டுச் சிறை சென்றார், அந்த உத்தமத் தியாகி. ஜில்லா போர்டுத் தலைவராகவும், சட்டசபை அங்கத்தினராகவும் இருந்து சிறந்த முறையில் அருந் தொண்டாற்றி யிருக்கிறார்.

தேசத்தின் விடுதலைக்காக எப்படி அல்லும் பகலும் போராடினாரோ அதே போலப் பெற்ற சுதந்திரத்தைப் பேணி வளர்க்கும் திருப்பணியிலும் சுயநலமில்லாமல் தொண்டாற்றினார். அவரைப் போன்ற பழம் பெரும் தேசபக்தர்களை இழந்து வருவது பெரிய நஷ்டம். அவர் பிரிவால் வாடும் அவருடைய குடும்பத்தினருக்கும், நண்பர்களுக்கும் நமது அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# இலங்கைக் காங்கிரஸில் ....

கொழும்பு, டிசம்பர், 16உ.

இலங்கை இந்தியர்களின் சரித்திரத்தில் இவ்வாரம் மிகமிக துக்கமானதும் சோதனைகள் மலிந்ததுமான வாரமாகும். இந் நாட்டில் வேறு எவ்வளவோ அரசியல் ஸ்தாபனங்களும் தொழிலாளர் யூனியன்களும் இருந்தும் கூட, இலங்கை ஜனநாயக காங்கிரஸைப் போல ஒற்றுமையும், கட்டுப்பாடும் பிரதிநிதித்துவ பலமும் உடைய ஸ்தாபனம் வேறு எதுவுமில்லை யென்ற புகழ் பெற்றிருந்தது. பத்து லட்சம் இலங்கை இந்திய வம்சாவளியினர்களின் ஏகப் பிரதிநிதி யென்று பெருமையுடன் விளங்கிய இந்த ஸ்தாபனத்தைப் பதினாறு ஆண்டுகளுக்கு முன்னால் பாரதப் பிரதமர் நேருஜி அங்குரார்ப்பணம் செய்து வைத்தார். இவ்வளவு பெருமையுடன் விளங்கிய காங்கிரஸ் ஸ்தாபனத்தில் இவ்வாரம் பெரிய பிளவு ஏற்பட்டு, தகராறு முற்றி, போலீசுக்குப் போகும் அளவுக்கு நிலைமை மிஞ்சி விட்டது மிகவும் துரதிர்ஷ்டமானது.

சென்ற மே மாதம் அட்டனில் காங்கிரஸ் மகாநாடு நடைபெற்ற பொழுது தலைவர் தேர்தலை யொட்டி ஜனாப் அஸீஸுக்கும் ஸ்ரீ எஸ். தொண்டமானுக்கு மிடையில் தகராறு ஆரம்பித்தது. அந்தத் தகராறின் விளைவாக வேறு எப்பொழுதுமே நடந்திராத முறையில் பகிரங்க மகாநாட்டில் அடிதடி நடந்து, போலீசார் தலையிட்டு, மகாநாட்டைக் கலைத்தார்கள். அதன்பிறகு காங்கிரஸ் தலைவர் ஜனாப் அஸீஸுக்கும் முன்னாள் தலைவர் ஸ்ரீ எஸ். தொண்டமானுக்கு மிடையில் மோதல்கள் தொடர்ந்து இருந்து வந்தன. காங்கிரஸ் காரியக் கமிட்டியில் மொத்தம் 23 அங்கத்தினர்கள் உண்டு. அந்த 23 பேர்களும் ஸ்ரீ தொண்டமான் ஆதரவாளர்கள். இந்தக் கமிட்டி ஜனாப் அஸீஸின் நடவடிக்கைகளுக்கெல்லாம் முட்டுக்கட்டை போட்டு வந்ததாக அஸீஸ் கோஷ்டியினர் புகார் செய்கிறார்கள்.

இந்த நிலைமையில் சென்ற 7 ம் தேதியன்று காங்கிரஸ் காரியக் கமிட்டியின் கூட்டமொன்று நடந்தது. அப்பொழுது 10 ம் தேதிக்கு வைக்கப்பட்டிருந்த இ. ஜ. கா. கமிட்டியின் (அதாவது அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியைப் போன்ற கமிட்டி) கூட்ட நிகழ்ச்சி நிரல் ஒழுங்கான முறையில் இல்லை யென்றும் ஆகையால் புதிய நிகழ்ச்சி நிரலைத் தயாரித்து 10 ம் தேதிக் கூட்டத்தை 17 ம் தேதிக்கு ஒத்திப் போட வேண்டுமென்றும் ஸ்ரீ எஸ். தொண்டமான் பிரேரேபித்தார். இந்தப் பிரேரணையைத் தலைவர் ஜனாப் அஸீஸ் நிராகரித்துக் காரியக் கமிட்டிக் கூட்டத்தையும் கலைத்து விட்டதாகவும் அறிவித்து விட்டு வெளியேறினார். ஆனால் அவர் போனபின் காரியக் கமிட்டியினர் தங்களுக்குள் ஒரு தலைவரைத் தேர்ந்தெடுத்து, கூட்டத்தைத்

தொடர்ந்து நடத்தி இ. ஐ. கா. கமிட்டிக் கூட்டத்தை 17 ம் தேதிக்கு ஒத்திவைத்தனர்.

இது இவ்வாறிருக்க 10 ம் தேதி யன்று அஸீஸ் கோஷ்டியைச் சேர்ந்த இ. ஐ. கா. கமிட்டி அங்கத்தினர்கள் பழைய ஏற்பாட்டின்படி கூட்டம் நடத்தி, காரியதரிசிகள், பொக்கிஷதார், காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் ஆகிய எல்லோரையும் பதவிகளிலிருந்து நீக்கி, புதிய நிர்வாகிகளையும் காரியக் கமிட்டியையும் தேர்ந்தெடுத்தார்கள். இதைப் பின்பற்றி அஸீஸ் கோஷ்டியினர் காங்கிரஸ் காரியாலயத்தை ஸ்வீகரித்துக் கொண்டு சகல தஸ்தாவேஜுகளையும் தங்களுடைய பொறுப்பில் எடுத்துக் கொண்டார்கள் என்று சொல்லப்படுகிறது. ஜனாப் அஸீஸ் தலைமையில் நடந்த இ. ஐ. கா. கமிட்டியின் ஆக்ஞையின் படியே புதிய நிர்வாகிகளிடம் தஸ்தாவேஜுகளை ஒப்படைக்க அலமாரிகளை உடைத்துத் திறந்ததாக அவர்கள் சொல்லுகிறார்கள். ஆனால் இ. ஐ. கா. கமிட்டிக் கூட்டம் 17 ம் தேதிக்கு ஒத்தி வைக்கப்பட்டிருப்பதாயும் 10 ம் தேதி நடந்த கூட்டமும் அதில் நடந்த தேர்தல்களும், அலமாரிகள் உடைக்கப்பட்டதும் சட்ட விரோதமென்றும் தொண்டமான் கோஷ்டியினர் கூறுகின்றனர். இது சம்பந்தமாக அவர்கள் போலீஸில் புகார் கொடுத்ததின் பேரில் போலீசாரும் விசாரணை நடத்துகிறார்கள். தகராறைக் கோர்ட்டுக்குக் கொண்டு போக இருதரப்பினரும் வழக்கறிஞர்களையும் கலந்துகொண்டிருக்கின்றனர். –ரஜனி

 

# ரகுபதி ராகவ



## 6. "உனன் கண்டாய்!"

**[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]**

ராஜாஜி

சத்தியம் அகிம்ஸை இந்த இரட்டைக் கொள்கையில் எனக்குள்ள பக்தியானது நாளுக்கு நாள் உறுதியடைந்து வளர்ந்தே வருகிறது. இந்த இரு தர்மங்களையும் ஒவ்வொரு காரியத்திலும் கடைப்பிடித்தே என் வாழ்க்கையை நடத்தப் பார்க்கிறேன். ஆதலால், எனக்கு அவற்றில் உள்ள பக்தி வளர்ந்து வருவதைப் போலவே, நானும் ஒவ்வொரு நிமிஷம் வளர்ந்து பக்குவம் அடைந்து வருகிறேன். இன்னும் வளர்ந்து கொண்டே வருகிறேன். இத்தனை காலமாகியும் வளர்ச்சி நின்று விடவில்லை. இந்த சத்தியம் அகிம்ஸை என்கிற தத்துவங்களில் தினமும் புதுப் புதுப் பொருளும் சக்தியும் மலரக் காண்கிறேன். என் அறிவு தினந்தினம் விளக்கம் பெற்று விருத்தி அடைந்து வருகிறது. ஒவ்வொரு நாளும் நான் புதுப் புது விஷயங்களை அவற்றில் கண்டு வியப்பும் மகிழ்ச்சியும் அடைகிறேன்.

[ஹரிஜன் 2-3-40]

பிரபஞ்சத்தில் ஸர்வ வியாபகமான சக்தி ஒன்று இருந்து வருகிறது. அதன் தன்மையை முற்றிலும் அறிந்தவர் இல்லை. எங்கும் பரந்து நிற்பினும் நான் அதைக் கண்ணால் காணவில்லை. ஆயினும் அது எனக்குப் புலப்படுகிறது என்பதில் ஐயமில்லை. கண்களால் காணப்படாத இந்தப் பரம்பொருள் தன் சக்தியால் தன்னைப் புலப்படுத்திக் கொள்கிறது. எனினும் அதை யாரும் விவரித்து நிரூபிக்க இயலாது. நாம் காணும் எந்தப் பொருள் போன்றதும் அல்ல அந்தப் பொருள். அது நம்முடைய பஞ்சேந்திரியங்களுக்கு அடங்காது.

இவ்வாறானது பரம்பொருள். ஆயினும் நம்முடைய புத்தியை உபயோகித்து, ஈச்வரன் ஒருவன் இருக்கிறான் என்பதை ஓரளவு ஓர்ந்து உணர்ந்து கொள்ளலாம்.

சாதாரணமாக, தேசத்தில் உழைத்து வரும் சம்சாரிகளுக்கு, தேசத்தை யார் ஆண்டு வருகிறார்கள், ஏன் ஆண்டு வருகிறார்கள், எப்படி ஆண்டு வருகிறார்கள் யாதுமே தெரியாது. ஆயினும் ஏதோ ஒரு ஆதிபத்தியம் நடந்து வருகிறது என்பதை மாத்திரம் அனைவரும் உணர்வார்கள். சென்ற ஆண்டு நான் மைசூர் ராஜ்யத்தில் சுற்றுப் பிரயாணம் செய்தேன் அல்லவா? அப்போது அநேக ஏழைக் கிராமவாசிகளைக் கண்டு பேசினேன். மைசூர் தேசத்தை யார் ஆள்கிறார்கள் என்று அவர்களைக் கேட்டேன். "ஒரு தெய்வம் ஆள்கிறது" என்றார்கள். தங்களுடைய அரசனைப் பற்றி அவர்களுக்குத் தெரியவில்லை. அந்தக் கிராமவாசிகளுக்கே தங்கள் எஜமானரைப் பற்றி இவ்வளவுதான் தெரிந்தது என்றால், கடவுளுக்கும் எனக்கும் எவ்வளவு தூரம்!—இந்தக் கிராமவாசிகளுக்கும் அவர்களை ஆளுகிற மகாராஜாவுக்கும் இடையே அவ்வளவு தொலை இல்லை. எனக்கு எவ்வாறு தெரியப் போகிறது, அரசர்களுக்கு அரசனான பகவானைப் பற்றி? அவன் ஒருவன் இருக்கிறான் என்பதே எனக்குத் தெரியாமல் இருப்பதில் என்ன வியப்பு? ஆயினும் மைசூரில் நான் கண்ட ஏழை கிராமவாசிகள் தெரிந்து கொண்டிருக்கிற முறையில் நானும் பிரபஞ்சத்தைப் பற்றித் தெரிந்து கொண்டிருக்கிறேன். இந்த உலகம் ஒரு ஆட்சியின் கீழ் அமைதி பெற்று வருகிறது. அனைத்தும் ஒரு நியமப்படி நடந்து வருகிறது. அந்த நியதியை யாரும்

மாற்ற முடியாது. யாவரும், எதுவும், உயிர் கொண்டதும் உயிர் அற்றதுமான எல்லாம் அதற்கு உட்பட்டவை - என்பதை நான் காண்கிறேன்.

அந்த நியதியும் ஒரு குருட்டு நியதியல்ல. உயிரற்ற கண்ணற்ற ஆதிக்கம் அல்ல. உயிர்கொண்ட ஜீவன்களை உயிரற்ற ஒரு ஆட்சி எப்படி அடக்கி ஆளமுடியும்? தாவரங்களுக்கும் மற்ற ஜடப் பொருள்களுக்கும்கூட உயிர் உண்டு, அபார சக்தியும் உண்டு என்பதைக் கண்டிருக்கிறோம் அல்லவா? நியதி வேறு, நியதியை அமைத்திருப்பவன் வேறல்ல. அனைத்தையும் ஆளும் ஒரு நியதி உண்டே, அதுவே கடவுள் என்று உணர்வோமாக.

ஆட்சியும் அரசனும் ஒன்றே. ஆட்சியில்லை என்று சாதிக்க முடியாது. உலகத்துக்கு ஒரு அரசன் இல்லை என்றும் சாதிக்க முடியாது. உலக நியதியைப் பற்றியும், உலக அரசனைப் பற்றியும் எனக்குத் தெரிந்திருப்பது மிகக் கொஞ்சமே. அப்படியிருக்க, அவன் இல்லை என்று சொல்வதில் என்ன அர்த்தம்? அரசன் இல்லையென்று நான் சொன்னால் அரசன் இல்லாமல் போவானா? ஆட்சி புரியும் அரசாங்கத்தை நான் இல்லையென்று சொன்னாலும் அது இருந்தே தான் இருக்கிறது. அதற்கு உட்பட்டே தான் வாழ்க்கை நடத்துகிறேன். அதைப் போலவே ஈசன் இல்லை அவனுடைய ஆட்சியும் இல்லை என்று நான் பேசினாலும், அந்த நியதியிலிருந்து நான் விடுபட முடியாது. ராஜ்யத்தில் நடைபெறும் ஆட்சியை வெளிப்படையாக ஒப்புக் கொண்டேனானால் அதற்குக் கீழ்ப்பட்டு வாழ்க்கை நடத்துவது சுகமாகிறது. அவ்வாறே தெய்வத்தின் ஆதிபத்யத்தை ஒப்புக் கொண்டு அதற்கு அடங்கியும் ஒடுங்கியும் நடந்து கொண்டேனானால், உயிர் வாழ்க்கையில் கஷ்டம் ஓரளவு குறைகிறது.

ஏதோ ஒரு மாதிரியாகத் தெரிந்ததும் தெரியாததுமாகக் காண்கிறேன். இந்த உலகத்தில் அனைத்தும் நிலையற்றவை. இன்றிருந்த வடிவம் நாளை இல்லை. எல்லாம் மாண்டும் மறைந்தும் போகின்றன. ஆயினும் அசையாததும் மாறுதல் இல்லாததுமான சக்தி ஒன்று இருந்தே வருகிறது. அதுவே அனைத்தையும் சேர்த்துப் பிரித்து விடுகிறது. இதை நான் காண்கிறேன். ஓடும் ஜலம் கடலில் போய் விழுகிற ஒரு நதியின் நிலையாக இருந்து வருகிறது. அது போலவே மாறியும் அழிந்தும் உண்டாகியும் வரும் பொருள்கள் அனைத்தும் ஒரு நிலையான பிரபஞ்சமாகத் தோன்றி வருகிறது. சிருஷ்டியும் சம்ஹாரமும், புனர் உத்பவமும் செய்து வருகிற பராசக்தி ஒன்று இருக்கிறது என்பதைக் காண்கிறேன். எங்கும் பரந்து நின்று ஆளும் அந்த சக்தியே கடவுள். இந்தப் புலன்களால் நான் காணும் பொருள்களிலிருந்தும் புலனுக்குப் புலனாகாத அந்த சக்தியே நிலையானது. ஆண்டவன் ஒருவனே மெய்ப் பொருள். (தொடரும்)

# கடவுள் சித்தம்

"கதவைத் திறவையா. உம்! என்னமோ வண்டியையே விலைக்கு வாங்கி விட்டாற் போலே, கதவை அடைத்துக் கொண்டு குறுக்கே நிற்கிறாயே! உம், கதவைத் திறவய்யா!" என்று ஒரு தள்ளுத் தள்ளினர் வந்த ஆசாமி. அடுத்த நிமிஷம் கதவின் பக்கத்தில் உட்கார்ந்திருந்த என் மடியின்மேல் ஜன்னல் வழியாகப் பெட்டியும் படுக்கையும் வந்து விழுந்தன. வலி தாங்க முடியாமல் என் உதட்டிலிருந்து "உஸ்ஸ" என்ற ஒலி பிறப்பதற்குள் பெட்டி படுக்கைகளின் சொந்தக்காரர் என் மடியின் மேல் மாடு போல் வந்து விழுந்து வைத்தார். அடுத்தபடியாக என்ன விபரீதம் நடக்குமோ என்று நினைப்பதற்குள் என் இடத்தில் பாதியைப் பறித்த ஆசாமி, "ஐயா, இந்த இடத்தைச் சற்றுப் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லிவிட்டுக் 'குப்'பென்று கதவை நோக்கி ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தார். எதற்காக இப்படிப் பாய்கிறார் என்று பார்த்தேன்.

குழந்தை, குட்டி, மூட்டை, முடிச்சுக்களுடன் ஒரு குடும்பம் வண்டிக்குள் ஏற முயன்று கொண்டிருந்தது. இந்த விபரீத மனிதன், "போங்கள், போங்கள். இந்த வண்டியில் இடமில்லை. இப்படி எல்லாரும் 'ஒரே வண்டியில் ஏறினல்! அடுத்த வண்டி காலியாக இருக்கிறது. அதில் ஏறுங்கள், போங்கள், போங்கள்" என்று அதட்டினர்.

அடுத்தடுத்து வந்த பிரயாணி அலேமோதல்கள் இந்தப் பாறை கல் மனத்தைச் சற்றும் அசைக்க முடியவில்லை. மேலும் வந்து கொண்டிருந்த ஜனத்திரள் இந்த அடாவடிக்காரனுடன் சண்டையிட்டு இடம் பெறுவதற்குள் வண்டி புறப்பட்டுவிடும் என்று ஊகித்துக் கொண்டு மற்றப் பெட்டிகளைத் தேடி ஓடிக் கொண்டிருந்தனர்.

சற்று முன்பு அடாவடிக் காரர், தான் வண்டிக்குள் ஏறுவதற்கு, "இது என்ன நீங்கள் விலைக்கு வாங்கின வண்டியா!" என்று கேட்டார். அதே ஆசாமியின் நாக்கு மறுகணமே தன் காரியம் முடிந்ததும் மற்றவர்களை வண்டிக்குள் விடாதபடி ஏசிப்பேசித் துரத்தி அடிப்பதைக் காணக் காண எனக்கு ஆத்திரம் குமுறிக் கொண்டிருந்தது. இந்த மனிதனுடன் வாயைக் கொடுத்தால் என்ன நேருமோ என்ற பயத்தால் உயிர் அற்ற பொம்மை போல் எதுவும் பேசாமல் இருந்து விட்டேன். ரயில் கிளம்பும் விநாடி நெருங்கி விட்டது. ஒருவராலும் இந்த வம்புக்கார மனிதனுக்குப் பின் வண்டிக்குள் நுழைய முடியவில்லை. இரண்டாவது மணியும் அடித்து விட்டது. ரயில், "இதோ கிளம்பி விட்டேன்" என்பதைப்போல் குரல் கொடுத்துவிட்டு "உம்." "உஸ்" என்று மூக்கி முனகிக் கொண்டு நகர ஆரம்பித்தது.

"அப்பாடா இவர்கள் தொல்லை இனி இல்லை" என்று சொல்லிக் கொண்டே கதவைக் காத்த பேர்வழி என் பக்கத்தில் வந்து உட்கார்ந்து ஒரு



விறுடி ஏதோ ஒரு பெரிய கோட்டையைப் பிடித்த வீரதீரச் செயல் செய்தது போல் எங்களை ஒரு முறை கம்பீரமாகப் பார்த்தார்.

"சம்போ மகாதேவா" என்று ஒரு குரல் வந்தது. கதவின் பக்கமாகத் திரும்பினோம். ஆமைவேகத்தில் நகர்ந்து கொண்டிருந்த வண்டியின் கதவை எவ்விதமோ ஒரு தொண்டு கிழவர் திறந்து கொண்டு வண்டிக்குள் ஏறிவிட்டார்.

"ஓய், ஓய், யாரையா நீர்! இறங்கு கீழே! இறங்கு. உம். ஓடுகிற வண்டியிலே யார் ஐயா ஏறச் சொன்னது! இறங்கு கீழே. ஏறும் போது விழுந்து காலேக் கையை உடைத்துக் கொண்டால் யார் உம்முடன் போலீஸ் ஸ்டேஷனுக்கு வருவது!" என்று என் பக்கத்தில் இருந்த புலி ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து வண்டியில் ஏறிய தொண்டு கிழவரைக் கீழே தள்ள முயன்றது.

"சம்போ மகாதேவா, சங்கரா!" என்று புதிய ஆசாமி சாவதானமாகக் கடவுள் நாமத்தை உச்சரித்துக்கொண்டே எவ்விதமோ வண்டிக்குள் நுழைந்து விட்டார்.

"சம்போவாவது! மகாதேவனாவது! சோம்பேறிப் பயல் உடலே உழைத்து வேலே செய்யாமல் உலக்கை மாதிரி தூங்கி விட்டு, பிச்சை எடுக்கக் கிளம்பி விட்டான். காவி வஸ்திரம், கமண்டலம் எல்லாம் ஊரை ஏமாற்றவா! இறங்கையா, இறங்கு" என்று வந்த கிழவரை வெளியில் தள்ளப் படாதபாடு பட்டார் நம் புலி. அதற்குள் வண்டி வேகமாகப் போகவே தம் எண்ணம் நிறைவேறாது என்று அறிந்து தன் இடத்தில் வந்து உட்கார்ந்தார். அவர் முகத்தில் நெருப்புப் பொறிகள் பறந்தன.

கிழவருக்கு வயது எண்பதுகூட இருக்கும். உடல் முழுவதும் சுருக்கம் விழுந்த சதை, எலும்புக் கூட்டின் தோற்றத்தைக் காட்டியபடி மூடிக் கொண்டிருந்தது. முகத்தில் மண்டை ஓட்டுக்கும் சதைக்கும் இடையே சதை இருப்பதாகத் தெரியவே யில்லே. மஞ்சள் பாய்ந்த பட்டுப் போன்ற தாடி மயிர் நீண்டு தொங்கியது. சோளக் கொல்லேப் பொம்மைக்குப் போட்ட சட்டை போல் காவிச் சட்டை ஒன்று இவர் உடலே மூடி வந்தது. குளிரில் உடல் நடுங்குவது போல் இவர் கைகள் தாங்கி வந்த சாம்பிராணிப் புகை போடும் தூபக் கம்பம் உதறிக் கொண்டிருந்தது. உலகத்தைத் துறந்து ஆயுளின் கடைசியை அடைந்து ஆவியையும் துறக்க ஆயத்தமான தொண்டு கிழப் பண்டாரத்தின் தோற்றத்தை அது எடுத்துக் காட்டியது.



"என்னையா முறைத்துப் பார்க்கிறீர்! ஊரை ஏமாற்றுவது போல் என்னை ஏமாற்றலாம் என்று பார்க்கிறீரா! உம். டிக்கட்டு வாங்கி இருக்கிறீரா! எங்கே எடும்" என்று என் பக்கத்துப் புலி உறுமியது.

கிழவர் வாய் "சம்போ மகாதேவா! சங்கரா!" என்று உரத்த குரலில் கூறி விட்டு, "சிவ,



சிவ, சிவ" என்று முணுமுணுத்துக் கொண்டிருந்தது. கிழவர் முகத்தில் கோபக் குறியை எதிர்பார்த்தேன். ருத்ர தாண்டவத்திற்குப் பதில் ஆனந்த தாண்டவம் ஆடியது.

இதைக் கண்டதும் என் பக்கத்தவனுக்குக் கோபம் தலைக்கேறியது. வெடுக்கென்று தன் இடத்தைவிட்டு எழுந்து பண்டாரக் கிழவரை நெருக்கினான். "எங்கே டிக்கட்! எடு டிக்கட்டை. இல்லா விட்டால் வண்டியை விட்டுக் கீழே இறங்கு" என்று ஒரு அதட்டல் போட்டான்.

"சம்போ மகாதேவா. என்னிடம் செப்பால் அடித்த காசுகூடக் கிடையாது. டிக்கட்டுக்கு நான் எங்கே போவது!"

"காசு கொடுத்து டிக்கட் வாங்கியவர்களுக்கே வண்டியில் இடமில்லை என்றால் 'ஓசி' யாத்திரை வேறு! பணமில்லையாம் பணம். காவி வஸ்திரத்தைக் கிழித்தால் கால் கோடி ரூபாய் இருக்கும். உடுப்பைப் பார் உடுப்பை. இப்படி வேஷம் போட்டுப் போட்டுத் தான் ஊர் குட்டிச்சுவர் ஆகி விட்டது. உங்களைப் போன்ற தடியர்களைக் காசு இல்லாமல் ஏற்றிச் செல்ல நாங்கள் இரட்டிப்புச் சார்ஜு கொடுக்க வேண்டியிருக்கிறது. இறங்கு கீழே. காசில்லாமல் உம்மை யார் ஐயா ரயிலில் ஏறச் சொன்னது!" என்று கத்தினார்.

ஓடுகிற நாயைக் கண்டால் யாருக்குமே இளப்பம் ஏற்படுவது இயல்புதானே.

"சம்போ மகாதேவா! ஐயா, கோபித்துக் கொள்ளாதீர்கள். சிற்றம்பலத்தானைத் தரிசிக்கப் போகிறேன். சிதம்பரத்தில் நாளை கும்பாபிஷேகம். அறுபதுவருஷங்களுக்குள் இந்தப் பாப உடல் எமபட்டணத்துக்கு டிக்கட் வாங்கி விடும். அதற்குள் ஐயனை ஒரு முறை தரிசிக்கலாம் என்று போகிறேன். சம்போ மகாதேவா. சிவ சிவ சிவ" என்று தன் நீண்ட தாடியை உருவிக் கொண்டு பெருமூச்சு விட்டார்.

"ஆமாம், ஆமாம்! அடுத்த கும்பாபிஷேகத்துக்கு வேறு இருக்க வேண்டுமா! அதற்குள் சிவனை நேரில் தான் காணப் போகிறீரே, இந்த பூலோகக் காட்சி எதற்கு உமக்கு! போதும், போதும். நீர் இல்லாமல் கும்பாபிஷேகம் நடக்காதோ!"

"சம்போ மகாதேவா, சிவ, சிவ..." என்று முணு முணுத்துக் கொண்டே கிழவர் எல்லாம் "கடவுள் சித்தம்" என்று கூறி முடித்தார். அவர் முகத்தில் மற்றோர் ஆனந்தக் குறி பரவி மறைந்தது.

"உடையைப் போட்டு உலகத்தை ஏமாற்றுகிற பேர்வழிகள் நம் நாட்டில் இருக்கும் வரை நம் நாடு எங்கே முன்னுக்கு வரப்போகிறது! வேஷத்தைப் பார் வேஷம், பெரிய மனிதன் போல் வேஷம். பேசுவது பொய். செய்வது திருட்டுச் செயல்...ஒரு டிக்கட் வாங்க வழியில்லையாம். யாரையா ஏமாத்தப் பார்க்கிறே!"

இதற்குள் வண்டி திடீர் என்று நிற்க ஆரம்பித்தது. 'எந்த ஸ்டேஷன் வந்து விட்டது!' என்று ஆவலுடன் எல்லோருடைய கவனமும் ஜன்னல் பக்கம் திரும்பியது. வண்டிக்கு வெளியே ஒரே கும்மிருட்டு. ஸ்டேஷன் எதுவும் தென்படவில்லை. நடுவழியில் தொடர் வண்டி எக்காரணத்தாலோ நின்று விட்டது.

இதுதான் தருணம் என்று என் பக்கத்துப் பேர்வழி தன் இடத்தை விட்டு எழுந்து, "வண்டி நிற்கிறது, கீழே இறங்கையா. டிக்கட் இல்லாத பேர்வழிகள் வண்டியில் வரக் கூடாது. உம் இறங்கு, இறங்கு சீக்கிரம்" என்று கிழவரைப் பிடித்துத் தள்ளினான்.

"சம்போ மகாதேவா. ஐயா, என்னை ஏன் ஐயா தள்ளுகிறீர்! நாளைக் காலை சிதம்பர நாதனைத் தரிசிக்க வேண்டும். ஐயா, உங்களுக்குக் கோடிப் புண்ணியம் உண்டு" என்று மன்றாடினார் கிழவர்.

"இந்தப் பத்திரம் என்னிடம் செல்லாது. நீர் வந்து தரிசிக்க வில்லை என்று தான் சிதம்பரநாதன் அழுகிறாராக்கும்" என்று கூறிக் கிழவரை இறக்கிவிட்டு, "எல்லாம் கடவுள் சித்தம். சிதம்பரநாதனிடம் சொல்லி உம்மைக் கும்பாபிஷேகத்துக்குப் புஷ்பக விமானத்தில் ஏற்றி வரச் சொல்லு" என்று படார் என்று கதவைச் சாத்திவிட்டான் படுபாவி.

கிழவர் "ஐயா, ஐயா! உமக்குப் புண்ணியம் உண்டு. ஐயா என்னை வண்டியில் ஏறவிடும்" என்று கெஞ்சினார்.

"புண்ணியமாவது! பாவமாவது! எல்லாம் நடந்து வாரும். கடவுள் கொடுத்த கால்தான் இருக்கிறதே! அவ்வளவு பக்தி சிரத்தை இருக்கிறவர்கள் ஓசி டிக்கட்டில் வருவானேன்! முன்பே கிளம்பி நடந்து வருகிறதுதானே!" என்று ஒரு குட்டிப் பிரசங்கம் செய்தான் அந்தப் பேர்வழி. இதற்குள் வண்டி கிளம்பி விட்டது. "சம்போ மகாதேவா" என்ற

குரல் கும்பிருட்டிலிருந்து கிளம்பியது. அடுத்த விநாடி ரயில் சக்கரங்களின் ஓசை காதைத் துளைக்க ஆரம்பித்தது.

சில நிமிஷங்களில் வண்டி ஒரு ஸ்டேஷனை வந்து அடைந்தது. மேலும் சில நிமிஷங்களில் அந்த ஸ்டேஷனை விட்டுக் கிளம்பி விட்டது. வண்டி கிளம்பும்பொழுது ஒரு டிக்கட் பரிசோதகர் எங்கள் பெட்டியில் ஏறி வழக்கம்போல் எல்லோருடைய டிக்கட்டுகளையும் வாங்கிப் பரிசோதித்தார். கடைசியாக நாங்கள் இருந்த பக்கத்தை வந்தடைந்தார். அவர் அவர்கள் டிக்கட்டுகளை எடுத்துக் கொண்டு பரிசோதனைக்கு ஆயத்தமானோம்.

என் பக்கத்தில் இருந்த பேர்வழி தன் சட்டைப் பைகளைத் துழாவத் துவங்கினார். "ஐயோ! என் பர்ஸைக் காணவில்லையே, அதில் தானே டிக்கட்டை வைத்திருந்தேன். என்ன செய்வேன்! அந்தப் பக்காத் திருடன் சாமியார் வேஷத்தில் வந்து, என் பர்ஸை அடித்துக் கொண்டு போய்விட்டானே, ஐயோ!" என்று கூக்குரலிட்டான்.

"என்ன ஐயா கூச்சல் போடறே! ஊரை ஏமாத்தறாப்போல என்னை ஏமாத்தலாம் என்று பார்க்கிறீரா! உம் டிக்கட் எங்கே! எடும்."



"ஐயோ! கடவுளே நான் உண்மையாகவே டிக்கட் வாங்கினேன். அந்தப் பண்டாரம் டிக்கட்டையும் பர்ஸையும் அடித்துக் கொண்டு போய் விட்டான். இது உண்மை. சத்தியம்" என்றான் பழைய புலி.

"எங்கே டிக்கட்டு! எடு டிக்கட்டை. டிக்கட் இல்லாமல் ஏன் ஐயா வண்டியில் வர வேண்டும்! டிக்கட் இல்லை யென்றால் அதற்குள்ள பணத்தையாவது எடு."

"ஐயா, என்னிடம் செப்பால் அடித்த காசு கூட இல்லாமல் அடித்துக் கொண்டு போய் விட்டான். டிக்கட்டும் கிடையாதே. அந்த பர்ஸிலேதான் டிக்கட்டையும் பணத்தையும் வைத்திருந்தேன்" என்று புலிபோல் சற்று முன்பு பாய்ந்த பேர்வழி பூனைபோல் பதுங்கிப் புலம்ப ஆரம்பித்தான், என்ன செய்வதென்று வழி அறியாமல் தவியாய்த் தவித்தான்.

"காசு கொடுத்து டிக்கட்டு வாங்கியவர்களுக்கே வண்டியில் இடமில்லை என்றால், ஓசி யாத்திரை வேறு! பணமில்லையாம் பணம்! உடுப்பைப் பார், உடுப்பை. இப்படி வேஷம் போட்டுத்தான் ஊர் குட்டிச்சுவர் ஆகிவிட்டது. உங்களைப் போன்ற தடியர்களைக் காசு இல்லாமல் ஏற்றிச் செல்ல மற்றவர்கள் இரட்டிப்புக் கட்டணம் கொடுக்க வேண்டி இருக்கிறது. காசில்லாமல் உம்மை யார் ஐயா ரெயிலில் ஏறச் சொன்னது!"

"ஐயோ, கடவுளே! கோபித்துக் கொள்ளாதீர்கள். சிதம்பரத்துக்குக் கும்பாபிஷேகத்துக்காக டிக்கட் வாங்கினேன்."

"ஆமாம், ஆமாம்! கும்பாபிஷேகத்துக்குப் போய் ஜேப்படி அடித்து எத்தனை அப்பாவிகளை மோசடி செய்யத் திட்டம் போட்டிருந்தாய்! போறாத காலம் நான் இப்பொழுது குறுக்கிட்டு விட்டேனாக்கும்......"

நம் புலியின் முகத்தில் பீதிக்களை பரவியது. கைகளைப் பிசைந்து கொண்டே, "ஐயோ! என்ன செய்வேன். கடவுளே! நான் சொல்வது உண்மை; டிக்கட்டு வாங்கினேன். இவர்களை வேண்டுமானாலும் கேளுங்கள்" என்று மற்றப் பிரயாணிகளைப் பரிதாபகரமாகப் பார்த்தார். எக்காரணத்தாலோ ஒருவரும் இவருக்குச் சிபார்சுக்கு வரவில்லை.

"உடையைப் போட்டு உலகத்தை ஏமாத்துகிற பேர்வழிகள் நம் நாட்டில் இருக்கும் வரை நம் நாடு முன்னுக்கு வராது. உடையைப் பார், உடையை! பெரிய மனிதர் போல் வேஷம். பேசுவது பொய். செய்வது திருட்டுச் செயல். ஒரு டிக்கட் வாங்க வழியில்லையாம். யாரை ஐயா ஏமாத்தப் பார்க்கிறே!"

இதற்குள் வண்டி அடுத்த ஸ்டேஷனில் வந்து நின்றது. டிக்கட் பரிசோதகர் அப்புலியைப் பலவந்தமாகக் கீழே இறக்கித் தாமும் அவனுடன் இறங்கினார். தின்பண்டத்தை ஈக்கள் மொய்த்துக் கொள்வது போல் இவரைச் சுற்றி ஒரு கூட்டம் கூடி விட்டது. கூட்டத்தார் அந்தப் புலியைப் பலவிதமாக ஏளனமாகப் பேசினர். "பாருடா, உடையை", "ஜேப்படிக்காரன்", "இப்படித்தான் உடை போட்டு ஊரை ஏமாற்றுகிறார்கள்" என்று நாலா புறத்திலிருக்கும் ஜனக் கூட்டத்திலிருந்து முணுமுணுப்பு கிளம்பிக் கொண்டிருந்தது. டிக்கட் பரிசோதகர் முன் செல்ல மகாஜனங்கள் புடைசூழ நம் புலி, அழைத்துச் செல்லப்பட்டார். ரயிலும் இந்த இதயக் குமுறல்களைச் சிறிதும் பொருட்படுத்தாமல் மேற்கொண்டு தன் பொறியைத் தீர்க்கப் புறப்பட்டு விட்டது.

★

மறு நாள் என் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு சிதம்பரநாதனைத் தரிசிக்கக் கோவிலுக்குச் சென்றேன். ஊர் முழுவதும் ஒரே ஜனத்திரள். கண்ணுக்கு எட்டிய தூரம் ஒரே தலைமயம், நெற்றியில் திருநீறு. எல்லோர் உதட்டிலும் "சிவ" நாமம்.

கோவிலை நெருங்க நெருங்க ஜன நெருக்கம் மிகுதி அடைந்து கொண்டு வந்தது. கோபுரத்தின் மேல் இருந்த கலசத்துக்கு அபிஷேகம் ஆரம்பமாயிற்று.

அதே விநாடி கலசத்தின் அருகில் தூபக் கம்பம் ஒன்றிலிருந்து ஒரு விநாடி ஜோதி ஒன்று பளிச்சிட்டது. அந்த ஜோதியில் கலசத்தின் தங்கத் தகடுகள் ஜகத் ஜோதியாக ஜொலித்தன. சாம்பிராணிப் புகை கம்பத்தை பக்தி சிரத்தையுடன் ஏந்திக் கொண்டு நின்ற பண்டாரத்தின் முகத்திலும் ஓர் பேரின்பப் புன்னகை பரவி மறைந்தது.

என்ன விந்தை! என்ன அதிசயம்! ரயிலில் வழியில் இறக்கிவிடப்பட்ட அதே பண்டாரக் கிழவர் தூபக் கம்பத்தைத் தாங்கி, கலசத்தின் பக்கத்தில் நிற்பதைக் கண்டேன். இவர் எப்

படிச் சிதம்பரத்தை அடைந்திருக்க முடியும்! அதுவும் கும்பாபிஷேகம் நடக்கும் கோபுர உச்சியை இந்தத் தொண்டு கிழவர் எவ்விதம் அடைந்தார்! அதுமட்டுமா! கும்பாபிஷேகம் நடக்கப் போகும் கலசத்துக்குத் தூபதீபம் போடும் பாக்கியம் இவருக்கு எப்படிக் கிடைத்தது! இக் கேள்விகள் என் மனத்தில் பலவிதமான எண்ணப் புயல்களைக் கிளப்பி விட்டன. நடு நடுவே 'வேறு ஆளாக இருக்கலாம். நடு வழியில் நம் கண் முன் இறங்கி விடப்பட்ட பேர்வழி சிதம்பரத்தையே அடைந்திருக்க முடியப் போவதில்லை. இவர் எவ்விதம் கோபுரத்தின் உச்சியை அடைந்திருக்கப் போகிறார்!' என்ற ஒரு சந்தேகக் கேள்வி கூத்தாடியது.

இந்தப் புதிரை எவ்விதத்திலாவது புரிந்து கொள்வது என்று திட மனத்துடன் கும்பாபிஷேகம் நடக்கும் கோபுரத்தை முண்டி அடித்துக் கொண்டு அடைந்தேன். கோபுரத்தின் உச்சியை அடையக் கட்டப்பட்ட படிகளின் அடியை அடைந்து மணிக்கணக்கில் தவம் புரிவதுபோல் அங்கே நின்று வந்தேன். என் தவம் வீணாகவில்லை. கும்பாபிஷேகம் முடிந்து கூட்டம் கலைந்தது. பண்டாரம் கீழே இறங்குவது எனக்குத் தென்பட்டதும், என் இருதயக் குதிரை ஓட்டம் ஓட ஆரம்பித்தது. கிழவரின் தோற்றம் நெருங்க நெருங்க ரயிலில் என்னுடன் வந்த அதே தொண்டு கிழவர் தான் என்று ஊர்ஜிதமாயிற்று.

அவர் என்னை நெருங்கியதும் என்னையும் அறியாமல் என் கைகள் கூப்பின. என் உள்ளம் "சுவாமி" என்ற ஒலியை எழுப்பியது.

கிழவர் ஓர் இரண்டு விநாடிகள் என்னுடைய முகத்தை உற்று நோக்கினார். அவர் முகத்தில் சந்தேகக் குறிகள் படர்ந்து மறைந்தன.

"சுவாமி! நேற்று ராத்திரி ரயிலில்......" என்று இழுத்தேன்.

"ஓம், சம்போ மகாதேவா.........எல்லாம் கடவுள் சித்தம்" என்றார். அவர் உதடுகள் சிவநாமத்தை ஜபித்துக் கொண்டிருந்தன.

"சுவாமி, தாங்கள் எப்படி இங்கு வந்து சேர்ந்தீர்கள்!" என்று மீண்டும் கேட்டேன்.

"ஆ! அது இருக்கட்டும். உங்களுடன் வந்த ஐயா எங்கே தங்கி இருக்கிறார் தெரியுமா! இதோ!" என்று தன் சட்டைப்பையைத் துளாவி ஒரு மணிபர்ஸை என்னிடம் கொடுத்து, "இதோ அவர் பர்ஸ். தயவு செய்து இதை எப்படியாவது அவரிடம் சேர்ப்பித்து விடுங்கள்!" என்று மன்றாடினார்.

எனக்கு மூச்சுத் திணற ஆரம்பித்தது. இவரிடம் பர்ஸ் எப்படி வந்தது! பர்ஸை இவர் ஜேபடி அடித்தது உண்மைதானா! பர்ஸை ஏன் திருப்பிக் கொடுக்க வேண்டும்! நான் பார்த்து விட்டதால் நல்லவன் போல் திருப்பிக் கொடுத்து விட்டால் தப்பித்துக் கொள்ளலாம் என்று எண்ணி இவ்விதம் பண்டாரம் செய்திருக்கலாமோ!' என்ற பல வேறு எண்ணங்கள் என் மனத்தில் தோன்றின. குட்டை நீரைக் குழப்பியபின் குழம்பாவது போல் என் மனம் குழம்பியது. ஒருவழியாகச் சமாளித்துக் கொண்டு "உங்களிடம் இந்தப் பர்ஸ் எப்படி வந்தது!" என்று சந்தேகத்துடன் கேட்டு விட்டேன்.

"பாவம்! அந்த ஐயா என்னைக் கீழே தள்ளிக் குனியும்போது அவர் பையில் இருந்த பர்ஸ் கீழே விழுந்து விட்டதுபோலிருக்கிறது. வண்டி போனதும்தான் நான் இதைப் பார்த்தேன். முன்பே பார்த்திருந்தால் அப்பொழுதே அவரிடம் இதைச் சேர்த்திருப்பேன்" என்றார்.

பர்ஸைத் திறந்து பார்த்தேன். ஒன்பது பத்து ரூபாய் நோட்டுக்களும் சில சில்லறை நோட்டுக்களும் கண்டேன். என்னைப் பிரமிக்கும் வகையில் டிக்கட்டும் அதிலிருப்பது என் கண்ணில் பட்டது.

"டிக்கட்டை நீங்கள் உபயோகிக்கவில்லையா!" என்று ஆச்சரியத்துடன் கேட்டேன்.

"சிவ, சிவ, காசைக் கையால்கூடத் தொடுவதில்லை. அந்தப் பர்ஸை நான் எதற்காகத் திறக்கவேண்டும்! டிக்கட் இங்கே இருக்கும் பொழுது அவர் எப்படிப் பிரயாணம் செய்தார்! அவரைப் பார்த்து எப்படியாவது இந்தப் பர்ஸையும் பணத்தையும் சேர்ப்பித்து விட்டால் உங்களுக்குக் கோடிப் புண்ணியம் உண்டு. சம்போ மகாதேவா" என்று ஆசீர்வதிப்பது போல் தம் கையை அசைத்தார்.

ஒருவித விம்மல் என் நெஞ்சை அடைத்தது. என் கண்களில் நீர் துளித்து என் பார்வையை மங்கச் செய்தது. கற்சிலைபோல் செயலற்று பர்ஸும் கையுமாகச் சில நிமிஷங்கள் நின்ற இடத்தில் நின்றுவிட்டேன். என் கண்களைத் துடைத்துக்கொண்டு நான் பார்த்தபொழுது பண்டாரக்கிழவரை அந்த இடத்தில் காணோம்.

பண்டாரக் கிழவரின் புன்னகை பூத்த முகத் தோற்றம் என் மனக் கண்முன் தோன்றி மறைந்தது. அவர் உதடுகள் "கடவுள் சித்தம்! சம்போ மகாதேவா சிவ, சிவ, சிவ......" என்று முணு முணுப்பதுபோல் என் மனக் கண்களுக்கு ஒரு தோற்றம் அளித்தது.

அட்டைப்பட விளக்கம்

## கயிற்று நடனம்

உற்றார் உறவினரின் ஆதரவும் கட்டுப்பாடும் இல்லாமல், சமூகத்தின் மத்தியில் கலை வாழ்க்கை வாழ்வது என்றால் அது கயிற்றிலே நடனம் ஆடுகிறது போலத்தான் என்று சந்திரிகாவுக்குத் தெரிகிறது. மனித சமூகம் அனைத்தும் நட்சத்திரங்களாக நின்று கண் சிமிட்டுவது போலவும், தான் திருச்சியை விட்டுப் புறப்பட்டு வந்த நிமிஷத்திலிருந்து உலகம் மேகங்கள் சூழ்ந்த வானமாக நிற்பது போலவும் தெரிகிறது. இதையே அவன் கனவிலே காணுகிறான். 'ரவி சந்திரிகா'வில் வரும் அந்தக் கனவை இந்த இதழின் அட்டையிலே ஸுவர்ண ஓவியமாகச் சித்திரிக்கிறார் நமது ஓவியர் மணியம்.

மூலிகைகளாலான இருமல் மருந்து

# லிக்குப்ரூட்டா

## ஜலதோஷம், இருமல் இவைகளை சீக்கிரம் குணப்படுத்துகிறது

மூலிகைகளிலிருந்து பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்ட லிக்குப்ரூட்டா, இருமல், ஜலதோஷம், மார்சளி, கக்குவாய் இருமல், ஆஸ்த்மா, முதலிய வியாதிகளுக்கு ஏற்ற இயற்கை மருந்து. அதன் ஆறுதலளிக்கும் ஆவி சீக்கிரம் தொண்டையிலும், சுவாசக் கோசத்திலும் புகுந்து வீங்கி இருக்கும் சுவாசக் குழாய்களுக்கு உடனே குணமளிக்கிறது.




**இலவசம்!** நோயுற்றிருக்கும் தருவாயில் உபயோகமாயிருக்கும் இப்புத்தகத்தைப் பெறுங்கள்.

கூப்பனைப் பூர்த்திசெய்து அனுப்பவும் :-

டி. டி. கிருஷ்ணமாசாரி அண்டு கோ.,
தபால் பெட்டி நெ. 200, 331-333, தம்பு செட்டி தெரு, மதராஸ்

பெயர் ..............................

விலாசம் ..............................

MG/LQ. 11-X28 TM

# புது உலகம் பார்த்தோம்

இதோ நம் கண்முன்னால் நம் காலத்தில் ஒரு அற்புதம் நடைபெற்றிருக்கிறது.

இந்திய சரித்திரத்தில் இது வரையில் நடக்காத அதிசயமான, மகத்தான அற்புதம்.

ஏழை-பணக்காரன், முதலாளி-தொழிலாளி, எஜமான்-அடிமை என்ற வித்தியாசமில்லாத சோஷலிஸ சமுதாய அடிப்படையில் புது நகரமே, இல்லை, புது உலகமே சிருஷ்டிக்கப் பட்டிருக்கிறது.

அப்படிச் சிருஷ்டிக்கப்பட்டிருக்கும் புது உலகம், அதை மூர்க்கத்தனமாகத் தாக்கிய, தாக்குகிற பழைய உலகத்தின் மீது அதிசயமான வெற்றி கொண்டு வருகிறது.

கண் உள்ளவர்கள் எல்லாம் இதைப் பார்க்கலாம்; கண்களைத் திறந்து நோக்குவோர் எல்லாரும் பார்க்கலாம்; பார்த்து ஆனந்தம் அடையலாம்; களிக் கூத்தும் ஆடலாம்.

கண் இருக்கும் சிலர் இந்த அற்புதத்தைப் பார்க்க மறுக்கிறார்கள். கண்ணை இறுக மூடிக் கொண்டு "சுதந்திரம் பெற்றவுடன் இந்தியா என்னத்தைப் பிரமாதமாகச் சாதித்து விட்டது!" என்று வாய் கூசாமல் கேட்கிறார்கள். அவர்களுடைய துரதிர்ஷ்டம் அது. கண் இருக்கும் குருடர்களாக, வேகமாக வளர்ந்துவரும் முன்னேற்றத்தைப் புது உலக அதிசயத்தை அனுபவிக்கத் தெரியாதவர்களாக இருக்கிறார்கள் என்றுதான் சொல்ல வேண்டும்.

கிழக்குப் பஞ்சாபின் புதிய தலைநகரமான, இல்லை—புது உலகமான சண்டிகர் நகரைப் பற்றித்தான் சொல்கிறேன்.

சண்டிகர் நகரம் இந்தியாவில், அதிலும் வட இந்தியாவில் பழைய ராஜ வம்சம், பழைய பிரபுக்கள் வம்சம், பழைய சமுதாய வாழ்வு முறை, பழைய அரசாங்க முறை, பழைய தரித்திரம், பழைய அடிமைத்தனம், பழைய மூடத்தனம் எல்லாவற்றையும் அடியோடு அழித்து விட்டு நிமிர்ந்து நிற்கிறது.

பொது உடைமை பொது உடைமை என்று சொல்லிக் கொண்டு எல்லாருக்கும் சரிசமமாகப் பிரித்துக் கொடுப்பது என்ற வாழ்க்கைக்கு ஒவ்வாத வறட்டுக் கொள்கையை அங்கு அவர்கள் கடைப்பிடிக்கவில்லை. இரண்டு இட்லி சாப்பிடுகிறவனுக்கு இரண்டு இட்லி. எட்டு இட்லி சாப்பிடுகிறவனுக்கு எட்டு இட்லி. அதாவது அவனவன் சக்திக்கு ஏற்றவண்ணம் சகல சௌகரியங்களுடன் வாழ்வதற்கு வசதியாக அமைக்கப்பட்ட அருமையான வீடுகள் நிறைந்த புது உலகம். உண்மையான சோஷலிஸ வாழ்க்கைக்கு அடிகோலியிருக்கும் அபூர்வ நகரம். எதிர்கால இந்தியாவின் நம்பிக்கையை உதயமாக்கியிருக்கும் சண்டிகர் நகரம்.

சண்டிகர் நகரைப் பார்க்கும் போது, அங்கு அமைத்திருக்கும் வீடுகளின் அதிசயமான வியக்கத்தக்க அமைப்பை உற்றுநோக்கும் போது அதற்கு வித்திட்ட தலைவர்களைப் பற்றி நினைக்க வேண்டியிருக்கிறது. ஏற்கனவே வட இந்தியாவில் சாதித்திருக்கும் சாதனைகளைப் பற்றி, அதன் அருமை பெருமைகளைப் பற்றிப் பறையறைந்து கொண்டிருப்பவர்களுக்குச் சண்டிகர் நகரைப் பார்த்தபோது பிரமாதப் பெருமையாக இருக்கிறது! அந்தப் பெருமையில் அவர்கள் தோள்கள் பூரித்து மேகமண்டலம் வரையில் உயர்ந்திருக்கின்றன. அவர்களின் பூரித்து உயர்ந்த தோள்கள் சண்டிகரின் உயர் நீதி மன்றத்தைவிட உயர்ந்து அதன் பெருமையைக் குறைத்து விடுமோ என்று கவலையாக இருக்கிறது.

மக்களின் தலைவர்களும், சர்க்காரும், சர்க்கார் அதிகாரிகளும் உண்மையிலேயே மக்களுக்கும் தேசத்துக்கும் தொண்டாற்ற வேண்டியது என்று தீர்மானித்து விட்டார்களானால், தீர்மானித்து அதைச் சரியான முறையிலும் உபயோகப்படுத்தத் தெரிந்து கொண்டார்களானால், அப்புறம் அவர்களால் சாதிக்க முடியாத காரியம் ஒன்றுமே இல்லை.

சுதந்திரம் பெற்றுள்ள இந்தியாவை மகோன்னத நிலைமைக்குக் கொண்டு வர முடியும். தரித்திரம் பிடுங்கித் தின்னும் நாட்டைச்

# வட இந்திய யாத்திரை 22

செல்வம் கொழிக்கும் நாடாகச் செய்ய முடியும்.

கோணலும் மாணலும் காற்றோட்டமும் இல்லாத கலை உணர்ச்சியற்ற நகரத்தைப் புது உலகமாகவே மாற்றிவிட முடியும்.

▶ அரசாங்கத்தின் அதிசய சக்தி செய்யக் கூடிய இந்த மகத்தான அற்புதத்தை யெல்லாம் வட இந்திய யாத்திரையில் அங்கு நிகழ்ந்து வரும் ஒவ்வொரு சாதனையிலும் கண்டேன். சண்டிகர் நகரத்தில் இதை நேருக்கு நேர் பார்த்து அநுபவிக்க முடிந்தது.

## சண்டிகர் நகரம்

இந்தியாவில், ஏன்! உலகத்திலேயே பல நகரங்கள் எந்த விதமான முன்யோசனையுமில்லாமல் ஏதோ அது அது போக்குக்கு ஏற்ப அமைந்த நகரங்கள்தான். தன் இஷ்டம் போல எப்படியோ ஒரு தோற்றத்தில் வளர்ந்து



வந்தவைதான். ஆனால் கிழக்குப் பஞ்சாபின் தலைநகரம் அப்படி அமைந்ததல்ல. தலை நகரம் நிர்மாணிப்பதற்கு என்றே திட்டம் போட்டு உலகத்தில் உள்ள பல நகர அமைப்பு நிபுணர்களை எல்லாம் அழைத்துத் தீர யோசித்து நிர்மாணித்த அபூர்வ நகரம்.

பஞ்சாபின் மத்திய பாகத்தில் அமைந்திருக்கும் அழகான நகரம், அம்பாலாவிலிருந்து கால்காவுக்குச் செல்லும் சாலைக்கு ஐந்து மைல் தென்மேற்கே பதினைந்து சதுர மைல் விஸ்திரணத்தில் அமைந்திருக்கிறது. இந்த நகரத்தை ஒட்டினாற்போலக் காஷ்மீரம் திபேத் சாலை போகிறது. இவ்வளவு சௌகரியங்களுடன் கூடிய இடத்தில் புதிய நகரை அமைத்திருக்கிறார்கள். இத்துடன் தில்லியிலிருந்து இந்தப் புதிய நகருக்குப் போக்குவரத்தும் இருக்கிறது.

இந்த நகரத்துக்கு முதலில் "நேரு நகரம்" என்றுதான் பெயரிடுவதற்கு உத்தேசித்திருந்தார்கள். தம்முடைய பெயரை அந்த நகருக்கு வைப்பதை நேரு அடியோடு மறுத்துவிட்டார். அதனால் அந்த நகருக்கு ஐந்தாறு மைல்களுக்கு அப்பால் உள்ள மலையில் கோயில் கொண்டிருக்கும் "சண்டிகா" என்ற தேவியின் பெயரையே புதிய தலை நகருக்கு வைத்தார்கள். தேவியின் புனிதமான நாமத்தை, சண்டிகர் என்ற பெயரை எல்லாரும் ஏற்றுக்கொள்வதில் என்ன தடையிருக்கப் போகிறது!

ஆயிரத்துத்தொள்ளாயிரத்து ஐம்பத்து மூன்றாம் ஆண்டு அக்டோபர் மாதம் நமது ஜனாதிபதி ராஜேந்திர பிரஸாத் இந்தப் புதிய நகரத்துக்கு "சண்டிகர்" என்று நாமகரணம் சூட்டி நகரைத் திறந்துவைத்த வைபவத்தை நேயர்கள் அறிந்திருப்பார்கள்.

நகரம் முப்பது பிரிவுகளாகப் பிரித்து அமைக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பிரிவையும் 'செக்டர்' என்று சொல்லுகிறார்கள். இருபத்து நான்கு செக்டர்களில் மக்கள் குடியிருப்பதற்கு வசதியான பல்வேறு மாதிரியில் வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன. ஆறு செக்டர்களில் சர்க்கார் காரியாலயங்களும், கல்லூரியும், தொழிற் கூடங்களும், கடை வீதிகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

மிகவும் விசாலமான ஏழு பெரிய சாலைகள் நகரில் குறுக்கும் நெடுக்குமாகப் போகின்றன. ஒவ்வொரு செக்டருக்கும் மத்தியில் பச்சைப் பசேல் என்ற புல்வெளிகள். இரண்டாயிரத்து ஐந்நூறு ஏக்கர் சச்சதுரமான விஸ்தீரணத்தில் சுமார் இரண்டாயிரம் பேர் வசிப்பதற்கு வசதியான வீடுகள் கட்டப்பட்டிருக்கும் இடம்தான் ஒரு செக்டர். ஒவ்வொரு செக்டரும் சுய தேவைப் பூர்த்தியுள்ளது. அந்தந்த செக்டரில் இருக்கும் மக்களுக்கு வேண்டிய எல்லாவிதமான சௌகரியங்களும் அதில் இருக்கின்றன.

மோட்டார் கார்கள் செல்லும் சாலைகளைத் தாண்டிச் செல்லாமலே குழந்தைகள் பள்ளிக்கூடத்துக்குச் செல்லும்படி சாலைகளும் பள்ளிக்கூடங்களும் அமைக்கப்பட்டிருக்கும் அதிசயத்தைப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை. மோட்டார்கள் போன்ற வாகனங்களால் ஏற்படும் அபாயங்கள் சண்டிகர் நகருக்



குள் தலைகாட்ட முடியாது. சண்டிகர் நகரத்துச் சாலைகள் நகர நிர்மாணத்தின் சிறப்புக்கு ஒரு சான்றாக விளங்குகிறது.

சென்னை மௌண்ட்ரோடு சாலையைப் போல் இரண்டு பங்கு அகலமுடைய சாலைகள். சாலையின் மத்தியில் பலவித மலர் குலுங்கும் புஷ்பச் செடிகள், புல் மேடைகள். அதன் ஒரு புறத்தில் மோட்டார் கார்கள், சைக்கிள் வண்டிகள் போவதற்கென்று தனித் தனி வழிகள். மனிதர்கள் நடப்பதற்கென்று பிரத்தியேக நடைபாதை. இதேபோல் இன்னொரு புறத்திலும் அமைத்திருக்கிறார்கள். இப்படிப் பட்ட வசதி பொருந்திய சாலையில் எப்படி அபாயம் ஏற்பட முடியும்!

சண்டிகர் நகரத்தை ஆகாயத்தில் இருந்து பார்த்தால் ஒரு மனிதன் படுத்திருப்பது போன்று காட்சி தரும். மனித உருவத்தின் அமைப்பைப்போல சண்டிகர் நகரை நிர்மாணித்திருக்கிறார்கள். மனிதனின் தலைப்பகுதியில் தானே மனிதனையே ஆட்டிப்படைக்கும் மூளை இருக்கிறது. அதுபோல சண்டிகரின் தலைப் பகுதியில், பல்கலைக் கழகம், உயர்நீதி மன்றம், சர்க்கார் காரியாலயம் எல்லாம் இருக்கின்றன. மார்புப் பகுதியில் தான் நகரத்தின் செல்வம்



சண்டிகர் வீடுகள்

கொழிக்கும் கடை வீதிகள். வயிற்றுப் பகுதியில் தொழிற்சாலைகள். கால், கை பகுதிகளில் குடியிருக்கும் வீடுகள் என்று ஒவ்வொரு அமைப்பையும் முன் யோசனையுடன் செய்திருக்கிறார்கள். இதே அமைப்பு கெடாமல் சண்டிகர் நகரம் எதிர்காலத்தில் பரவிப் பெருகி வளர்வதற்கும் வசதிகள் இருக்கின்றன.

## வாதப் பிரதிவாதங்கள்

சண்டிகர் நகரம் சூரிய வெளிச்சமும் குளுமையான நிழலும் கொடுக்கக் கூடிய வீடுகள் நிறைந்த நகரம். சண்டிகர் என்ற பெயரைக் கேட்டவுடனேயே வாதப் பிரதிவாதங்கள் தொடங்கி விடுகின்றன. ஆமாம்! அது வாதப் பிரதிவாதங்களைக் கிளப்பி விடக் கூடிய நகரம்தான். காரணம் பழைமையை எதிர்த்துப் புதுமை பெற்றுப் பொலிகிறது.

சண்டிகர் நகரத்துக் கட்டடங்கள் புறாக்கூடுகள் போல இருக்கின்றன. புழுதி தங்குவதற்கு வசதியாக அமைந்திருக்கிறது என்று நகர அமைப்பின் அருமையைத் தெரியாதவர்கள் சொல்லுவதைத் தள்ளி விட்டாலும், அதை நிர்மாணித்த சிற்பியின் பெயரைக் கேட்டாலே எல்லாரும் வாதப் பிரதிவாதத்துக்குத் தயாராகி விடுகிறார்கள்.

லேகார்பூசியே என்ற பிரஞ்சு தேசத்து நகர அமைப்பு நிபுணர் எப்பொழுதும் புரட்சிகரமான கருத்துக்களை யுடையவர். பழைய போக்கைவிட்டுக் காலத்துக்கு ஏற்ற முறையில் புதிய வழிகளை வகுக்கும் திறமை படைத்தவர். சண்டிகர் வீடுகளில் அவர் அமைத்திருக்கும் சூரியனின் உஷ்ணத்தைத் தடுத்து வெளிச்சத்தையும் காற்றையும் மட்டும் உள்ளே விடும் ஜன்னல்கள்தான் விவாதத்துக்கு உரிய விஷயமாக இருக்கின்றன.

பழைய மனப்பான்மையில் ஊறித் திளைத்தவர்கள் இந்தப் புதுமுறையில் அமைத்திருக்கும் வீடுகளின் அமைப்பை எதிர்க்கிறார்கள். இந்தப் பத்தாம் பசலி எண்ணம் மக்களின் வாழ்க்கையில் எல்லாத் துறையிலும் இருக்கிறது. நம் நாடு உலக நாடுகளுடன் முன்னேற வேண்டுமானால் அந்தமாதிரிப் பழைய எண்ணங்களை ஒதுக்கித் தள்ளத்தான் வேண்டும்.

சண்டிகர் நகரத்துக்கு 'பிளான்' எழுதுவதற்கு அமெரிக்காவிலிருந்து இங்கிலாந்திலிருந்தெல்லாம் நிபுணர்கள் வரவழைக்கப் பட்டனர். அவர்கள் எல்லாரையும்விட நிதானமான அநுபவமும், கற்பனாசக்தியும் முன்னேற்ற எண்ணமுமுள்ள லேகார்பூசியே என்ற நகர அமைப்பு நிபுணரின் பிளான்தான் வளர்ந்து வரும் இந்தியாவுக்கு ஏற்றவண்ணம் இருந்தது. அதனால் பிரஞ்சு நாட்டைச்சேர்ந்த உலகப் புகழ்பெற்ற நகர அமைப்பு நிபுணர் லேகார்பூசியேயின் யோசனைக்கு இணங்க, சண்டிகர் நகரம் அமைத்திருக்கிறார்கள்.

இந்த விவரங்களை எல்லாம் சண்டிகர் நகரைச் சுற்றிக் காட்ட வந்த அதிகாரியின் மூலம் கேட்டுத் தெரிந்து கொண்டோம்.

"சண்டிகரில் உள்ள வீடுகளைப் பார்க்க வேண்டும்" என்றார் ஒரு பத்திரிகைப் பிரதிநிதி.

"ஓ! எல்லா மாதிரியான வீடுகளையும் பார்த்து வரலாம். அத்துடன் சண்டிகர் உயர்நீதி மன்றத்துக் கட்டடத்தையும் பார்ப்போம்" என்றார் அதிகாரி.

நேயர்களை இப்பொழுது ஒரு செக்டருக்கு அழைத்துச் செல்லப் போகிறேன். "வீடுகள் எல்லாம் ஒரேமாதிரியாக இருக்கின்றனவே" என்று ஆச்சரியமாக இருக்கிறதல்லவா! ஆமாம்! சண்டிகர் முழுவதும் இப்படித்தான் இருக்கிறது. வாருங்கள், ஒரு வீட்டுக்குள் நுழைந்து பார்ப்போம்.

வீட்டின் வெளிப்புறம் எல்லாம் நவீன நாகரிக மோஸ்தரில் அமைக்கப் பட்டிருந்தது. சூரிய வெளிச்சத்தையும், காற்றையும் உள்ளே விட்டு சூரிய உஷ்ணத்தை மட்டும் தடுத்து நிறுத்தும் "ஸன்பிரேக்கர்ஸ்" என்னும் நவீன ஜன்னல் பொருத்தப் பட்டிருந்தது.

அதாவது பழைய காலத்தில் வீடுகளில் சாமான்கள் போட்டு வைப்பதற்கு அஞ்சறைப் பெட்டி வைத்திருப்பார்களே, புறாக்கூடுபோல அதுபோன்று அமைக்கப்பட்ட ஜன்னல் பொருத்தப் பட்டிருந்தது. கான்கிரீட்டினால் செய்யப்பட்ட இந்த ஜன்னல்கள் மரப்பலகைகளில் செய்தவை போலவே தோற்றமளித்தன.




## நம் நாட்டில் சராசரி ஒருவருக்கு 15 கஜம் துணி தான் உற்பத்தியாகிறது. 1960 ம் வருடத்தில் ஒருவருக்கு 22 கஜம் துணி உற்பத்தி செய்வது துணி நெய்யும் தொழிற்சாலைகளின் திட்டம்

30 ஆண்டுகளுக்கு முன் நம் நாட்டின் உபயோகத்திற்கு வேண்டிய துணிகள் பூராவும் வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டு வந்தன. ஆனால் இப்பொழுதோ நம் நாடு உலகத்திலேயே துணி உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளின் பெருக்கத்தில் இரண்டாவது ஸ்தானம் வகிக்கிறது. இந்த முக்கிய தொழிற்சாலையில் நம் நாட்டில் 100 கோடி ரூபாய் முதலீடு செய்யப்பட்டிருக்கிறது. மேலும் 10 லக்ஷம் தொழிலாளிகள் இதில் வேலை செய்கிறார்கள். 500 கோடி கஜம் துணிகள் பிரதி வருடமும் உற்பத்தி செய்யப்பட்டு வருகின்றன. நம் நாட்டின் வளரும் செழிப்பிற்கு இந்த அதிக அவசியமானது. இதனாலேயே டாடா அயர்ன் அண்டு ஸ்டீல் கம்பெனியார் தங்களுடைய தொழிற்சாலையின் உற்பத்தியை அதிகப்படுத்துவதற்காக பல்வேறு திட்டங்களை கையாண்டு வருகிறார்கள்.

| இரும்பு உற்பத்தி: | | |
|---|---|---|
| 1955 | ... | 1,050,000 டன்கள் |
| 1959 | ... | 2,000,000 டன்கள் |

**தனியார் தொழில் தேச நலனுக்காகப் பாடுபடுகிறது**

**தி டாடா அயரன் & ஸ்டீல் கம்பெனி லிட்**

TH.574



அழுக்கை அறவே அகற்றுங்கள்!




# காவேரி
## ஸூபர் சோப்

அகத் தூய்மைக்கு முதற் படி புறத்தூய்மை என்பது வழக்கு. அழுக்கையும், துர் நாற்றத்தையும் அகற்ற சாலச் சிறந்தது 'சால்முக்ரா' எண்ணெ சேர்ந்த காவேரி ஸூபர் சோப்.

*இன்றே ஒரு முறை உபயோகித்துப் பாருங்கள் :*

**மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்**

மேட்டூர் அணை R. S. :: சேலம் ஜில்லா

*மானேஜிங் ஏஜெண்ட்ஸ் :* சேஷசாயி பிரதர்ஸ், லிமிடெட்

இந்த அதிசய "ஸன் கிராக்கர்ஸ்" ஜன்னலைப் பார்த்து விட்டு உள்ளே சென்றோம்.

உள்ளே தாழ்வாரம், கூடம், படுக்கும் அறை, சமையல் அறை, "பிளஷ் அவுட்" என்று சொல்லும் நவீன சுகாதார வசதிகளுடன் அருவிபோலத் தண்ணீர் கொட்டும் குளிக்கும் அறை, சிறு தோட்டம் எல்லாம் இருந்தன. வீட்டுக்கு மின்சார வெளிச்சம் பொருத்தப்பட்டு இருந்தது. அடுப்பங் கரையில் புகை இல்லாத 'ஸ்டவ்' அடுப்பும் இருந்தது.

அந்த வீட்டில் குடி இருப்பவரைப் பார்த்து "இந்த வீட்டிற்கு எவ்வளவு வாடகை!" என்று கேட்டோம்.

"இரண்டு ரூபாய்" என்றார்.

இதைக் கேட்டதும் அந்த மனிதர், வீடு, சண்டிகர் நகரம் எல்லாமே சுற்ற ஆரம்பித்து விட்டன. "இது உண்மையா" என்று மிகுந்த வியப்போடு கேட்டோம்.

"ஆமாம்" என்று அழுத்தம் திருத்தமாகச் சொன்னார் சண்டிகர் நகரத்து சர்க்கார் அதிகாரி. அவர் பதிலைக் கேட்டு எங்கள் திகைப்பு நீங்குவதற்குள் மீண்டும் கூறினார்:

"சர்க்கார் காரியாலயக் காவலாளிகளுக்கான வீடுகள் இவைகள். இவர்களுக்குச் சம்பளம் அதிகமில்லை யல்லவா! அதனால் வாடகை இரண்டு ரூபாய். வீடு சம்பந்தமாகப் பழுது பார்க்கும் செலவுகளை எல்லாம் சர்க்கார் செய்து வருகின்றனர்" என்றார்.

"ஆமாம். சுதந்திர நாட்டில் எல்லாரும் இந்நாட்டு மன்னர் என்று காவலாளிக்கு அரண்மனையைக் கட்டிக் கொடுத்தால் அதைச் சுத்தமாக வைத்துக் கொள்வதற்கே அவர்கள் வருமானம் போதாதே! அதெல்லாம் சரிதான். இப்படித்தான் இருக்க வேண்டும்" என்றார் ஒரு பத்திரிகைப் பிரதிநிதி.

இந்தமாதிரி வீடு சென்னை நகரில் இருந்தால் அதற்குக் குறைந்தது ஐம்பது ரூபாயாவது வாடகை வசூலிப்பார்கள்.

அதோ தெரிகிறதே அந்த செக்டருக்குப் போவோம் வாருங்கள். இந்த செக்டரில் உள்ள வீடுகளும் முதலில் நாம் பார்த்த வீடுகளில் உள்ள வசதிகளுடன் கூடிய வீடுகள் தான். ஆனால் சற்றுப் பெரிய வீடுகளாக மாடியுடன் இருக்கின்றன. "இவைகள் எல்லாம் குமாஸ்தாக்களுக்கு" என்றார் அதிகாரி.

இந்த வீடுகளுக்குப் பத்து ரூபாய்தான் வாடகை. சம்பளத்தில் பத்தில் ஒரு பங்கு வீட்டு வாடகைக்கு வசூல் செய்கிறார்கள் என்ற விவரத்தையும் தெரிந்து கொண்டோம்.

சண்டிகர் நகரில் உள்ள பல்வேறு செக்டரில் இருக்கும் வீடுகள் எல்லாம் தோற்றத்தில் ஒரே மாதிரியாக இருந்தாலும் அளவில் சிறியதும் பெரியதுமாக இருக்கின்றன.

ஒரு செக்டரில் உள்ள வீடுகளில் குடி யிருப்பவர்களைப் பார்த்தவுடன் அவர்கள் மாத வருமானம் எவ்வளவு என்று சுலபமாகத் தெரிந்து கொள்ளலாம். வருமானத்தை மறைத்துக் கொண்டு பெரிய மனிதர்கள்போல ஆடம்பர வாழ்வு நடத்தும் மாய வாழ்க்கைக்குச் சண்டிகரில் இடமில்லை. "சண்டிகர் நகரம் எல்லாருக்கும் தெரியும் வண்ணம் திறந்து வைத்திருக்கும் சம்பளப் பட்டியல்" என்றார் பஞ்சாபின் பிரதம மந்திரி. ஆமாம்! அவருடன் சண்டிகர் நகரின் அமைப்பைப் பற்றி நாங்கள் வாதப் பிரதிவாதங்கள் நடத்திக் கொண்டிருந்தபோது தான் அவ்வாறு சொன்னார்.

சண்டிகர் வீடுகளைப் பற்றி யார் எந்த குறை சொன்னாலும் சண்டிகர் 'மாடல்' வீடுகளை மக்கள் கட்ட ஆரம்பித்து விட்டனர். புது தில்லியில் சண்டிகரில் உள்ள வீடுகளைப்போல் கட்ட ஆரம்பித்து விட்டார்கள். இனி இந்தியா முழுவதும் சண்டிகர் நகரில் உள்ள வீடுகளைப் போல்தான் கட்டப் போகிறார்கள்.

வாருங்கள் சண்டிகர் உயர்நீதி மன்றக் கட்டடத்துக்குச் செல்வோம்.

அந்தக் கம்பீரமான கட்டடத்துக்கு முன்னால் போய் நின்றபோதுதான் புது உலகில் எங்கேயோ இந்தியாவின் தொலைதூரத்துக்கு அப்பால் உள்ள ஒரு அதிசய பூமியில் நிற்பது போன்ற பிரமை ஏற்பட்டது.

சுதந்திர இந்தியா புதிய அரசியல் அமைப்புப் படி புதிய நீதியை நிலைநாட்டும் புதுமைக் கருத்துடன் கம்பீரமாக நிற்கிறது உயர்நீதி மன்றம். அதன் ஆறு மாடிகளுக்கும் ஏறிச் செல்வதற்கு அமைத்திருக்கும் படிகளும் புதுமைதான். சற்று ஏற்றமான சாலையில் நடப்பதுபோல நடந்தே மேல் மாடிக்குச் சென்று விடலாம். சைக்கிளையும், காரையும் ஓட்டிக்கொண்டே மேல் மாடிக்குச் சென்று விடலாம். அப்படி அமைக்கப் பட்டிருக்கிறது உயர்நீதி மன்றத்து மாடிக்குச் செல்லும் பாதை.

நீதிபதிகள் அமர்ந்து நீதி வழங்கும் அறை இந்தியாவில் எந்த நீதி மன்றத்திலும் இல்லாத புதுமையான காட்சியுடன் இருக்கிறது. சாட்சிகள் நின்று சாட்சி கூறும் கூண்டு சங்குபோல் இருக்கிறது. நீதிபதிக்குப் பின்னால் விட்டிருக்கும் திரையில் சுதந்திர நாட்டில் எல்லா மக்களுக்கும் ஒரேமாதிரி நியாயம் வழங்கப்படும் என்பதை விளக்கும் சின்னங்கள் அதிசயமான நுணுக்க அறிவுடன் கூடிய சித்திரங்களாகக் காட்சி தருகின்றன. ஒளி வீசும் மின்னல் ஓட்டம், சூரியன், தராசு முதலிய உருவங்கள் பொறிக்கப் பட்டிருக்கும் அபூர்வமான திரை மனத்தைக் கவ்வி இழுக்கிறது. அந்த அறைக்குள் சென்றவுடன் மனத்தில் நியாய உணர்ச்சியும், உள்ளத் தூய்மையும் ஏற்படும் முறையில் இந்த அபூர்வமான வர்ணச் சித்திரத்தை வரைந்திருக்கிறார்கள்.

அழகான நகரங்கள் உலகில் எங்கேயோ வெளி நாட்டில் அமெரிக்காவில், ரஷ்யாவில், இங்கிலாந்தில், பிரான்சில் இருப்பதாகச் சொல்லுகிறார்கள். இருக்கலாம். ஆனால் சண்டிகர் நகரைப் பார்த்தவர்கள் இதைப் போல் எல்லா வசதிகளுடன் கூடிய நகரம் வட இந்தியாவில் பஞ்சாபில்தான் இருக்கிறது என்று சொல்வார்கள்.

இது போன்ற நவீன வசதிகளுடன் கூடிய நகரங்கள் இந்தியாவின் எல்லா ராஜ்யத் தலை நகரங்களிலும் ஏற்படுத்த வேண்டும். நம்முடைய தமிழ் நாட்டில் உள்ள எல்லா நகரங்களுமே மிக்க நெருக்கமானவை. குறுகலான சாலைகளுடனும், சுகாதார வசதி இல்லாமலும் இருப்பதை நாம் மூடி மறைக்கக் கூடாது.

இந்த நகரங்களையெல்லாம் உடனே சீர்திருத்த வேண்டும். சண்டிகர் நகரைப்போல் செய்யா விட்டாலும் ஒரு வீட்டில் நாலு ஐந்து குடும்பங்கள், அதாவது – நாற்பது ஐம்பது பேர் குடியிருக்கும் கொடுமையையாவது தடை செய்ய வேண்டும்.

சண்டிகரைப்போல் புதிய நகரங்கள் தமிழ் நாட்டில் ஏற்படுத்தா விட்டாலும், நம் நாட்டில் உள்ள ஆயிரக்கணக்கான கிராமங்களுக்குச் சாலைகளாவது போடலாம். ஒரு வசதியும் இல்லாத தமிழ் நாட்டுக் கிராம மக்கள், அருகில் உள்ள நகரங்களுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு வாழுவதற்கு வேண்டிய வகையாவது செய்து கொடுக்க முயற்சிக்கலாம். அந்த நல்ல நாள் என்று வருமோ!

இன்னும் பத்து ஆண்டுகளுக்குப் பிறகு சண்டிகர் நகரத்துக்குச் சென்றால் அது மலர் குலுங்கும் மலர் வனத்துக்கு மத்தியில் புதிதாக முளைத்த குபேரபுரியாகத் தோற்றமளிக்கும். அதற்கு வேண்டிய அற்புதமான திட்டங்கள் எல்லாம் போட்டு இரு நூறு வகையான மரங்களை நட்டு வளர்த்து வருகிறார்கள். மரங்கள் இல்லாமல் இருக்கும் பொழுதே மனத்தை மயக்கும் இந்த நகரம் மரங்கள் எல்லாம் வளர்ந்து பூத்துக் குலுங்கும் போது எப்படி இருக்கும் என்பதை நினைத்துப் பார்க்கும் போதே மனத்தில் என்ன என்னவோ கற்பனைகள் தோன்றுகின்றன.

சண்டிகரில் தனி மனிதர்கள் வீடுகள் கட்டுவதற்கும், தொழிற்சாலைகள் அமைத்துக் கொள்வதற்கும் வேண்டிய சௌகரியங்களைச் சர்க்கார் செய்து கொடுத்து வருகிறார்கள். சண்டிகர் நகரத்தை அமைப்பதற்குப் போட்ட திட்டத்தை விட ரூபாய் அதிகமாகி விட்டது. 1956-ம் ஆண்டுக்குள் பதின்மூன்று கோடிக்கு மேல் போய் விடும் என்று கூறினார் அதிகாரி.

மந்திரிகளுக்கென்று அமைத்திருக்கும் வீடுகளைப் பார்த்தால் அதில் வசிப்பதற்காகவே பஞ்சாபில் மந்திரிகளாக வரலாம்போல் அவ்வளவு அழகாகக் காட்சி தருகின்றன.

பஞ்சாபின் முதன் மந்திரி பீமசேனசச்சர் பத்திரிகைப் பிரதிநிதிகளுக்கு விருந்து கொடுத்து சண்டிகரைப் பற்றிப் பத்திரிகையாளர்கள் கேள்விகளுக்கெல்லாம் விளக்கம் கூறினார். அவர் கூறிய விஷயங்கள் சண்டிகரைப் பற்றிப் பலர் கொண்டிருந்த தப்பான அபிப்பிராயங்களை மாற்றி விட்டன.

** ** **

சண்டிகரில் இரவைக் கழித்தால் நமது பிரயாணம் தடைப்பட்டுப் போகும். ஆகவே சண்டிகர் நகரைவிட்டுக் கிளம்புவோம். பெப்சு ராஜ்யத்துக்குப் போவோம். பஞ்சாபைக் காட்டிலும் அதிக உரிமையுடனும் பெருமையுடனும் நாம் இந்த ராஜ்யத்துக்குள் போகலாம்.

ஏனெனில் இது சமஸ்தான மன்னர்களின் ஏதேச்சாதிகார ஆட்சியை ஒழித்து, எட்டு சமஸ்தானங்களை ஒன்று சேர்த்து உண்டாக்கிய உன்னதமான ராஜ்யம். சுதந்திரம் பெற்ற பிறகு செய்த மகத்தான சாதனைகளில் ஒன்று பெப்சு ராஜ்ய அமைப்பு.

அந்த ராஜ்யத்தில் நம்முடைய சுதந்திர சர்க்கார் எத்தனையோ அரிய காரியங்களைச் செய்து வருகிறார்கள். இப்போது நமது சர்க்கார் செய்து வரும் வியக்கத்தக்க முன்னேற்றங்களைத் தெரிந்து கொள்வதற்காக நாளையதினம் பெப்சுவின் தலைநகரமான பாட்டியாலாவுக்குச் செல்வோம். (தொடரும்)

# வ ட் ட மே ஜை

## "துளசி மணம்"

ராஜாஜி எழுதும் பாலர் பகுதி பற்றி 18க் தேதி "கல்கி" இதழில் ஸ்ரீமதி ஏ.வி. ராமன் மிகவும் சிறப்பாக எழுதி யிருப்பது என்னைப் போன்ற பல்லாயிரக் கணக்கான "கல்கி" வாசகர்கள் உள்ளத்தில் மட்டற்ற மகிழ்ச்சியை உண்டாக்கி யிருக்குமென்பது திண்ணம். ரோஜாச் செடியின் சம்பாஷணைக்கு இணையாக, பணக்கார - ஏழை மாணவர்களின் போக்கு, அணிலுக்கு முதுகின் மேல் இருக்கும் கோடுகள் ஏற்பட்டதின் வரலாறு, ஸ்ரீ கிருஷ்ண பகவான் தராசில் வைத்து நிறுத்த கதை முதலியவைகளை வெகு அழகாகக் குறிப்பிட்டிருக்கிறார். ராஜாஜி அவர்கள் எழுதிய பகுதிக்கு இவ்வளவு மேன்மையாகப் பாராட்டி அர்த்த புஷ்டியுடன் எழுதிய ஸ்ரீமதி ஏ. வி. ராமனுக்குக் "கல்கி" வாசகர்களின் சார்பாக நன்றி செலுத்துகிறேன். இதேபோல இன்னும் அநேக கதைகளை நமக்குக் கொடுக்கக் கடவுள் ராஜாஜி அவர்களுக்குத் திட ஆரோக்கியம் அளிப்பார்.

கும்பகோணம்
17-12-55

பி. சாரங்கபாணி
ஹெட் போஸ்டாபீஸ்

## பாராட்டுகிறோம்

சென்ற டிசம்பர் 18-க் தேதி கல்கி இதழில் வெளிவந்த "நடந்த நாடகம்" என்னும் சிறு கதை என் மனத்தைப் பெரிதும் கவர்ந்தது. இதைப் போல் அழகான பல கதைகள் கல்கியில் தொடர்ந்து வருவது நேயர்கள் பலருக்கும் தெரிந்ததே!

பேராசிரியர் கல்கி அவர்கள் உயிருடன் நம்மிடையே இருந்து கொண்டு, "கல்கி" வார இதழை நடத்துவது போலவே ஒரு உணர்ச்சி எனக்கு ஏற்படுகிறது. ஏனெனில், ஆசிரியர் "சோமு" அவர்கள் "கல்கி"யை நடத்தும் திறமை அவ்விதநினைப்பைத் தோற்றுவிக்கிறது. திரு கல்கி அவர்களிடம் பயிற்றுவிக்கப்பட்டவரல்லவா! அவர் எழுத்துத் திறமையும் பத்திரிகை நடத்தும் பாண்மையும் "சோமு" அவர்களிடம் நன்கு சுடர்விட்டுப் பிரகாசிக்கின்றன. இது எனது எண்ணம் மட்டுமல்ல! நேயர்கள் அனைவரும் அப்படியே கருதி வருகிறார்கள்.

மதுரை
16—12—55 ஆர். என். சுப்பிரமணியம்

# ஆற்றங் கரையினிலே




## பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை

### 50. கயத்தாறு

இசை பாடும் புலவர் மலிந்த தமிழ் நாட்டில் வசைபாடும் கவிஞரும் சிலர் வாழ்ந்தனர். அவர்களில் தலைமை சான்றவர் காளமேகம். அம்மேகம் தமிழகத்தில் வளமாக வசை மாரி பொழிந்தது. "வசை பாடக் காளமேகம்" என்ற புகழுரையும் பெற்றது.

ஒருகால் சோழ நாட்டிலிருந்து பாண்டி நாட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தார் காளமேகக் கவிஞர். ஆலஞ்சோலை சூழ்ந்த ஓர் அழகிய சிற்றூர் அவர் கண்களைக் கவர்ந்தது. அவ்வூரின் நடுவே நின்ற திருக்கோயில் அவர் உள்ளத்தை இழுத்தது. 'மாலைப் பொழுதில் ஆண்டு வழிபாடு செய்தல் சாலச் சிறந்தது' என்றெண்ணி ஊரின் உள்ளே சென்றார். கண்ணுக்கினிய சோலையிலே கோயில் கொண்டிருந்த ஈசனைப் பண்ணார்ந்த பாட்டிசைத்துப் போற்ற விரும்பினார். "ஒரு நாமம், ஓர் உருவம்" இல்லாத இறைவனுக்கு ஆயிரம் திருநாமம் சொல்லி வணங்குதல் வழக்கமாதலின் அங்குள்ள ஈசன் பெயர் யாதோ என்று அறிய ஆசைப்பட்டார்.

அந்நிலையில் அவ்வாலயத்தில் வழிபாட்டிற்காகக் குழுமியிருந்த அடியார்கள் இவரை ஊருக்குப் புதியவர் என்று தெரிந்து கொண்டு "ஐயா! இவ்வூர் ஆலங்குடி; இங்குள்ள ஈசனுக்கு ஆலங்குடியான்" என்று பெயர் என்று அறிவித்தார்கள். அப்போது காளமேகம் அவர்களை நோக்கி, "நீங்கள் சொல்வது சரியன்று; ஆலம் குடித்து அண்டத்தை யெல்லாம் காத்தருளிய ஈசனை 'ஆலம் குடியான்' என்று சொல்லலாமா?

"ஆலம் தான்உகந்து அமுதுசெய் தானை
ஆதியை அமரர் தொழுது ஏத்தும்
சீலம் தான்பெரி தும்உடை யானை
சிந்திப் பார்அவர் சிந்தையு ளானை"

(ஆலம் - நஞ்சு; அமரர் - தேவர்.)

என்பது ஆன்றோர் திருவாக்கன்றோ? ஆலம் குடித்ததனால் அன்றோ அப்பெருமானது கண்டம் கறுத்தது? நீலகண்டன் என்ற பெயரும் எழுந்தது? அவன் கண்டத்தில் அமைந்த கருமையான அடையாளத்தையும் மறந்து ஆலம்குடியான் என்று அழைத்தல் ஆகுமா?

"ஆலங் குடியானை ஆலாலம் உண்டானை
ஆலங் குடியான்என்று ஆர்சொன்னார்-ஆலங்
குடியானே யாயின் குவலயத்தோர் எல்லாம்
மடியாரோ மண்மீதி லே"

(ஆலாலம் - ஆலகாலம் என்னும் நஞ்சு; குவலயம் - உலகம்.)

ஆலங்குடியில் அமர்ந்த பெருமானை ஆலம் குடியான் என்று சொன்னவர் யார்? ஆலம் குடித்தவனை ஆலம் குடியான் என்று சொல்லுதல் அடுக்குமோ? இவ்வுலகத்தையெல்லாம் அழித்து முடிப்பதற்கு எழுந்த ஆலகாலம் என்னும் கொடிய நஞ்சை அவ்வள்ளல் அள்ளிக் குடித்ததனால் அன்றோ இன்று மாந்தர் மண்ணுலகில் வாழ்கின்றார்கள்? ஆலம் குடித்தான் என்பதற்கு இவ்வுலகமே சான்றாயிருக்க ஆலம் குடியான் என்று அவனைச் சொல்லுதல் உண்மையாகுமோ என்று நயம்பட உரைத்தார்.

இக்கவிஞர் பாண்டி நாட்டின் தலைநகராகிய மதுரையைக் கடந்து நெல்லையம்பதிக்குச் செல்லும் வழியில் மற்றொரு சிற்றூரை அடைந்தார். அன்று காலையிலிருந்து அவர் பசியால் நலிந்து வெயிலால் உலர்ந்து வாடித் தளர்ந்திருந்தார். அந்திமாலையில் அவ்வூரில் எழுந்த மேளதாளமும், ஆரவாரமும் அவர் உள்ளத்தில் ஆனந்தம் ஊட்டின. வயிறார உணவு கிடைக்கும் என்ற எண்ணமும் பிறந்தது. ஆற்றங்கரையில் இருந்த பெருமான் கோவிலில் அன்று ஒரு திருநாள். வீதியெங்கும் கொடிகள் பறந்தன; வீடுதோறும் கோலங்கள் விளங்கின. காளமேகம் உள்ளம் குளிர்ந்து கோவிலின் உள்ளே சென்றார். பெருமானைக் கருட வாகனத்தில் ஏற்றி மாலைகளும் நகைகளும் அணிந்து கொண்டிருந்தார் ஆலயக் குருக்கள்.

காளமேகத்தின் கண் சுழன்றது; கால் தளர்ந்தது; உடல் சோர்ந்தது. ஒதுக்கமான ஓர் இடத்தில் படுத்து உறங்கிவிட்டார். பெருமானை எழுப் பண்ணும் வேளை வந்தது. முரசு அதிர்ந்தது. சீர்பாதம் தாங்கிச் சேவை செய்தற்குரிய பணியாளர்கள் தண்டயத்தின் அண்டையில் வந்து சேர்ந்தனர். கருடனது திருவடியின் அருகே அவ்வாகனத்தில் அமர்ந்தார் கோயிற் குருக்கள்.

தண்டயத்தைத் தூக்கித்தோளில் வைத்த போது சீர்பாதப் பணியாளரில் ஒருவர் வரவில்லை என்று குருக்கள் குறை கூறினார். அப்போது தூண் மறைவிலே உறங்கிக் கொண்டிருந்த காளமேகத்தைத் தட்டி எழுப்பித் தண்டயத்தை அவர் தோளிலே மாட்டி மகிழ்ந்தனர் மெய்யடியார்கள். அவரும் தம் தலைவிதியை நொந்து கொண்டு தண்டயம் தாங்கினார்.

திருவீதியிலே கோலாகலமாகச் சென்றார் பெருமான். வீடுதோறும் விமானம் நின்று சேவை சாதித்தது; காளமேகத்தின் தோள் கடுத்தது; கால் வலித்தது; கை சலித்தது. பொறியில் அகப்பட்ட எலிபோல் துடித்தார்.

ஊரைச் சுற்றி வந்து விமானம் இறங்கிற்று. காளமேகத்தின் சீற்றம் தலைக்கு ஏறிற்று. பெருமான் முன்னே நின்று வசை பாடலுற்றார்.

"பாளைமணம் கமழ்கின்ற கயத்தாற்றுப்
பெருமானே பழிகாரா கேள்
வேலையென்றால் இராவேளை பதினாறு
நாழிகைக்கு மேலாயிற்று என்
தோளைமுறித் ததுமன்றி நம்பியானையும்
கூடச் சுமக்கச் செய்தாய்
நாளையினி யார்சுமப்பார் எந்நாளும்
உன்கோயில் நாசம்தானே"

(பாளை - மடல்; நம்பியான் - கோயிற் குருக்கள்)

என்று வசைபாடி அவ்வூரை விட்டகன்றார்.

இவ்வாறு காளமேகத்தின் வசைப் பாட்டைப் பெற்ற கயத்தாறு என்னும் ஊர் தென்பாண்டி நாட்டில் உப்பாற்றின் கரையில் உள்ளது. கழுகுமலையிலே தோன்றிச் சித்திராநதியில் வந்து சேரும் உப்பாறு முன்னாளில் கயத்தாறு என்னும் பெயர் பெற்றிருந்தது. ஆதலால் அதன் கரையில் எழுந்த ஊர் கயத்தாறு என்றே அழைக்கப் பட்டது. கோதண்டராம நதி என்ற பெயரும் அதற்கு உண்டு.

பாஞ்சாலங்குறிச்சியிலே தோன்றி வெள்ளையரசாங்கத்தை அலைத்துக் குலைத்து அலற அடித்த வீரபாண்டிய கட்டபொம்மனின் கடைசிக்காலைக் கண்டதும் கயத்தாறே!

"வானம் பொழியுது பூமி விளையுது
மன்னவனுக்கேது தீர்வைப் பணம்
தானம் தெரியாமல் வந்து தலையிட்டால்
மானம் அழிந்து மடிந் திடுவீர்"

என்று மார் தட்டிய வீரனை வஞ்சகமாய்ப் பிடித்துக் கயத்தாற்றில் உள்ள புளிய மரத்தில் தூக்கிட்டுக் கொன்றது ஆங்கில அரசாங்கம். வேற்று நாட்டாரது ஆட்சிக்கு அடங்கி ஆண்மை யிழந்து வாழ்வதினும் அவரோடு போர் தொடுத்து மாள்வது நன்று எனக் கருதிய மான வீரனை மனக் கோயிலில் அமைத்துப் போற்றுவாராயினர் பொது மக்கள். வீரபாண்டியன் புகழுடம்பு பெற்ற புளிய மரத்தடியில் வீரக்கல் நாட்டிப் பாட்டாலும் உரையாலும் பாராட்ட விரும்பிய பொதுமக்கள் வெள்ளையரசாங்கத்தின் சீற்றத்திற் கஞ்சி அவ்வாறு செய்யா தொழிந்தனர். ஆயினும் அவ்வழியாகச் சென்ற ஒவ்வொருவரும் ஒவ்வொரு கல்லெடுத்து அப்புனிதமான இடத்தில் இட்டுப் போற்றி வருகின்றனர். அன்று முதல் இன்றளவும் நன்றி மறவாத தமிழ் மக்கள் அங்கு தூவும் கற்கள் குன்றுபோலக் குவிந்து காட்சி தருகின்றன. பாஞ்சாலங்குறிச்சியிலே பிறந்து வீரப்புகழ் பெற்ற கட்டபொம்மன் கயத்தாற்றிலே கற் கோயில் கொண்டு வீற்றிருக்கின்றான்.




Sole Distributors

**CHOWGULE & CO. (HIND) LTD.**

---

கிறிஸ்துமஸ் - புது வருஷ விற்பனை
விசேஷ சலுகை 15%



பேவர்-லூபா "ஜெனிவ்"

8¾" சைஸ், ஆன்புருப், ஆடோமாடிக், முழுவதும் ஸ்டீல் 17 ஜுவல்ஸ் ரூ. 227/-

**குஹா கம்பெனி**

23, துப்ளேக்ஸ் வீதி, புதுச்சேரி

---

# 'பிராங்கைடிஸினால் என் சுவாசப்பைகள் நெருப்பைப்போல் தகித்தன'



ஆனால் **பெப்ஸ்**

## அடைப்பைப்போக்கி, எரிச்சலையும் உடனே தணித்தது.




பெப்ஸ் தொண்டை மற்றும் மார்புவலி நிவாரண மாத்திரைகளில் சமனமூட்டி குணப்படுத்தும் ரசங்கள் அடங்கியுள்ளன. பெப்ஸை சுவைக்கும் போதே, இந்த ரசங்கள் ஆவியாக மாறி, உங்கள் சுவாசத்துடன் தொண்டை, சுவாசக் குழாய் மூலமாக சுவாசப்பைக்குச் செல்லும். ஆகவே கோளாறின் ஆரம்பஸ்தானத்திற்கே சென்று வேலை செய்கின்றன. அதனால்தான் பெப்ஸ் கைகண்ட ஔஷதமாயும், உலக பிரசித்தி பெற்றும் விளங்குகிறது. பெப்ஸ் இருமலை நிறுத்தி தொண்டை ரணத்தை சமனமாக்கி, கபத்தை உடைத்து அடைப்பை நீக்குவதுடன் இன்புளூயன்ஸா மற்றும் பிராங்கைடிஸ் சிகிச்சையில் இன்றியமையாததாயுமுள்ளது.

பெப்ஸ் தொண்டை, மார்பு வலி நிவாரண மாத்திரைகள் எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

**PEPS**

FPY-38-TAM

மதராஸிலிருந்து ஸோல் ஏஜெண்டுகள்: தாதா & கம்பெனி, பார்க் டவுன்




ஒரு வாழை மரத்தின்மேல் சிறு அணில் ஒன்று ஏறி விளையாடிக் கொண்டு பூச்சிகளையும் தேடிக் கொண்டிருந்தது.

"உன் தாயார் எங்கே?" என்று வாழை மரம் அதைக் கேட்டது.

"எனக்குத் தாயார் ஒருவரும் இல்லையே" என்று சொல்லிற்று அணில். தன் பாட்டுக்கு ஜீவனம் நடத்திக் கொண்டிருந்த படியால், தாயை முற்றிலும் மறந்து விட்டிருந்தது அணில்.

"உன்னைப் பெற்ற தாயை இப்படி நீ மறந்து விடலாமா? என் குழந்தைகளைப் பார். என் வேரோடு அண்டி வளர்ந்து வருகின்றன. அப்படி நீயும் இருக்கலாகாதா!" என்றது வாழை மரம்.

"என்னவோ பேசுகிறாய். தாயாவது மகனாவது மகளாவது. இன்னும் கொஞ்ச நாள் பொறுத்திரு நீ. உனக்கு ஒரு மகன் பிறக்கப் போகிறான். அவன் உன் உயிருக்கே பகையாவான்" என்று அணில் ஜோசியம் சொல்லிற்று.

வாழை மரத்துக்குக் கவலை உண்டாய் விட்டது.

* * *

சில நாள் கழித்து, வாழை மரத்தில் நல்ல வாழைக் குலை வளர்ந்து முற்றிற்று.

# வாழையின் கதை

ராஜாஜி

கார்த்தவீரியார்ஜுனன் கைகளைப் போல் பழத்துக்கு மேல் பழமாக வளர்ந்தது. தாய் மரத்துக்கு மகன் வளர்வதைப் பார்த்து ஆனந்தம் வளர்ந்துகொண்டே போயிற்று.

*   *   *

அணில் வந்து மரத்தைக் கேட்டது: "மரமே, சுகமா ?" என்றது.

"என் மகனைப் பார். அவனுடைய தங்க நிறத்தைப் பார். என் சுகத்துக்கு என்ன குறைவு !" என்றது வாழை மரம்.

•   •   •

'அந்தத் துஷ்ட அணில் சொன்னது உண்மைதானோ ? இந்த மகனோடு என் வாழ்க்கை முடிந்துபோகும் போல் தோன்றுகிறது. வயிற்றில் என்னவோ பண்ணுகிறது. ஆனாலும் என்ன. இப்பேர்ப்பட்ட மகன் பிறந்த பிறகு எனக்கு வேறு என்ன வேண்டும்!' என்று சொல்லி விட்டு மரம் சாய்ந்து போக ஆரம்பித்தது.

தோட்டக்காரன் வாழைக் குலையை வெட்டிக் கொண்டு போய் விட்டான். பிறகு வாடிப்போன மரத்தையும் வெட்டிச் சுத்தப் படுத்தி விட்டான்.



பாப்பா மலர் தொடர் கதை

# பர்மா ரமணி

அழ. வள்ளியப்பா



## 24. காரியம் கெட்டது!

'அது என்ன யோசனை?' என்று மதுரநாயகம் கேட்டதும், சுதர்சன் பதில் சொன்னார். "எனக்குத்தான் ரமணியை நன்றாகத் தெரியுமே! ஆகையால்..." என்று இழுத்தார்.

"ஆகையால், நீயே திருச்சிக்குப் புறப்பட்டுப் போகிறேன் என்கிறாயா?"

"இல்லை சார்! ரமணியின் உருவத்தை அப்படியே தத்ரூபமாக எழுதிக் கொண்டு வந்து விடுகிறேன். இன்று இரவு எந்நேரம் ஆனாலும் சரிதான்; எழுதி முடித்து விட்டுத்தான் படுப்பேன்" என்றார் சுதர்சன்.

இதைக் கேட்டதும் மதுரநாயகம் இருந்த இடத்தை விட்டுக் குதித்துக் கொண்டு எழுந்தார்.

"அடடே! நல்ல யோசனையாயிருக்கிறதே! அப்படியே செய் சுதர்சன். நாளைக்குக் காலையிலே நீ படம் எழுதிக் கொண்டு வந்தவுடனே நான் என்ன தெரியுமா செய்யப் போகிறேன்? நேராக 'நவநீதம் ஸ்டுடியோ'வுக்குப் போய் அந்தப் படத்தை போட்டோ எடுக்கச் சொல்லப் போகிறேன்."

"போட்டோவா! அது எதுக்கு சார்? நான் எழுதிக் கொண்டு வரப் போகும் படத்தையே நீங்கள் திருச்சிக்கு அனுப்பி விடலாமே!"

"சேச்சே, அப்படிச் செய்யக் கூடாது, சுதர்சன். தபாலில் அனுப்பும் போது வழியிலே தொலைந்து போனால், இன்னொரு தடவை யல்லவா எழுத வேண்டும்? போட்டோ எடுத்து அனுப்புவது தான் நல்லது. நான் இன்னொரு யோசனையும் வைத்திருக்கிறேன். அந்தப் போட்டோவிலே பத்துப் பிரதிகள் எடுக்கச் சொல்லப் போகிறேன். 'அவசரம்' என்று சொன்னால், நாளைச் சாயங்காலமே தந்து விடுவார்கள். ஒரு பிரதியைத் திருச்சிக்கு அனுப்பி விட்டு, மற்றப் பிரதிகளை முக்கியமான பத்திரிகைகளுக்கு அனுப்பி விளம்பரம் செய்யப் போகிறேன். ரமணி திருச்சியில் இல்லாத போனால்கூட வெகு சுலபத்தில் அகப்பட்டு விடுவான். எப்படி என் யோசனை?"

"சரியான யோசனை சார். நான் இன்றைக்கு இரவே ரமணியின் படத்தை எழுதி முடித்து விடுகிறேன். அதிகாலையில் உங்கள் வீட்டுக்குப் படத்துடன் வந்து சேருகிறேன். என்ன சார், சரிதானா?"

"அப்படியே செய் சுதர்சன். நீ செய்யப் போகும் உதவியால், ரமணி சீக்கிரம் கிடைத்து விடுவான் என்றே நினைக்கிறேன்" என்று ஆனந்தம் பொங்கக் கூறினார் மதுரநாயகம்.

*  *  *

அன்று இரவு சாப்பிடும் போதெல்லாம் மதுரநாயகமும், கமலா தேவியும் ரமணியைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள். சாப்பாட்டை முடித்துக் கொண்டு அறைக்குள்ளே சென்ற மதுரநாயகம் ஒரு காகிதத்தை எடுத்தார். அதில் யோசித்து யோசித்து ஏதோ எழுதினார். எழுதி விட்டுப் படித்துப் பார்த்தார்:

**பையனைக் காணோம்!**

மேலேயுள்ள பையனின் பெயர் ரமணி. வயது 13. மாநிறம். சுமார் நாலரை அடி உயரம். பத்து நாட்களாகக் காணவில்லை. அவன்மீது தவறு எதுவும் இல்லை. திரும்பி எப்போது வருவான் என்று ஆவலாக அவனை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். அவனைக் கண்டு பிடித்துக் கீழ்க்கண்ட விலாசத்துக்குத் தகவல் கொடுப்பவர்களுக்குத் தகுந்த சன்மானம் கொடுக்கப்படும். — மதுரநாயகம், மானேஜர், ஸ்ரீ முருகன் பால நாடக சபா, சென்னை – 6.

இதை இரண்டு தடவை படித்துப் பார்த்தார். பிறகு, "சரி, இதேபோல் ரமணியின் படத்துடன் விளம்பரப் படுத்தி விடலாம். சீக்கிரம் ரமணி கிடைத்து விடுவான். சந்தேகமே இல்லை" என்று மனத்திற்குள்ளே சொல்லிக் கொண்டார்.

பிறகு, படுக்கையில் போய்ப் படுத்தார். கண்களை மூடிக் கொண்டார். ஆனால் தூக்கம் வரவில்லை! 'சுதர்சன்

இப்போது ரமணியின் படத்தை எழுதிக் கொண்டிருப்பான். அங்கு நாமும் போனால் அவனுக்கு உதவியாயிருக்கும்' என்று நினைத்தார் மதுரநாயகம். உடனே படுக்கையை விட்டு எழுந்தார். சட்டையை மாட்டிக் கொண்டார். விறு விறு என்று நடந்தார்.

இரண்டு மைல் தூரத்திலிருந்த ஒரு மாடிவீட்டை நோக்கிச் சென்றார். அந்த வீட்டை அடைந்ததும், மாடிப் படிகளில் ஏறி மெதுவாக மேலே சென்றார். அங்கிருந்த ஏழாம் எண்ணுள்ள அறையை நெருங்கினார். அறையில் விளக்கு எரிந்து கொண்டிருக்கும் என்று அவர் எதிர்பார்த்தார். வெளிச்சம் இல்லாமல் படம் எழுதமுடியாதல்லவா? ஆனால், அந்த அறையில் விளக்கு எரியவில்லை. அறைக் கதவு திறந்திருக்கிறதா என்று பார்த்தார். இல்லை. அது சாத்தப்பட்டிருந்தது. 'என்ன இது! சுதர்சன் தூங்கி விட்டானோ!' என்று நினைத்துக் கதவை மெதுவாகத் தட்டினார்; பதில் இல்லை! கொஞ்சம் பலமாகவே கதவைத் தட்டினார்; அதற்கும் பதில் இல்லை!

கதவைத் தட்டும்போது அவர் கையில் ஏதோ தட்டுப்பட்டது. அதைத் தொட்டுப் பார்த்தார். உடனே திடுக்கிட்டார். "ஆ! பூட்டு! என்ன இது! கதவு பூட்டப்பட்டிருக்கிறதே! சுதர்சன் எங்கே போய் விட்டான்? அவன் பொய் சொல்ல மாட்டானே! அவன் அறையில் இன்னொரு சிநேகிதனும் இருப்பதாகச் சொன்னானே! அவனையும் காணோமே! இருவரும் சினிமா பார்க்கப் போயிருப்பார்களோ?" என்று எண்ணினார்.

யாரையாவது கேட்கலாமென்று சுற்றுமுற்றும் பார்த்தார். பக்கத்து அறையில் உள்ளவர்கள் எல்லாரும் தூங்கி விட்டார்கள். கதவைத் தட்டி அவர்களை எழுப்பிக் கேட்க நினைத்தார். ஆனாலும் அவர்கள் என்ன சொல்லுவார்களோ என்று பயந்து பேசாமல் கீழே இறங்கி வந்து விட்டார். அப்போது வாசலில் காவல்காரன் நின்று கொண்டிருப்பதை அவர் கண்டார். அவன் பக்கத்திலே சென்று, "ஏனப்பா, மாடியிலே ஏழாம் நம்பர் அறை பூட்டியிருக்கிறதே! அதில் சுதர்சன் என்று ஒருவர் இருப்பாரே, அவர் எங்கே? எப்போது வருவார்?" என்று கேட்டார்.

"ஊரிலிருந்து எப்போது வருவார் என்றுதானே கேட்கிறீர்கள்? அதைப் பற்றி அவர் எதுவுமே சொல்லவில்லையே! பாவம், அவருக்கு இருந்த துக்கத்திலே எப்படி சார் அதைச் சொல்லுவார்?" என்றான் காவல்காரன்.

"என்ன! துக்கமா! ஊருக்குப் போயிருக்கிறாரா?" என்று திகைப்புடன் கேட்டார் மதுரநாயகம்.

"ஆமாம் சார். ராத்திரி எட்டு மணி இருக்கும். ஊரிலேயிருந்து ஒரு அவசரத் தந்தி வந்தது. உடனே ரயிலுக்குப் புறப்பட்டுப் போய் விட்டார். கூடவே அவர் அறையிலே இருக்கும் பரமசிவமும் போயிருக்கிறார். இன்னும் திரும்பி வரவில்லை. வெகு நேரமாகி விட்டது."

"தந்தி வந்ததா! என்ன விஷயமாம்? உனக்குத் தெரியுமா?" என்று பரபரப்போடு கேட்டார் மதுரநாயகம்.

"சுதர்சன் இருக்கிறாரே, அவருக்கு ஒரே ஒரு ஆண் குழந்தையாம். அது செத்துப் போய்விட்டதாம். தந்தியிலே அதுக்குமேலே விவரம் இல்லை" என்று காவல்காரன் பதில் சொன்னான்.

இதைக் கேட்டதும், மதுரநாயகம் திடுக்கிட்டார்.

"ஐயோ பாவம், சுதர்சன் ரொம்ப நல்லவன். அவனுக்கா இப்படிப்பட்ட துக்கச் செய்தி வரவேணும்?" என்று அநுதாபப்பட்டார். அத்துடன், "ரமணியின் படம் எழுதித்தருகிறேன் என்றான். அதற்குள் இப்படி ஆகிவிட்டதே! எல்லாம் நம்முடைய கெட்ட காலம்" என்று நொந்து கொண்டே அங்கேயே சிறிது நேரம் நின்று கொண்டிருந்தார். வழியனுப்பப் போன சுதர்சனின் சிநேகிதன் பரமசிவம் திரும்பி வந்தால் முழு விவரமும் தெரிந்து கொள்ளலாம் என்றுதான் காத்திருந்தார். ஆனால் பரமசிவம் பன்னிரண்டு மணி வரை வரவில்லை. 'இனியும் காத்திருப்பதில் பயனில்லை. ஒரு வேளை ஸ்டேஷன் அருகிலே எங்கேனும் தெரிந்த இடத்தில் பரமசிவம் படுத்திருக்கலாம். எப்படியும் காலையில் விஷயம் தெரிந்துவிடும்' என்று நினைத்துக் கொண்டே மதுரநாயகம் வீடு திரும்பினார். திரும்பி வரும்போது, 'சுதர்சனின் குழந்தை இப்படித் திடீரென்று இறந்து விட்டதே!' என்று வருந்தினார். ஒரு புறம் "ம்...ரமணியைக் கண்டு பிடிக்க நல்ல ஏற்பாடு செய்யப் போகும் சமயம் இப்படித் தடங்கல் வந்துவிட்டதே!" என்று எண்ணிப் பெருமூச்சு விட்டார்.

வழியனுப்பச் சென்ற பரமசிவம் இரவுதான் வரவில்லை. மறுநாள் காலையிலாவது வந்தாரா? ஊஹூம், காலையிலும் வரவில்லை; மாலையிலும் வரவில்லை. அந்த இரண்டு நாளும் அடிக்கடி ஆள் அனுப்பிக் கொண்டேயிருந்தார் மதுரநாயகம். அன்று வழியனுப்பப் போன பரமசிவம் அதுவரை திரும்பி வரவேயில்லை என்ற தகவல்தான் கிடைத்தது! (தொடரும்)

எவ்வயதிலும்
எந்த
நிலைமையிலும்



# இருமலை

# பெர்டூஸின்

"டெஷ்னர்"

# மருந்துகள்




எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கிறது.

இடாபா லிமிடெட், ஷான், லீஷென்ஸ்டைன் ஸ்விஸ் கஸ்டம் அண்டு இகனாமிக் டெரிடெரி இவர்களின் அனுமதியின் பேரில்

இன்பா லிமிடெட் தபால் பெட்டி 1041, பம்பாய்-1 இவர்களால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.



# அமர தாரா

அத்தியாயம் 19

## அற்புதம் நிகழ்ந்தது

ஒவ்வொரு விடுமுறையிலும் நான் தங்க பாண்டியனுடன் குங்குமப் பூந்துறை செல்வதைத் தட்டிக் கழித்துக் கொண்டே வந்தேன். இண்டர் பரீட்சை முடிந்து பி. ஏ. வகுப்பில் சேர்ந்து இரண்டு வருஷங்களும் ஆகி விட்டன. சொக்கையாவுடன் தங்க பாண்டியன் விரோதித்துக் கொள்வது சரியல்ல என்று பட்டதால் அவனுடன் போகவில்லை.

நான் பி. ஏ. வகுப்பில் ஸ்ரீ கோதண்டராமனின் தூண்டுதலினால் சரித்திரத்தை முக்கிய பாடமாக எடுத்துக் கொண்டேன். அத்துடன் நில்லாமல் அவருக்குச் சரித்திர ஆராய்ச்சி சம்பந்தமாகப் பல உதவிகள் செய்து வந்தேன். செப்பேடுகள், சிலாசாஸனங்கள், நாட்டுப் பாடல்கள் முதலியவற்றிலிருந்து சரித்திர சம்பவங்களைத் தொகுத்து எழுதுதல், ஒன்றோடொன்றை ஒப்பிட்டுப் பார்த்தல் முதலிய வேலைகள். இந்த வேலைகளுக்காக விடுமுறை நாட்களில் பல ஊர்களுக்குச் சென்று கோவில்களிலும், மண்டபங்களிலும் உள்ள செப்பேடுகள், சிலாசாஸனங்கள் முதலியவற்றை நான் பேராசிரியருக்காக எழுதிக் கொண்டு வருவது வழக்கம். அவர் வீட்டுக் குழந்தைகளுக்குப்பாடம் சொல்லித் தருவதில் நான் ஆரம்பித்தேன். நாளடைவில் அவருக்கே ஒரு உதவியாளனாக ஆகி விட்டேன்.

கோதண்டராமன் அவர்களுக்குப் படித்த

ஆனந்தி

மணியம்

வர்களிடையே நல்ல செல்வாக்கு இருந்தது. அவர் வெளியிட்ட சரித்திர சம்பந்தமான உண்மைகளை எல்லோரும் மதித்தார்கள். அவரிடமிருந்து நான் கற்றுக் கொண்ட விஷயங்கள் எத்தனை எத்தனையோ? என் மனோ பாவத்தின் வளர்ச்சிக்கு அவர்தான் முக்கியமான காரணம் என்று சொல்ல வேண்டும்.

ஒருசமயம் நான் ஒரு ஆராய்ச்சிக் கட்டுரை எழுதினேன். நமது தெய்வத் தமிழ் நாட்டை வெகு காலம் அரசாண்டு பல விதங்களிலும் அதன் சிறப்பு செழித்தோங்கும்படி செய்த பல்லவ அரசர்களைப் பற்றி ஒரு விவாதம் இருந்து வந்தது.

'பல்லவர்கள் வேறு ஏதோ தேசத்திலிருந்து தமிழகத்துக்கு வந்து, அதைக் கைப்பற்றி அரசாண்டார்கள்' என்பது ஒரு சாராருடைய கருத்து.

சிலர் 'செந்தமிழ்நாட்டு அரசகுமாரன் ஒருவன் வெளி தேசத்துக்குச் சென்று, ஒரு அரசகுமாரியை மணந்து கொண்டான். அவனுக்குப் பிறந்த குழந்தை புயற்காற்றுக்குத் தப்பித் தொண்டை நாட்டுக் கடற்கரையில் ஒதுக்கப்பட்டது. அந்தக் குழந்தையே பல்லவ அரசுக்கு அடிகோலினான்' என்று அவர்கள் கூறிக்கொண்டு வந்தார்கள்.

இந்த முரண்பாடான கொள்கைகளை வைத்துக் கொண்டு நான் விரிவான ஒரு ஆராய்ச்சிக்கட்டுரை எழுதினேன்.

தமிழ் நாட்டின் மகோன்னதமான காலம் பல்லவ அரசாட்சிக் காலம். கலைகளிலும், கல்வியிலும், வீரத்திலும் சிறப்புற்றிருந்த காலம் அது. தமிழ் நாட்டையே உயர்த்தும் படியாகத் தமிழ்ப் பண்பாட்டுக்கு உகந்த முறையில் அரசாண்ட பல்லவ மன்னர்களை அயல் நாட்டார் என்று கூறுவது எவ்வளவு அபத்தமான விஷயம் என்று விவரித்து, ஆணித்தரமாக எழுதியிருந்தேன். அதைப் படித்த பேராசிரியர் கோதண்டராமன் மிகவும் என்னை வியந்து பாராட்டி ஒரு பத்திரிகையில் பிரசுரித்தும் விட்டார்.

சாதாரணமாக வேறு யாரும் அப்படிச் செய்திருக்க மாட்டார்கள். அவருடைய பரந்த உள்ளமானது ஒரு எளிய மாணவனை முன்னுக்குக் கொண்டுவர ஆசைப்பட்டது.

ஆனால் நான் எவ்வளவுதான் சரித்திரப் பாடத்தில் ஊக்கமுள்ளவனாக இருந்தாலும் எனக்கு மேல்நாடு சென்று படிப்பதிலேயே தான் ஆர்வம் இருந்தது. இதை நான் ஓரிரு தடவை வெளியிட்டபோது பேராசிரியர் கோதண்டராமன் சற்று ஏமாற்றமடைந்தாரென்று கூடச் சொல்ல வேண்டும்.

"ஏன் ரங்கதுரை? நம் நாட்டில் இருந்து கொண்டே நல்ல வேலை செய்து முன்னுக்கு வர வழியிருக்கும்போது சீமைக்கு எதற்காகப் போக வேண்டும்? உன் ஆசையை நான் கெடுக்கவில்லை. ஆனால் என் சொந்த அபிப்பிராயத்தைச்



சொல்கிறேன். உன்னைப் போன்ற புத்திசாலியான மாணவர்கள் எங்கிருந்தாலும் முன்னுக்கு வரமுடியும். சீமை சென்றுதான் ஆகவேண்டுமென்பதில்லை'' என்றார்.

''என் அன்னையின் மனோரதம் நான் சீமை சென்று படித்து கலெக்டராக வேண்டும் என்பது. அதுவே சிறு வயதிலிருந்தே என் மனோரதமாகவும் ஆகி விட்டது. அதை நான் பூர்த்தி செய்யா விட்டால் வாழ்க்கை முழுதும் நான் கடமையிலிருந்து தவறி விட்டது போன்ற உணர்ச்சி தோன்றிக்கொண்டே இருக்கும் ஸார்! நான் சீமை செல்வதற்குக்கூட நீங்கள்தான் உதவி செய்ய வேண்டும்'' என்று கூறினேன். உடனே அவர் மனம் இரங்கி விட்டது.

''ஆகட்டும் துரை! உனக்கு இருக்கும் ஆர்வத்தை நான் கெடுக்கக் கூடாது. நீ அப்படி மேல்நாடு செல்ல விரும்பினால் அதற்கு நான் ஏற்பாடு செய்கிறேன். உனக்கு உபகாரச் சம்பளம் வாங்கிக் கொடுக்கவும் முயற்சி செய்கிறேன். உன்னுடைய கலாசாலைத் தலைமைப் பேராசிரியரைக் கலந்து கொண்டு எல்லா ஏற்பாடுகளும் செய்கிறேன். நீ இன்னும் ஒரு மாதம் யோசித்து விட்டுச் சொல்லு'' என்றார்.

ஒரு மாதம் சென்ற பிறகும் நான் சீமை செல்ல வேண்டுமென்ற என் ஆர்வத்தை வற்புறுத்திக் கூறவே அவர் அதற்கு உடனே சம்மதித்தார். ''உன்னைப் போன்ற ஒரு உதவியாளனை இழப்பதென்றால் எனக்கு ரொம்ப வருத்தமாக இருக்கிறது'' என்று கூறிவிட்டு



என் பிரயாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்.

ஒரு சங்கத்தாரின் மூலம் அவரும், தலைமைப் பேராசிரியருமாகச் சேர்ந்து எனக்கு மேல்நாடு சென்று படிக்க உபகாரச் சம்பளம் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்தார்கள்.

இதற்கிடையே நாங்கள் பி. ஏ. பரீட்சை எழுதி முடித்தோம். பரீட்சை முடிந்த உடனே தங்கபாண்டியன் என்னை நச்சரிக்க ஆரம்பித்து விட்டான்.

"துரை! நீ சீமைக்குப் போகப் போகிறாய். எப்போது திரும்பி வருவாயோ தெரியாது. அதற்கு முன்னால் நீ கட்டாயம் குங்குமத்துறைக்கு வந்து விட்டுத்தான் போக வேண்டும். மேலும் நீ போய்விட்டால் எனக்குத் தைரியமும் போய்விடும். எனக்கும் வயதாகி விட்டது. ஜமீன் இனிமேல் என்பேரில் மாறவேண்டியதுதான். அதற்கெல்லாம் நீ இல்லாமல் நான் என்ன செய்ய முடியும்? கட்டாயம் நீ இப்போது வந்து இதற்கெல்லாம் ஏற்பாடு செய்து விட வேண்டும்" என்றான்.

"பாண்டியா! நான் தலையிடுவதால் எல்லாக் காரியமும் குட்டிச்சுவராய்ப் போகலாம். என் யோசனைப்படி நீ காரியம் செய்கிறாய் என்று தெரிந்தால் உன் மாமா சும்மா இருப்பாரா? அதனால் நீயே இதையெல்லாம் செய்து கொள்வதுதான் நல்லது."

"இல்லை துரை! என்னால் தனியாக ஒன்றும் செய்து கொள்ள முடியாது. நீ வரவில்லையானால் நானும் உன்னோடு கப்பலேறி விடுகிறேன். ஜமீனைக் கட்டிக் கொண்டு அந்தச் சொக்கையாவே அழட்டும். எனக்கு ஜமீனும் வேண்டாம், சண்டையும் வேண்டாம்" என்று அலுப்புடன் கூறினான்.

"நீ அப்படி ஒருநாளும் சொல்லக் கூடாது, பாண்டியா! ஜமீனில் வேலை செய்யும் ஆட்களெல்லாம் ரொம்பக் கஷ்டப்படுவதாக நீயே கூறினாய். உனக்குச் சண்டை போட விருப்பமில்லாவிட்டாலும், அந்த ஏழை ஜனங்களுக்காகவாவது கட்டாயம் நீ அதைச் செய்துதான் ஆகவேண்டும். நமக்கு ஏற்பட்ட பொறுப்புகளைத் தட்டிக் கழிப்பது கூட கோழைத்தனம்தான். சொக்கையா ஜமீன் ஆட்களைத் துன்புறுத்துவதையும், சொத்துக்களைத் துஷ்பிரயோகம் செய்வதையும் தெரிந்துகொண்டிருந்தும் அதைத் தடுக்காமலிருப்பது மகாபாவம். இத்தனை நாள் நம்மால் முடியவில்லை. பேசாமலிருந்தோம். இப்போதாவது, கட்டாயம் நமது கடமையைச் செய்ய வேண்டாமா?" என்று ஒரு குட்டிப் பிரசங்கம் செய்தேன்.

தங்கபாண்டியன் சற்று மௌனமாக உட்கார்ந்திருந்தான். பிறகு, "நீ சொல்லுவதிலுள்ள நியாயங்களெல்லாம் எனக்கு நன்றாகத் தெரிகிறது துரை. ஆனால் எனக்குத் தன்னந்தனியாக அந்தக் காரியங்களைச் சாதிக்கத் திறமை போதாது என்பது உனக்கே தெரியும். நீ வந்தாயானால் உன்னைக் கலந்து கொண்டு ஏற்பாடுகள் செய்வேன். எனக்குத் தெரியாத விஷயத்தையெல்லாம் நீ வக்கீலிடம் கேட்கலாம். நீ நேரடியாக இவைகளில் சம்பந்தப்பட வேண்டிய அவசியமே இல்லை. நான் கலந்து பேசிக் கொள்ள ஒரு நண்பன் வேண்டாமா? கட்டாயம் நீ வரத்தான் வேண்டும். சீமை செல்வதற்குள் எல்லாப் பொறுப்புக்களும் எனக்கு வருவதற்கு ஏற்பாடு செய்துவிட வேண்டும்" என்று உருக்கமாகக் வேண்டிக் கொண்டான்.

அத்தனை அவன் கூறிய பிறகு போகாமல் இருக்கக் கூடாதென்று எனக்குத் தோன்றியது. ஆகவே, தலைமைப் பேராசிரியரிடமும், கோதண்டராமனிடமும் குங்குமத்துறை செல்ல அனுமதி கேட்கச் சென்றேன். அன்றைய தினத்திலேயே எனக்கு அந்த நல்ல சமாசாரமும் காத்திருந்தது. தலைமைப் பேராசிரியரின் அறைக்குள் நான் நுழைந்ததும் "கங்க்ராஜுலேஷன்ஸ் ரங்கதுரை! உனக்கு உபகாரச் சம்பளம் கிடைத்து விட்டது. இன்னும் மூன்று மாதங்களில் நீ புறப்பட வேண்டும். ஏற்பாடுகள் செய்து கொள்ள நிறையப் பொழுதும் இருக்கிறது. உனக்கு எல்லா நன்மையும் உண்டாகுக" என்றார்.

நான் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினேன்.

கோதண்டராமன் அவர்களிடம் நான் குங்குமத்துறை செல்ல அனுமதி கேட்டதும் அவர் "நீ சீமை செல்ல இன்னும் மூன்று மாதங்கள் இருக்கின்றன. அதுவரை உன் அருமை நண்பனுக்கு வேண்டிய உதவிகளைச் செய்ய வேண்டியது நியாயம்தான். உனக்கு வேண்டிய உடுப்புகள் முதலியவற்றுக்கு நான் ஏற்பாடு செய்து விடுகிறேன். நீ அங்கே போய்ப் பொழுதை வீணாக்காமல் உருப்படியான காரியம் ஒன்று செய்து கொண்டுவா. குங்குமத்துறையில் மலையின்மேல் ஒரு கோட்டை இருக்கிறதாம். அங்கே போய்ப் பார்த்து நமது ஆராய்ச்சிக்கு வேண்டிய விஷயம் கிடைத்தால் சேகரித்துக் கொண்டுவா. மற்றப்படி கப்பல் பிரயாணத்தைப் பற்றியெல்லாம் நீ கவலைப்படவே வேண்டாம்" என்றார்.

அவருக்கு எப்படி நன்றி தெரிவிப்பது என்றே எனக்குத் தெரியவில்லை.

# உலகத்தின்







# மிகச் சிறந்த




# பைசிகிள்களையும்

மற்ற உபகரணங்களையும் இப்பொழுது
இந்தியாவில் தயாரிப்பவர்கள்



ரட்ஜ் ஹம்பர்
ராலே
ராபின்-ஹூட்
பைசிகிள்கள்



SUR

விட்காப்
விட்டுகள்

யூனியன்
தயாரிப்பு

# ஸென்-ராலே

ஸென்-ராலே இண்டஸ்ட்ரீஸ்
ஆப் இந்தியா லிமிடெட்,
கல்கத்தா-1.

SRX-30TM

"உங்களுக்கு......" என்று ஆரம்பித்தேன்.

"அநாவசியமாகப் பேசாதே. நமது பேர்சைக் குறைத்துக் கொண்டால் எத்தனையோ காரியங்களைச் சாதிக்கலாம். போய் விட்டு வா" என்று என்னை வந்தனம் சொல்லக் கூட விடாமல் அனுப்பி விட்டார்.

குங்குமத்துறைக்குத் தங்கபாண்டியனும், நானும் மறுநாள் புறப்பட்டோம். அந்தக் குங்குமத்துறைப் பிரயாணம் என் வாழ்நாள் முழுதும் நான் நினைத்து நினைத்துப் போற்ற வேண்டிய சம்பவமாக அமையும் என்று நான் கொஞ்சங் கூட நினைக்கவில்லை.

குங்குமத்துறையின் அழகைப் பற்றியெல்லாம் தங்கபாண்டியன் எவ்வளவோ தடவை வர்ணித்திருக்கிறான். அந்த ஊரின் அருவிகளைப் பற்றியும் சொல்லியிருக்கிறான்.

இயற்கை அரசி, அழகென்னும் செங்கோலேந்தி அமைதியாக அரசுபுரியும் அந்தப் பிரதேசத்தில் தன் மாமா சொக்கையா கொடுங்கோல் செலுத்துவதைப் பற்றியும் கூறியிருக்கிறான்.

சொக்கையா யார் யாருக்கு மிகவும் தீங்கிழைத்து வந்தார் என்பதையும் கூறினான். தன் தகப்பனார் சுட்டுக் கொலை செய்யப்பட்ட சம்பவத்தைத் துயரத்துடன் ஒரு சமயம், நாங்கள் நண்பர்களான புதிதில் கூறினான்.

"என் தகப்பனாரைக் கொன்றது யார் என்ற விஷயத்தை இதுவரை யாரும் கண்டு பிடிக்கவில்லை. என் மாமா சொக்கையா, என் தகப்பனாருக்கு உதவியாகச் சிலகாலம் இருந்த காசிலிங்கம் என்பவர்தான் அவரைக் கொன்றுவிட்டாரென்று கூறினார். முதலில் நான் அதை நம்பினேன்......"

"யார் பேரிலாவது இன்னொருவர் குற்றம் சுமத்தினால் அதை நம்பவே கூடாது பாண்டியா. இதை என் சொந்த அனுபவத்திலிருந்து கூறுகிறேன்" என்று நான் குறுக்கிட்டேன்.

"வாஸ்தவந்தான் துரை. அந்தக் காசிலிங்கத்தின் வீட்டு மனிதர்களை நான் அதனால் வெறுக்கத் தொடங்கினேன். அப்போது நான் ரொம்பச் சிறியவன்தானே? சொக்கையா மாமாவைப் பற்றி நான் அறிந்திருக்கவில்லை. அதனால் நம்பினேன். நாளடைவில் அவரைப் பற்றித் தெரிந்து கொண்ட போது அவர் கூறிய எந்த விஷயத்திலும் எனக்கு நம்பிக்கை இல்லாமல் போய்விட்டது. காசிலிங்கத்தின் மனைவியையும், பெண்ணையும் காப்பாற்றி வருகிற மந்திரமூர்த்திப் பண்ணையாரிடம், குடியானவர்களெல்லாம் ஒரு தந்தை மாதிரி அன்பு செலுத்தி வருவதைத் தெரிந்து கொண்டேன். சொக்கையா வேலையிட்டால் வெறுப்புடன் செய்யும் ஆட்கள், பண்ணையாரிடம் சந்தோஷமாகவும் உற்சாகமாகவும் வேலை செய்கிறார்கள் என்பதை ஜமீன் காரியஸ்தர் மூலமாகத் தெரிந்து கொண்டேன்."

"ஆமாம், பாண்டியா! பாட்டாளி மக்களை விரட்டி விரட்டி வேலை வாங்குவது முறையல்ல. அவர்கள் அன்போடும், ஊக்கத்தோடும் வேலை செய்யும்படி நாம் செய்ய வேண்டும். ஜமீன் உன் கைக்கு வந்த உடனே நீ அந்தமாதிரி இருக்கலாம்."

"ஜமீன் என் கைக்கு வரும் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. அதற்குள் ஜமீனே இல்லாமல் போய் விடும் போல் இருக்கிறது. அது போனால் போகட்டும். இந்த மந்திரமூர்த்திப் பண்ணையாரிடம் விரோதித்துக் கொண்டிருப்பது தான்



எனக்கு வருத்தமாக இருக்கிறது. மாமாவால் அவருக்கு எவ்வளவு கஷ்ட நஷ்டங்கள் ஏற்பட்டிருக்கின்றன தெரியுமா? அவருடைய நிலமெல்லாம் கோர்ட்டு விவகாரங்களினால் அநேகமாக அழிந்து போய் விட்டது."

"சொக்கையா செய்யும் காரியத்துக்கு நீ பொறுப்பாளியாக முடியாது. ஆனால் அவரிடம் நீ விரோதம் பாராட்டாமல் இருந்தால் போதும். அடுத்த விடுமுறைக்குப் போகும்போது அவரைப் பார்த்து, 'எனக்கு உங்களிடம் ஒரு விரோதமும் இல்லை' என்று சொல்லி விட்டு வா. உனக்கு இஷ்டமிருந்தால் 'காசிலிங்கம் என்பவர் உன் தந்தையைக் கொன்றார்' என்ற வதந்தியை நீ நம்பவில்லை என்று கூடச் சொல்லலாம்" என்றேன்.

அடுத்த தடவை தங்கபாண்டியன் குங்குமத்துறைக்குச் சென்று விட்டுத் திரும்பி வந்தபோதுதான் அந்த மந்திர

# ஹாஸ்யக் களஞ்சியம்







மூர்த்திப் பண்ணையாரைப் பார்த்து விட்டு வந்ததாகக் கூறினான்.

"நீ சொன்னபடி செய்த பிறகுதான் எனக்கு மன நிம்மதி ஏற்பட்டிருக்கிறது, ரங்கதுரை. அவரைப் பார்த்தாலே எவ்வளவு நல்லவரென்று தெரிகிறது. அவர் வளர்த்து வரும் காசிலிங்கத்தின் பெண்ணைக் கண்டபோதெல்லாம் நான் ஆத்திரப்பட்டுப் பேசியிருக்கிறேன். அதைப் பற்றிக் கூறி நான் மன்னிப்புக் கேட்டபோது அவர் மன்னிப்பே அவசியமில்லை என்று கூறினார். அவர் அதைச் சிறிதும் பொருட் படுத்தவில்லை."

"உண்மையில் அவர் நல்லவராகத்தான் இருக்க வேண்டும். கொலைக் குற்றம் சாட்டப்பட்டு, சிறையிலிருந்து விட்டு, ஓடி வேறு போய்விட்ட ஒருவருடைய மனைவியையும் பெண்ணையும் வைத்து ஆதரிப்பதற்கு எவ்வளவு விசாலமான மனப்பான்மைவேண்டும்?"

"ஆமாம்! ஊரார்ின் வாய் வேறு கேட்க முடியாது. மாமாவே காசிலிங்கத்தின் குடும்பத்தைப் பற்றிப் பலவிதமான வதந்திகளைப் பரப்பி விட்டிருக்கிறார். அவர்கள் வீட்டுக்கே யாரும் அதிகமாகப் போவதில்லை. அவர்களையும் வெளியே பார்க்க முடியாது. அந்தப் பெண் இந்துமதியும் நானும் ஒரே பள்ளிக்கூடத்தில் கொஞ்ச நாள் படித்தோம். அப்போதெல்லாம் அவளைப் பார்க்கும்போது என் நண்பர்கள் 'திருடனுடைய பெண் வருகிறாள்!' என்று தங்களுக்குள் சொல்லிக்கொள்வார்கள்."

"ஐயோ! பாவம்! அந்தப் பெண்ணுக்குத் தெரிந்தால் எவ்வளவு வருத்தப்படுவாள்? நானும் கிட்டத்தட்ட அதே நிலையில் இருந்தவன்தான், பாண்டியா! பெற்றோர் செய்த தவறுகளுக்காக, சிறுவர்களை அவமதிப்பதும் துன்புறுத்துவதும் ரொம்பக் கொடுமை. அந்த வேதனை எப்படிப்பட்டதென்பது எனக்குத்தான் தெரியும்" என்றேன். அப்போதே எனக்கு முன்பின் தெரியாத அந்தப் பெண்மீது மிகவும் இரக்கம் பிறந்து விட்டது.

ஆனால் அவள் எவ்வளவு தூரம் பின்னால் என் வாழ்க்கையில் இணையப் போகிறாள் என்பதை அப்பொழுது நான் நினைத்துப் பார்க்கவே இல்லை. தங்கபாண்டியன் அவள் அழகைப் பற்றி மட்டும் ஒன்றும் கூறவில்லை. அவன் கூறியிருந்தாலும் நான் பொருட்படுத்தி யிருக்க மாட்டேன். நான் போகும்போது ரயிலில் நினைத்துக்










கொண்டு போன விஷயங்களுக்கும் திரும்பி வரும்போது கண்ட கனவுகளுக் கும்தான் எவ்வளவு வித்தியாசம்?

ரயில் பிரயாணத்தின்போது நான் தங்கபாண்டியனிடம் "நாம் இப்போது போவது சரியா என்று எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. பாண்டியா! போன உடனே உன் மாமா பெரிய ரகளை பண்ணினால் நீ என்ன செய் வாய்?" என்றேன்.

"ரங்கதுரை! என்னைப்பற்றிக் கவலைப் படாதே. எனக்கு அவர் என்ன செய் தாலும் கவலை இல்லை. எத்தனை நாள் தான் அவருக்கு அடிமையாக இருக்க முடியும்? எனக்கு ஒரே கவலைதான். அவர் ஏதாவது சத்தம் போட்டு, சண்டை பிடித்து ஏதாவது செய்தால் நீ வருத்தப்படமாட்டாயே. அவமானம் என்று எண்ணிக் கஷ்டப்பட மாட் டாயே?" என்றான்.

"இன்னுமா நீ என்னைத் தெரிந்து கொள்ளவில்லை? உன்னுடைய வீட் டுக்கு நீ என்னை அழைத்துப் போகி றாய். உன் மாமா என்ன சொன்னாலும் எனக்கு லட்சியமில்லை. 'இவனை அழைத் துக்கொண்டுவராமல் இருந்திருக்கலாம்' என்று நீ நினைத்தால்தான் எனக்கு அவமானமாக இருக்கும். அதைத் தவிர வேறு யார் என்ன சொன்னாலும் எனக் குக் கவலை இல்லை."

"நான் ஒருகாலும் அப்படி வருத் தப்படமாட்டேன், துரை! நான் இது வரை மகா கோழையாகத்தான் இருந் தேன். போன வருஷம் கூட நீ கூறிய மாதிரி நினைத்திருப்பேன். ஆனால் இப் போது நான் ரொம்பத் துணிந்து விட்டேன். பயந்து பயந்து வாழ்வதைப் போன்ற பயங்கரம் எதுவுமே இல்லை. நீ கூடிய சீக்கிரம் என் மாறுதலைத் தெரிந்து கொள்வாய். பார்த்துக் கொண்டே இரு" என்று கூறினான்.

அதைக் கூறும்போதே அவனுடைய கண்கள் பளபளவென்று ஜொலித்தன. இவன் இவ்வளவு உணர்ச்சி வசப்படும் படி என்ன ஆகிவிட்டது என்று நான் சிந்தனை செய்தேன்.

சொக்கையாவைப் பற்றிய பேச்சை மாற்றுவதற்காக, "கோதண்டராமன் என்னை அங்கே உள்ள மலைக்கோட்டை, கோயில் எல்லாவற்றையும் பார்த்து விட்டு வரச் சொல்லியிருக்கிறார். உன் பாட்டனுக்குப் பாட்டனார் அரசாண்ட தைப் பற்றியெல்லாம் விவரமான

செய்திகள், விவரங்கள் உங்கள் ஜமீனில் கிடைக்குமா?'' என்று கேட்டேன்.

தங்கபாண்டியன் அசிரத்தையோடு பதில் சொன்னான்: ''உயிரோடு இருப்பவர்களின் குறைநிறைகளைப் புரிந்து கொண்டு அவர்களோடு வாழவே முடியவில்லை. ஐந்தாறு தலைமுறைகளுக்கு முன்னால் வாழ்ந்து செத்துப் போனவர்களைப்பற்றி யெல்லாம் விவரம் சேகரித்து எழுதி, அதற்குச் சரித்திரம் என்ற பெயர் கொடுத்து அமர்க்களப்படுத்துவது ரொம்ப அனாவசியம் என்பது என் அபிப்பிராயம். அதிலும் என் மூளையைக் குழப்புவதற்காகவே சரித்திரப் பாடம் ஏற்படுத்தி யிருக்கிறார்களென்று எனக்குத் தோன்றுகிறது.''

நான் வாய்விட்டுச் சிரித்து விட்டேன். நான் சிரித்ததும் தங்கபாண்டியனின் முகம் சிறுத்து விட்டது.

''நீ இதற்காக வருத்தப்பட வேண்டாம், பாண்டியா! உன்னைப் பார்த்து நான் சிரிக்கவில்லை. நீ சொன்ன விதம் என்னைச் சிரிக்க வைத்தது. உனக்கும் எனக்கும் உள்ள மன வேறுபாடுகளையும், நாம் இவ்வளவு அத்யந்த நண்பர்களாக இருப்பதையும் நினைத்தால் எனக்கு வியப்பாக இருக்கிறது.''

''என்ன மன வேறுபாடுகளைக் கண்டு பிடித்து விட்டாய்? சொல்லேன்.''

''நான் லட்சியத்திலும், கனவுகளிலுமே சஞ்சரிப்பவன். உனக்கு அவற்றில் நம்பிக்கை கிடையாது. ''ப்ராக்டிகல் மைண்ட்'' என்று ஆங்கிலத்தில் சொல்கிறார்களே, அந்த மாதிரி மனம் படைத்தவன் நீ. நமக்கு ஒரு காரியம் ஆக வேண்டி யிருக்கிறதென்று வைத்துக் கொள்வோம். நீ அந்தக் காரியம் என்ன செய்தால் நம் இஷ்டப்படி நடக்கும் என்று சிந்திப்பாய். நான் அது எப்படி நடக்க வேண்டும் என்று யோசிப்பேன். உலகத்தில் நாம் இரண்டு பேரும் வாழ வேண்டியவர்கள்தான். என் மாதிரி மனிதர்களே இருந்தால் ஒரு காரியமும் நடைபெறாது. உன்னை மாதிரியே எல்லாரும் இருந்தால் லட்சியமே இல்லாமல் போய் விடும்!'' என்று கூறிவிட்டுச் சிரித்தேன்.

தங்கபாண்டியனும் சிரித்தான். ''அப்படியானால் சரி. உனக்குச் சரித்திர ஆராய்ச்சிக்கு வேண்டிய விஷயங்கள் ஜமீனில் கிடைக்குமோ கிடைக்காதோ, தெரியாது. அரண்மனைப் புஸ்தகசாலையில் தேடினால் ஏதேனும் கிடைக்கலாம். அல்லது பாதாளக் கிடங்கில் கிடக்கும் குப்பைகளைக் கிளறினால் கிடைக்கும். மந்திரமூர்த்திப் பண்ணையாரிடம் சென்றால் உனக்குச் சுலபமாகப் பல விஷயங்கள் தெரியும். அவர் எத்தனையோ கதை கதையாகப் பாட்டுப் பாடுவார் என்று கேள்வி. குங்குமத்துறையில் அவரைப் போல் விஷய ஞானம் உள்ளவர்கள் கிடையாதென்று ஜமீன் காரியஸ்தரே கூறி யிருக்கிறார்'' என்றான்.

* * *

நாங்கள் திருநந்திபுரம் ரயில்வே ஸ்டேஷனில் இறங்கினோம். ஜமீன் காரியஸ்தர் வந்திருந்தார். அவரைப் பின்னால் சாமான்களை எடுத்துக்கொண்டு வில் வண்டியில் வரச் சொல்லி விட்டுத் தங்கபாண்டியனும் நானும் காரில் புறப்பட்டோம். நான் குங்குமத்துறையின் அழகை யெல்லாம் அப்போதே அனுபவிக்க விரும்பினேன். ஆகவே தங்கபாண்டியனிடம், ''போகும்போதே இந்த ஊரின் மலய மாருதத்தை அனுபவித்துக் கொண்டு போக வேண்டாமா? காரின் மூடியை மடக்கி விடச் சொல்லு'' என்றேன்.

அந்தத் திறந்த காரில் மனோரம்யமான மந்தமாருதத்தை அனுபவித்துக் கொண்டும், குங்குமப் பூந்துறையின் இயற்கை அழகுகளைப் பார்த்து ரஸித்துக் கொண்டும் நாங்கள் இருவரும் ஊர்வலம் செல்வது போல் சென்றோம்.

திருநந்திபுரத்தி லிருந்தே, தூரத்தில் வெளிறிய நீல நிறமான ஆகாயத்தில் கருநீல நிறக் கோடுகளாக மலைத் தொடர்கள் தெரிந்தன. திருநந்திபுரத்தின் எல்லையைத் தாண்டியதும் என் நெஞ்சம் அப்படியே பரவசமடைந்தது. கார் ஓட்டியை மெதுவாகப் போகும்படி கூறிவிட்டுத் தங்கபாண்டியனிடம் ஒவ்வொரு இடத்துக்கும், ஒவ்வொரு ஓடைக்கும் என்ன பெயரென்று கேட்டுத் தெரிந்து கொண்டேன். ஒவ்வொரு பெயருக்கும் பின்னால் ஒளிந்திருக்கும் ரஸமான கதையையும் கேட்டேன்.

எல்லா ரஸத்தையும் தோற்கடிக்கும் வண்ணம் ஒரு ரஸமான சம்பவம் குங்குமத்துறையின் எல்லைக்குள் வண்டி புகுந்ததும் நடைபெற்றது.

வண்டி 'ஹாரன்' சப்தம் காதைத் துளைத்தது. ஒரு திருப்பத்தில் வண்டி திரும்பியது. அப்போதுதான் அந்த அற்புதம் நிகழ்ந்தது.

கன்றுக் குட்டி ஒன்று துள்ளி ஓடி வந்தது. அதன் தும்பைப் பிடித்துக் கொண்டு ஒரு மான்—இல்லை, இல்லை—ஒரு பெண் ஓடி வந்துகொண்டிருந்தாள்.

கார் அந்தப் பெண்ணின் சமீபத்தில் போய் ஒரு ஆட்டத்துடன் நின்றது. அப்போதுதான் அவள் இருந்த ஆபத்தான நிலை எனக்குத் தெரிந்தது. ''ஓ! மை காட்!'' என்ற சொற்கள் என்னை யறியாமல் வாயிலிருந்து வந்தன. (தொடரும்)

# திருட இயலாத குடும்ப சைஸ் பாக்கில்

# 'அனாஸின்'

## வாங்குங்கள்

'அனாஸின்' 32 வில்லைகள் கொண்ட டப்பா ஒவ்வொரு முறையும் நீங்கள் வாங்கும்பொழுது 4 அணாக்கள் மிச்சமாகின்றன. அனாஸினை எப்பொழுதும் கையோடு வைத்துக்கொள்ளும் குடும்பங்களுக்காகவே இந்த டப்பாவை பிரத்தியேகமான முறையில் அமைத்திருக்கிறோம். அனாஸினை அவர்கள் சதா வைத்திருப்பதற்கு காரணம் அதில் வலி நிவாரணத்தை விரைவில் அளிக்கும் 4 மருந்துகள் அடங்கியிருப்பதே:

1. **கொயினா:** ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. **காப்பின்:** பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் மிதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. **பினாஸிடின்:** ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. **ஆஸிடில் ஸலிஸிலிக் ஆஸிட்:** தலை வலி அது போன்ற எல்லா வலிகளையும் போக்கடிப்பதற்கு மிகவும் உபயோகமுள்ளது.

அனாஸினில் அடங்கியிருக்கும் இந்த நான்கு மருந்துகள் நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து, பத்திரமாகவும், நிச்சயமாய், விரைவில் நிவாரணமும், தலைவலி, ஜுரம், ஜலதோஷம், பல்வலி மற்றும் தசை நார்களில் நோவு முதலியவற்றை போக்குகின்றது.




'அனாஸின்' 2 வில்லைகள் கொண்ட பாக்கெட்டுகளிலும் கிடைக்கும்.

எப்பொழுதும் **அனாஸின்** வில்லைகளே வேண்டுமென்றே கேளுங்கள்

A. 45

# படித்துப் பாருங்கள்!

## 1. நாடும் மன்னனும் (கம்பன் கலை)
## 2. அரசியர் மூவர் ,,

கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர் இயற்றிய ராமாயண காவியத்தின் கவிநயங்கண்ட புலவர் பெருமக்கள் பலர், அம் மாபெருங் காவியத்தைப் பற்றிப் பல ஆராய்ச்சி நூல்களையும் விமரிசன நூல்களையும் இயற்றி வெளியிட்டிருக்கின்றனர். மேற்படி நூல்கள் கம்பரின் கவி நயங்களையும், கம்பராமாயணத்தின் காவியச் சுவையையும் நுகர்ந்து நன்கு அநுபவிக்கத்தக்க சாதனங்களாக விளங்குகின்றன.

மேற்படி ஆராய்ச்சியாளர்களுள் திரு அ. ச. ஞானசம்பந்தம் அவர்கள், இலக்கியத் திறனாய்வுக் கலையில் மிகவும் நுண்ணிய அறிவுடன் நீண்ட நாள் ஆராய்ந்தவர்; கம்பராமாயணக் காவியச் சோலையின் மணத்தை நுகர்ந்து, இது இன்னின்ன மலரின் மணம் என்று பகுத்துக் கூறி, காவியப் பிரிவுகளையும், அப்பிரிவுகளில் கூறப்படும் காவியப் பாத்திரங்களையும் நல் வடிவங்களோடு நமக்கெல்லாம் நல்கியவர்.

ராமாயணத்தில் த ச ர த னை எடுத்துக் கொண்டு அவனுடைய ஆசாபாசங்களையும், அவனது இதய அந்தரங்கத்தில் ஓடிய வினைப் போட்டங்களையும், நாடும் மன்னனும் என்ற நூலில் நன்கு விளக்குகிறார்; அம் மாபெரும் மன்னன் மனைவியிடத்தில் ஆசையும், மைந்தனிடத்தில் பாசமும், குடி மக்களிடம் நேசமும், பெரியோர்களிடம் விசுவாசமும் கொண்டு வாழ்ந்த பெருவாழ்வும், சூழ்ச்சியின் வசப்பட்டு அவன் தவித்த தவிப்பும் மேற்படி கட்டுரையில் விரிவாக இடம் பெற்றிருக்கின்றன.

"கோசலம் என்னும் கனவு", "கோசல மக்கள் வாழ்வு முறை" என்னும் தலைப்புக்களில் மிகவும் சுவையோடு நாட்டு வளத்தையும் நகர மக்களின் பண்பையும் அவர்களது நல் வாழ்வையும் நன்றாக விளக்கி யிருக்கிறார்.

"அயோத்தி வேந்தன்", "விசுவாமித்திரன் வருகை", "அரசியல் சூழ்ச்சி" ஆகிய பிரிவுகளில் தசரதனின் தனித் தன்மையும் அவனது மன உணர்ச்சிகளும், கோபதாபங்களும் கம்பர் கவிதைகளின் துணையுடன் விளக்கப்பட்டிருக்கின்றன.

"கவிஞன் துயரும் மன்னன் துயரும்" என்ற இந்நூலின் கடைசிப் பகுதி கம்பரையும் தசரதனையும் ஒப்பிட்டுப் பார்த்து, தசரதனது வாழ்வில் தம்மையே கண்டார் கம்பர், தம் உள்ளத்து உணர்வைத் தசரதனிடம் புகுத்திக் காவியத்தில் அரங்கேற்றினார் என்று ஆராய்ச்சித் திறனுடன் விளக்கியிருப்பது மிகவும் பாராட்டுக்குரியது. விலை : ரூ. 1—8—0.

"அரசியர் மூவர்" என்ற நூலில் கௌசல்யை, கைகேயி, சுமித்திரை ஆகிய கோசல நாட்டு மூன்று அரசியர்களையும் பற்றிய பண்புநலன்களை ஆசிரியர் ஆராய்ந்து கூறுகிறார்.

நூலின் முற்பகுதியில், கூனியின் பாத்திரம் உருவெடுக்கிறது. ஸ்ரீ ராமனையும் சீதையையும் படைத்த கவிஞன்தான் கொடுமனக் கூனியையும் படைத்தான்; இலங்கை வேந்தன் ராவணனையும் படைத்தான். இப் பாத்திரங்களைப் பற்றிப் படிக்கும் பொழுது நாம் அவர்கள் மூலம் கவிஞனின் ஆற்றலைத்தான் காண வேண்டும். இதை, "சூழ்ந்த தீவினை" என்னும் கட்டுரையில் நன்றாய்க் கூறி, 'வேதனைக் கூனி,' ராமனிடம் கைகேயி கொண்டிருந்த தாயன்பைக் கலைத்து, அவள் உள்ளத்தில் பொறாமை என்னும் விஷ வித்தை ஊன்றுவதற்குக் கையாண்ட உத்திகளை, கம்பர் வாக்கைக் கொண்டே விளக்கியிருக்கிறார், ஆசிரியர்.

"முதல் தேவி கோசலை," கௌசல்யா தேவியைப் பற்றிய முதல்தரமான கட்டுரை. அவளுடைய பொறுமை, பெருந்தன்மை முதலிய குண விசேஷங்களெல்லாம் மேற்படி கட்டுரையில் நன்கு விளக்கம் பெற்றிருக்கின்றன. கோசலையின் தாயுள்ளம், நீண்ட நாள் மக்கட்பேறின்மை காரணமாக அவ்வுள்ளத்தில் ஊறி வந்த ஏக்கம், அன்னை கோசலையின் அறவுரை முதலிய சிறப்பியல்புகளெல்லாம் விரிவாக ஆராயப் பட்டிருக்கின்றன.

ஒவ்வொரு பாத்திரமும் மனித இயல்புகளை ஒட்டி இயங்குவதும், மனித இதயத்தோடு ஒட்டி வளருவதும் கம்பர் காவியத்தின் தனிப் பெரும் சிறப்பாகும்.

"கம்பநாடன் காப்பியமாகிய அரிய பூங்காவில் அனைத்து வகையான பூக்களையும் காணலாம். அவற்றுள் மணத்தால் சிறந்தவை சில; நிறத்தால் சிறந்தவை சில; இனிய தேனுடைமையால் சிறந்தவை சில; மருந்தாகி நிற்பதால் சிறந்தவை சில; பெரிய வடிவு பெற்றமையால் சிறந்தவை சில; சிறிய வடிவுபெற்றும் சிறந்தவை சிலவாம்" என்று ஆசிரியர் கூறியிருப்பது முற்றிலும் உண்மை. அவ்வுண்மை இந்நூல்களில் நல்லுருவம் பெற்றிருக்கின்றது. ஆசிரியர் ஆங்கில விமரிசன ரீதியில் இம்மாதிரி அரிய பெரிய ஆராய்ச்சி நூல்களை மேலும் மேலும் எழுதி வளரும் தமிழுக்கு ஆக்கம் தருவார் என்று ஆர்வத்தோடு எதிர்பார்க்கிறோம். விலை : ரூ. 1-8-0.

ஆசிரியர் : அ. ச. ஞானசம்பந்தம்; கிடைக்கும் இடம்: பாரிநிலையம், 59, பிராட்வே, சென்னை—1.

## உதயம் (மாதப் பத்திரிகை)

திரு கன்னிக் கண்ணனை ஆசிரியராகக் கொண்டு, கன்னித் தமிழுக்குப் பணி செய்யும் பரந்த நோக்கத்துடன், இலக்கிய வானில் "உதயம்" உதயமாகி யிருக்கிறது.

அரசியல் தலையங்கம், சுவை மிகும் கட்டுரைகள், இனிக்கும் சிறுகதைகள், சிந்தனைக்கு விருந்தாகும் கவிதைகள் முதலிய சிறந்த அம்சங்களுடன் மூவர்ண அட்டைப் படத்தையும் தாங்கிக் கொண்டு சிறப்பாக வெளி வந்து சேவை செய்யும் "உதயம்" உதய சூரியனின் ஒளியுடன் விளங்குகிறது.

"உதயம்" காரியாலயம், 6/58, பெல்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி, சென்னை-5. விலை : தனிப்பிரதி அணா 4.

—விஜயம்

# தமிழ் கூறும் நல்லுலகம்

பம்பாய் கலா நிலயத்தின் ஆறாவது வருஷாந்திரக் கொண்டாட்டம் இந்த மாதம் 3, 4 தேதிகளில் நடைபெற்றன.

அவ்வமயம் கலா மன்றத்தின் அங்கத்தினர்களால் 'வாழ்விலே', 'டாக்டர் அண்டு தி டெவில்' என்ற இரு தமிழ் நாடகங்களும், 'கொன்னயா கொடுக்கு' என்ற சிறிய கன்னட நாடகமும் நடிக்கப்பட்டன.

'வாழ்விலே' என்ற நாடகத்தில் சாம்புவாக நடித்த ஸ்ரீ பாண்டுரங்கன் ஆரம்ப முதல் முடிவு வரை ஹாஸ்யமாகப் பேசி, அழகாக நடித்துச் சபையோர்களைக் குலுங்கக் குலுங்க நகைக்கும்படி செய்து விட்டார். ஸ்ரீ டி. கே. சுப்ரமணியம் புதல்வி குமாரி சுப்புலக்ஷ்மி இந் நாடகத்தில் கதாநாயகியாக வந்து, நாட்டியமும் ஆடியது குறிப்பிடத் தக்கது.

மற்ற நாடகங்களும் நன்றாக இருந்தன. எல்லோருமே தங்கள் பாகங்களை நன்கு உணர்ந்து திறம்பட நடித்தனர்.

தங்கள் தங்கள் தொழில்கள் நிமித்தமாகப் பம்பாயில் குடியேறியுள்ள கலா நிலயத்தின் அங்கத்தினர்கள் தங்கள் ஓய்வு நேரத்தை வீணாகக் கழிக்காமல் மூக் கலைகளுள் ஒன்றான நாடகக் கலைக்குப் பயன்படுத்தி வருவது போற்றுதற்குரியதாகும். இதுவரை கலா மன்றத்தினர் சுமார் பன்னிரண்டு நாடகங்கள் நடத்தி யுள்ளனர்.

★

சென்ற மாதம் அமெச்சூர் நாடகக் குழுவினர் தங்கள் 15-வது ஆண்டு விழாவை மிகவும் விமரிசையாகக் கொண்டாடினர். அவ்விழாவை ஒட்டி 'இதயத்தில் ஓர் இடம்', 'பக்த துளசிதாஸ்', 'துப்பறியும் சாம்பு' என்ற மூன்று நாடகங்களையும் நடத்தினார்கள்.

எல்லா நாடகங்களும் மிகவும் நன்றாக இருந்தன. கடைசி நாள் நடந்த துப்பறியும் சாம்பு மிகவும் நன்றாக இருந்தது.

★

இந்தியாவிலேயே அதிக அங்கத்தினர்கள் அதாவது 3000 பேர்களுக்கு மேல் கொண்ட பம்பாய் ஸ்ரீ ஷண்முகானந்த சபையினர் வருகிற ஜனவரி மாதம் ஆறாம் தேதி முதல் 19ந் தேதி முடிய சங்கீத நாடக விழாவை நடத்தப் போகின்றனர்.

தமிழ் நாட்டுக்கே உரியதான மங்களகரமான நாகஸ்வரக் கச்சேரியுடன் ஆரம்பமாகும் இவ்விழாவில் ஸ்ரீமான் அரியக்குடி ராமானுஜ அய்யங்கார், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி, ஸ்ரீமான் செம்மங்குடி சீனிவாச அய்யர், ஸ்ரீமான் மதுரை மணி அய்யர் முதலியோரின் சங்கீதக் கச்சேரியும், ஸ்ரீமதி கமலாவின் நாட்டியமும், திரு டி. கே. எஸ். சகோதரர்களின் 'ராஜராஜ சோழன்', 'எது வாழ்வு!' 'கள்வனின் காதலி' ஆகிய நாடகங்களும் நடைபெற விருக்கின்றன.

சங்கீத விழாவைப் பம்பாய் முதலமைச்சர் ஸ்ரீ மொரார்ஜி தேசாய், அவர்களும் நாடக விழாவை டாக்டர் சி. பி. ராமஸ்வாமி அய்யரும் துவக்கி வைக்கப் போகின்றனர்.

பம்பாய் மாதுங்கா ஆஸ்திக சமாஜத்தில் ஸ்ரீ காரைக் குறிச்சி ராமநாத சாஸ்திரிகள் அவர்கள் அக்டோபர் மாதம் 10ந் தேதி முதல் ஸ்ரீமத் பகவத்கீதை காலக்ஷேபமும் தொடர்ந்தாற்போல் வால்மீகி ராமாயணமும் சொன்னார்கள். அவர் தமது பக்தியினாலும், சொல் வன்மையினாலும் மாதுங்காவில் உள்ள ஆஸ்திகர்களை மிகவும் பரவசப்படுத்தினார். இந்த மாதம் பதினோராந் தேதி இராமாயணப் பட்டாபிஷேக வைபவம் மிகவும் விமரிசையாக நடந்தேறியது.

★

சென்ற மாதம் தஞ்சை, ராமநாதபுரம் முதலிய ஜில்லாக்களில் வீசிய கடும் புயலினால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவி செய்யும் பொருட்டுப் பம்பாயில் திரு டி. எஸ். ராமானுஜம் அவர்கள் தலைமையில் ஒரு கமிட்டி ஏற்படுத்தியுள்ளார்கள். பம்பாயில் வசிக்கும் தமிழர்கள் தங்கள் சகோதரர்களுக்காகத் தங்களால் இயன்ற அளவு ஒரு சிறு தொகையை அளிக்குமாறு அக்கமிட்டியினர் வேண்டுகோள் விடுத்துள்ளனர். —ஆர். கண்ணன்

★

தமிழ் நாட்டுக்கு வெளியில் சென்று வாழும் தமிழ் மக்கள் எந்தச் சமயத்திலும் தங்கள் நாட்டை மறப்பதில்லை. சமயம் நேரும் போதெல்லாம் தங்கள் அன்பையும் நன்றியையும் தங்கள் நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் காட்டத் தவறுவதில்லை.

தமிழகத்தில் கடும் புயலாலும் அதையடுத்துப் பெரும் வெள்ளத்தினாலும் பாதிக்கப்பட்டுள்ளோருக்கு நிவாரணம் அளிக்கும் பொருட்டு, சிங்கப்பூர் நாட்டுக்கோட்டை செட்டியார் சமூகத்தினர் ரூ. 5001—(ரூபாய் ஐயாயிரத்து ஒன்று) நன்கொடையைச் சென்னை ராஜ்ய முதலமைச்சர் திரு காமராஜ் நாடார் அவர்களுக்கு அனுப்பியுள்ளனர் என்று அறிந்து அவர்கள் மனப் பண்பைப் பெரிதும் பாராட்டுகிறோம்.

★

குந்தக்கல் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் சென்ற 10ந் தேதியன்று பேராசிரியர் கல்கி தினம் ஸ்ரீ எம். ஜி. மகாதேவன் தலைமையில் வெகு சிறப்பாக நடைபெற்றது. காரியதரிசி ஸ்ரீ கே. சுந்தரராமன் அனைவரையும் வரவேற்கையில், ஸ்ரீ கல்கி தம் தெளிவான நடையில் எழுதிய கதைச் செல்வங்கள் மூலம் தமிழ் இலக்கியத்தை வளரச் செய்தார் என்றும், அவர் கதைகளைப் பிற மொழிகளில் மொழி பெயர்த்து உலக மக்கள் அனைவரும் படித்து இன்புறச் செய்வதும், சிறுகதை இலக்கியத்தை வளரச் செய்வதும்தான் நாம் அவருக்குச் செய்யும் மரியாதை என்றார். ஸ்ரீமான்கள் பி. கே. கோபாலன், ஆர். சிங்கன், ஆர். சந்தானம் ஆகியோர் ஸ்ரீ கல்கி கலை, இலக்கியம், அரசியல் முதலிய துறைகளில் செய்த சேவைகளையும் அவரது நகைச்சுவை உணர்ச்சியைப் பற்றியும் விரிவாகச் சொற்பொழிவாற்றினர்.




## உடம்புக்குப் பொருந்தாதபடி உங்களுடைய உடைகள் ஒருபொழுதும் சுருங்கவே செய்யாது

சுருக்கம் செய்யப்பட்ட உடைகள் உங்களுக்கு இனிமேல் ஒருக்காலும் தொந்திரவு கொடுக்காது. நீங்கள் பருத்தித் துணியையோ அல்லது ரெடிமேட் உடைகளையோ வாங்கும்பொழுது 'ஸான்போரைஸ்ட்' (Sanforized) டிரேட் மார்க் இருக்கிறதா என்று மாத்திரம் பாருங்கள். இதனால் உங்களுடைய உடைகள் எத்தனைமுறை சலவை செய்யப்பட்டாலும் எப்பொழுதும் அவைகளின் சரியான அளவில் இருக்கும்.

இந்தியாவின் முதன்மையான மில்கள் இப்பொழுது டிரில்கள், பாப்ளின்கள், கேம்பிரிக்குகள் உட்பட அநேகம் பிரபலமான ரகங்களை 'ஸான்போரைஸ்ட்' துணிகளாகத் தயார் செய்கின்றன. நீங்கள் வாங்கும் ஒவ்வொரு பருத்தித் துணியிலும் 'ஸான்போரைஸ்ட்' அடையாளம் இருக்கிறதா என்று பாருங்கள்.

முக்கிய கவனிப்பு:— உங்கள் தையல்காரரிடம் சொல்லுங்கள்:
"இது 'ஸான்போரைஸ்ட்' துணி—உடை தைப்பதற்குமுன் நனைக்க வேண்டாம்."




**ஸான்போரைஸ்ட்-கே-மெஹ்மான்:** பிரதி செவ்வாய்க்கிழமை இரவு 7-30 மணிக்கு ரேடியோ ஸிலோனிலிருந்து 41 மீட்டரில் ஒலிபரப்பப்படும் இனிமையான ஹிந்தி நிகழ்ச்சியைக் கேளுங்கள்.

ஸான்போரைஸ்ட் ஸெர்விஸ்
'பாரிஜாத்', நேதாஜி சுபாஷ் ரோடு, மெரின் டிரைவ், பம்பாய் 2

ACP. 1787

# டூமெக்ஸ்

## பால் உணவில் அதிக

## மணம் ஏன்?

டூமெக்ஸ் பால் உணவு டின்னை திறந்த உடனேயே அதன் மணம் உங்களைப் பரிமளிக்கச் செய்யும். ருசியுள்ளது இது. பால் பண்ணையிலிருந்து புதிதாக வருவது. இதில் யாதொரு அருவருப்பும் இல்லை. இதற்குக்காரணங்கள் மூன்று.

முதலாவது டூமெக்ஸ் பால் உணவு அதிசுத்தமான பொருள்களைக் கொண்டு தயாரிக்கப்படுகிறது. இரண்டாவது பாலின் இயற்கை குணங்கள் மாறுதிருக்க காற்றுபுகாத டின்களில் உடனேயே பாக் செய்யப்படுகிறது. மூன்ருவது இது கடைகளில் எளிதில் விற்பனை ஆவதால் நீங்கள் வாங்கும் போது பழய சரக்கு கிடைக்குமே என்று சந்தேகிக்க இடமில்லை.

மணமுள்ள பால் உணவே நல்லது. ஆகையால் மணமுள்ள டூமெக்ஸ் பால் உணவை குழந்தைகள் விரும்புகின்றனர்.

## டூமெக்ஸ் பால் உணவு

**உங்கள் குழந்தைகளுக்கு டூமெக்ஸ் பால் உணவைக் கொடுத்து அவர்களின் வளர்ச்சியை கவனியுங்கள்**

# பாக்யசாலி



ஸோமாஸ்

“இப்பொழுது உன் மனம் சரியாயில்லை. என்னை விட்டுப் பிரிந்து போகிறேன் என்கிறாய். ஆனால் ஒன்று மட்டும் நினைவில் வைத்துக் கொள். உனக்காக இந்த வீட்டுக் கதவுகள் மாத்திரம் அல்ல, என் இதயக் கதவும் என்றும் திறந்து தான் இருக்கும்......” என்ற வாசகங்களை யமுனா இதுவரையில் எத்தனை தடவை சொல்லி யிருப்பாள் என்று அவளுக்கே தெரியாது. அவள் மேற்படி வாக்கியங்களை வாய் விட்டுச் சொன்னது எத்தனை தடவையோ, அதைப் போல் பன் மடங்கு தன் இதயத்தோடு இதயமாக இப்பொழுது சொல்லிக் கொண்டிருந்தாள்.

முதன் முதலில், இந்த வாக்கியங்களை அவள் கணவன் தியாகு சொல்லக் கேட்டாள். அவன் ஆபீஸில் பொழுது போக்குச் சங்கத்தில் ஒரு நாடகம் போடப் போகிறார்கள் என்றும், அதில் அவன் நடிக்கப் போவதாகவும், மேற்படி நாடகத்தில் வரும் வசனங்கள்தான் அவை என்றும் தியாகு சொன்னான்.

“என்ன நாடகம் வேண்டிக் கிடக்கிறது! ஒரு பெண்ணிடம் பல்லைக் காட்டிக் கெஞ்சுவதாகத் தானே நாடகத்தில் வருகிறது? வேறு நல்ல நாடகமாக உங்களுக்குக் கிடைக்கவில்லையா?” என்று யமுனா மிகவும் பரிகாசமாகக் கேட்டாள்.

“ஏன்? நாடகத்துக்கு என்ன குறை வந்து விட்டது? நான் எழுதிய நாடகம் தானே அது? ஆபீஸிலே எல்லோரும் அதைப் பாராட்டினார்கள். நீ இவ்வளவு முட்டாளா யிருப்பா யென்று எனக்குத் தெரியாது. நாடகத்தை எழுதியதும் நான் தான். அதில் கதாநாயகனும் நான்தான். உன் கணவன் நாடகம் எழுதி அதில் கதாநாயகனாகவும் நடிக்கிறான் என்றால் உனக்கு அதில் சந்தோஷம் அல்லவா உண்டாக வேண்டும்?” என்றான் தியாகு.

“தாலி கட்டிய மனைவியின் நினைவுகூட இல்லாமல், இராத்திரி முழுவதும் உங்கள் ஆபீஸ் நண்பர்களுடன் நாடக ஒத்திகை நடத்துவதை நான் பாராட்டினால்தான் நான் நாடகக் கலையை ரசித்ததாக அர்த்தமோ? இப்படிக் கண் விழித்தால் உடம்பு என்னவாகும்? முந்தா நாள் இரவு வாசற் கதவைத் திறந்து போட்டு விட்டு, நீங்கள் உங்கள் நண்பர்களுடன் மாடிக்கு ஒத்திகை நடத்தப் போய் விட்டீர்கள்...‘உனக்காக இந்த வீட்டுக் கதவுகள் மாத்திரம் அல்ல, என் இதயக்கதவும் என்றும் திறந்திருக்கும்......’ என்னும் உங்கள் அருமையான நாடக வசனங்களை ஓயாமல் சொல்லிக்கொண் டிருந்தீர்கள். அப்பொழுது மணி பன்னிரண்டுக்குமேல் இருக்கும். திருடனை நீங்களே அழைக்கிறமாதிரி இருந்தது.எனக்குப் பயமாய்ப்போய்விட்டது....”

யமுனா முழுவதும் பேசி முடிக்க வில்லை. தியாகுவின் முகம் சிவந்து விட்டது. கண்கள் தீப் பிழம்புகளாக ஜொலித்தன. “யமுனா!” என்று வீடே அதிரும்படி கத்தினான். “நீ அடாது பிடிவாதம் பிடித்தாலும், நாடகம் விடாது நடத்தப்படும். நான் நாடகத்தில் நடிப்பது உனக்குப் பிடிக்க வில்லையென்றால், நீ அந்தச் சமயம் ஊருக்குப் போய் விடு” என்றான் தியாகு.

“ஆகா, அப்படியே. உங்கள் நாடகம் நடக்கிற வரையில் நான் காத்திருக்கப் போவதில்லை. இன்றைக்கே என்னைப் பிறந்தகத்துக்கு அனுப்பி விடுங்கள்...” என்று ஆத்திரத்துடன் கூறினாள் யமுனா.

காலையில் நடந்ததை யமுனா ஓரளவு மறந்திருந்தாள். தியாகுவும் மறந்திருப்பான் என்றுதான் அவள் எதிர்பார்த்தாள். அவன் ஆபீஸிலிருந்து வரும்பொழுதே வண்டியுடன் வந்து அவளைத் துரிதப்படுத்தவே அவளது தன்மான உணர்ச்சி தலை தூக்கி நின்றது.

“நிஜமாகவா என்னை ஊருக்குப் போகச் சொல்லுகிறீர்கள்?” என்று வினயமாகக் கேட்டாள் யமுனா.

“இதிலே பொய் வேறா? இதோ பார், ஊருக்கு டிக்கெட். துணிமணிகளை எடுத்துக் கொண்டு சீக்கிரம் புறப்படு!” தியாகுவின் குரலில் ஈரமே இருக்க வில்லை.

யமுனாகூட முதலில் கொஞ்சம் பயந்து தான் போனாள். ஆனால் பயத்தைத் தன்மான உணர்ச்சி தடுத்து நிறுத்தியது: ‘கொஞ்சங்கூட அன்பில்லாத மனிதருடன் எப்படி வாழ முடியும்? உடனே புறப்படு. தானாகவே உன் புருஷன் வழிக்கு வருவான்’ என்று சினிமாவில் மனச்சாட்சி, விதி

முதலிய சக்திகள் கூக்குரலிட்டுப் பேசுவது போல், யமுனாவின் இதயத்தில் தன்மான உணர்ச்சி குரல் கொடுத்திருக்க வேண்டும்.

அடுத்த கணம் யமுனா வீறு கொண்டெழுந்த வீராங்கனையாக நின்று கணவனை ஒரு வீரப் பார்வை பார்த்து விட்டு, ஒரு நொடியில் பிரயாணத்துக்குத் தயார்செய்து கொண்டு வண்டியில் ஏறி விட்டாள்.

யமுனா பிறந்தகம் வந்து இரண்டு மாதங்கள் ஆகி விட்டன. தியாகுவிடமிருந்து கடிதமே வரவில்லை. யமுனாவின் மனத்தில் முன்பு இருந்த உறுதி இப்போது இல்லை. சதா கணவன் நினைவே அவள் மனத்தில் பதிந்திருந்தது. பிறந்தகத்திலிருந்த ஒவ்வொரு நிமிஷமும் அவளுக்கு முள்ளின்மேல் இருப்பது போலிருந்தது.

யமுனாவுக்கு எப்பொழுதும் தன்னம்பிக்கை அதிகம். அதுவும் தன் அழகைப் பற்றி அவளுக்கு அபார நம்பிக்கையும் மதிப்பும் இருந்தன. தோழிகளின் அபிப்பிராயமும் அதை வலியுறுத்தின. ஆனால் அதைத் தவறாகக் கூற முடியாது. யமுனா நல்ல அழகி என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை.

தங்க விக்கிரகம் உயிர் பெற்று வந்தது போல இருந்தாள் யமுனா. ஒரு முறை அவளைப் பார்த்தவர்கள், மறு முறை அவளைப் பார்க்காமல் இருக்க மாட்டார்கள். தியாகுவே இணையற்ற அவளது அழகில் ஈடுபட்டுத் தானே அவளை மணம் புரிந்து கொண்டான்!



அந்த அழகு இப்பொழுது எங்கே போய் விட்டது? இல்லை, அந்தத் தியாகுதான் இப்பொழுது எங்கே போய் விட்டான்? தன் அழகின் காரணமாகவே அவன் எப்படியும், தன்னிடம் வந்து சேருவான் என்ற நம்பிக்கை திடமாக அவள் மனதில் குடிகொண்டிருந்தது.

யமுனாவின் சுபாவமே அலாதி ரகத்தைச் சேர்ந்தது. ஒரு விஷயத்தைப் பற்றி அவள் தன் மனத்தில் ஒரு அபிப்பிராயம் கொண்டு விட்டாளானால் அதையே ஆதாரமாக வைத்துக் கொண்டு என்னத்தையெல்லாமோ நினைத்து வேதனைப் படுவாள்.

முதன் முதலில் அவள் தியாகுவைச் சந்தித்தபோது கூட அந்த மாதிரி ஒரு குழப்பத்தில் சிக்கித் தவித்து விட்டுத்தான் பிறகு மனம் தெளிந்தாள்.

யமுனாவின் சித்தப்பா மதுரையில் இருந்தார். அவருக்கு மீனாக்ஷி ஏக புத்திரி. யமுனாவை விட ஒரு வயது சின்னவள்.

“யமுனா, நீ உன் தங்கை மீனாக்ஷியைப் பார்ப்பதற்காக மதுரைக்கு வரா விட்

டாலும், மதுரை மீனாக்ஷியம்மனை தரிசிப்பதற்காகவாவது வரக் கூடாதா?" என்று உருக்கமாக எழுதியிருந்தாள்.

அதற்கு மேல் யமுனாவால் சும்மா இருக்க முடியவில்லை. அவள் சென்னையில் இண்டர் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தாள். மதுரைக்கு விடுமுறை நாட்களில் புறப்பட்டாள்.

யமுனாவைக் கண்டதும் மீனாக்ஷிக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. அவளைக் கட்டியணைத்துக்கொண்டாள். மீனாக்ஷியும் யமுனாவும் குழந்தைப் பிராயம் முதல் இணை பிரியாமல் பழகினவர்கள். ஊரில் அவர்கள் குடும்பம் ஒன்றாகவே இணைந்திருந்தது. யமுனாவின் தந்தை சென்னைக்குப் போன பிறகு அவர் சகோதரர், மீனாக்ஷியின் தந்தை, மதுரையில் ஒரு ஆலையில் நல்ல உத்தியோகம் கிடைக்கவே அங்கே குடும்பத்துடன் தங்கி விட்டார்.

யமுனாவுக்கும் மீனாவுக்கும் இடையே இருந்த அன்பை இன்னதென்று விவரிக்க முடியாது. சம வயதுள்ள இளம் பெண்கள் இருவர் சந்தித்து விட்டால் அவர்கள் இன்னதைப் பற்றித்தான் பேசுவார்கள் என்று யாராவது சொல்ல முடியுமா? என்னத்தை நினைத்து அவர்கள் அடிக்கடி 'களீர் களீர்' என்று சிரிக்கிறார்கள் என்று கண்டு பிடித்துத்தான் சொல்லி விட முடியுமா? நேரம் செல்லுவதைப் பற்றிச் சிறிதும் நினைப்பின்றி, இருவரும் தங்களை மறந்த நிலையில் இருந்தார்கள்.

ஒரு நாள், உற்சாகத்துடன் மதுரையம்பதியைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டார்கள். இருவரும் மீனாக்ஷியம்மன் கோவிலுக்கு அருகே போனபோது, ஒரு வாலிபன் சைக்கிளில் வந்து, அவர்கள் எதிரில் 'டக்'கென்று நிறுத்தினான்.

மீனாக்ஷி அவனைப் பார்த்ததும், "என்ன மிஸ்டர் தியாகு, சௌக்கியமா!" என்று அவனிடம் கேட்டாள்.

அவன் பதிலுக்கு ஒரு புன்னகை புரிந்து விட்டு, "சௌக்கியந்தான்...... இவள் யார் ...?......உன் பெரியப்பா பெண் யமுனாதானே? நான் இவளைச் சின்ன வயசிலே பார்த்தது. அடையாளம் தெரியாமல் வளர்ந்து விட்டாள்......!" என்று கூறிவிட்டு யமுனாவைக் காலோடு தலை வரை ஒரு தடவை பார்த்தான். யமுனாவும் சிறிது கூச்சத்தோடு அவனைப் பார்த்தாள்.

"யமுனா, உனக்கு இவரை நினைவில்லையா? திருச்சியில் சுந்து மாமா இருக்கிறாரே, அவர் பிள்ளை. இங்கே தியாகராஜா கல்லூரியில் பி. ஏ., படிக்கிறார்...... நீ சிறு பெண்ணாயிருந்த போது இவரைப் பார்த்தது. அப்புறம் சென்னைக்குப் போய் விட்டாய்!" என்றாள் மீனாக்ஷி.

"இப்பொழுது நினைவு வருகிறது. சின்ன வயசில் பார்த்த தியாகுவுக்கும் இவருக்கும் எத்தனை வித்தியாசம்!" என்றாள் யமுனா நாணங் கலந்த புன்னகையுடன்.

தியாகு சிரித்துக் கொண்டே, "எத்தனை வருஷங்களானாலும் ஒரே மாதிரி இருக்க முடியுமா, என்ன? சரி. கோவிலுக்குத் தானே போக வேண்டும்? நான் போய்த் தேங்காய், பழம், பூவுடன் அர்ச்சனைச் சீட்டும் வாங்கிக் கொண்டு ஒரு நிமிஷத்தில் வருகிறேன்!" என்று சொல்லிக் கொண்டே சைக்கிளில் ஏறி ஒரு மிதி



மிதித்தான். மறு விநாடி மதுரை வீதியின் கூட்டத்தில் மறைந்து விட்டான்.

சிறிது நேரத்தில் மின்னல் போல் தோன்றினான் தியாகு அவர்களுக்கு எதிரில்.

"நீங்கள் மீனாக்ஷி யம்மனையும் சுவாமியையும் தரிசனம் பண்ணிக் கொண்டு வாருங்கள். நான் இங்கேயே இருக்கிறேன்" என்று கூறி விட்டுத் தியாகு கோவில் வெளிப்பிரகாரத்திலேயே தங்கி விட்டான்.

மீனாட்சியும் யமுனாவும் சன்னிதிக்குப் போனார்கள்.

யமுனாவுக்கு அத்தனை பெரிய கோவிலைப் பார்த்ததில் அதிசயம் தாங்கவில்லை. பிரகாரம் முழுவதும் தூண்களிலும் மேல் விதானங்களிலும் செய்திருக்கும் சிற்ப வேலைப்பாடுகளை அவள் கூர்ந்து கவனித்து ரசித்து மகிழ்ந்தாள்.

அவர்கள் கோவிலை விட்டு வெளிப் பிரகாரத்துக்கு வந்தபோது ரொம்ப நேரம் ஆகிவிட்டது.

"மதுரை மீனாட்சி யம்மன் கோவில் கடைகளை யெல்லாம் பார்க்க வேண்டாமா?" என்ற கணீர் என்னும் குரலைக் கேட்டு மீனாட்சியும் யமுனாவும் நின்று திரும்பிப் பார்த்தனர். தியாகுதான் சிரித்த முகத்தோடு நின்று கொண்டிருந்தான். யமுனா அவனைக் கூர்ந்து பார்த்தாள்.

தியாகு பார்ப்பதற்கு லட்சணமா யிருந்தான். சாதாரணமாக எல்லா இளைஞர்களிடமும் காணப்படும் அதிகப் பிரசங்கித்தனமான துடுக்கும், துணிச்சலும் அவனிடம் சிறிதும் காணப்படவில்லை. ஆடம்பரம் இல்லாத அவனது எளிய தோற்றமும் குறும்புத்தனம் இல்லாத பார்வையும், கள்ளமற்ற கலகலப்பான பேச்சும் யமுனாவுக்கு மிகவும் பிடித்திருந்தன.

ஆனால் அடுத்த நிமிஷமே அவள் எண்ணம் மாறிவிட்டது. அதற்குத் தியாகுவே தான் காரணம்.

"தெப்பக்குளத்துக்குப் போய்ப் படகில் கொஞ்ச தூரம் உல்லாசப் பிரயாணம் போக வேண்டாமா? இதோ இங்கே பஸ் பிடித்தீர்களானால் தெப்பக்குளத்துக்கு அருகில் இறங்கலாம்!" என்றான் தியாகு.

மீனாக்ஷியும் யமுனாவும் பஸ்ஸில் ஏறிக் கொண்டனர். பஸ்ஸும் நகர்ந்தது. தியாகுவும் சைக்கிளுடன் மறைந்தான்.

சில நிமிஷத்துக் கெல்லாம் பஸ் தெப்பக் குளத்தை யடைந்தது. மீனாக்ஷியும் யமுனாவும் இறங்கித் தெப்பக்குளத்தை நோக்கி நடந்தனர். அவர்கள் படிக்கட்டை நெருங்கியபோது, "வாருங்கள், படகு புறப்படப் போகிறது!" என்று அவர்களைத் துரிதப் படுத்தினான், தியாகு.

மீனாக்ஷியும் யமுனாவும் படகில் ஏறி நீராழி மண்டபத்தை யடைந்தார்கள்.

ஸீராமீ மண்டபத்தின் படிக்கட்டுகளில் ஏறி மேலே போனதும், "இங்கேயே தாமதித்தால் திருமலை நாயக்கர் மஹால் எப்பொழுது பார்க்கப் போகிறீர்கள்?" என்று கூறிய தியாகுவின் குரலைக் கேட்டதும் யமுனாவுக்குக் கோபம் கோபமாக வந்தது. மீனாக்ஷியிடம் மெதுவாக, "என்ன இவர். தொடர் கதை மாதிரி விட்டு விட்டுத் தொடர்கிறாரே! சுத்த மோசமாயிருப்பார் போல் இருக்கிறதே!" என்றாள்.

"சீ, அப்படிச் சொல்லாதே. அவர் மிகவும் நல்ல மாதிரி!" என்றாள் மீனாக்ஷி.

பிறகு எல்லோரும் படகில் ஏறிக் குளத்தங்கரைப் படித் துறையில் வந்து இறங்கி விட்டார்கள்.

"இதோ பஸ் வந்து விட்டது. இது திருமலை நாயக்கர் மஹாலுக்குப்போகிறது!" என்று கூறிக் கொண்டே அவர்களுக்கு எதிரில் தியாகு சைக்கிளுடன் வந்து நின்றான். யமுனாவுக்கு வந்த கோபத்தில் தியாகுவை என்ன செய்திருப்பாளென்று சொல்ல முடியாது. அதற்குள் பஸ் வந்து விடவே மீனாக்ஷியும் யமுனாவும் அதில் ஏறிக் கொண்டனர்.

திருமலை நாயக்கர் மஹாலுக்கு அருகில் பஸ் போய் நின்றதும், தியாகு சைக்கிளுடன் அவர்களுக்காகத் தயாராகக் காத்துக் கொண்டிருந்தான்.

அவனுக்குச் சூடு கொடுக்க யமுனா துடித்தாள். பஸ்ஸை விட்டு இறங்கியதும், அவனை நெருங்கி, "பாவம், எங்களுடன் ஊர் சுற்றிக் கொண்டே இத்தனை தூரம் வந்து விட்டீர்களே! மறுபடியும் வீட்டுக்கு நெடுந்தூரம் போக வேண்டுமே!" என்று சற்று எரிச்சல் கலந்த குரலில் சொன்னாள்.

தியாகுவின் அழகிய முகம் சிவந்தது. யமுனாவின் குத்தல் புரிந்து விட்டது.

"மன்னிக்க வேண்டும். என் அறை மஹாலுக்குச் சமீபத்தில்தான் இருக்கிறது. வேண்டுமென்று......நான் உங்களைத் தொடர்ந்து வந்ததாகத் தப்பாக நினைத்து விட்டீர்கள். நான் வீட்டுக்குப் போகும் வழியில்தான்......உங்களுடன் வந்தேன்... தவறானால் மன்னித்து விடுங்கள்...நான் வருகிறேன்......" என்று கூறிக் கொண்டே இருவரிடமும் விடைபெற்றுக் கொண்டான். மறுகணம் சைக்கிளில் ஏறிக் காற்றாய்ப் பறந்து விட்டான்.

"யமுனா, என்ன இருந்தாலும் உனக்கு இத்தனை வாய்த் துடுக்கு ஆகாது. தியாகு ரொம்ப நல்லமாதிரி. சிறு வயது முதல் நம் குடும்பத்துடன் நெருங்கிப் பழகியவர்......!" என்று மீனாக்ஷி சொன்னது யமுனாவின் காதுகளில் மிகவும் இலேசாக விழுந்தது. அவள் மனம்தான் தியாகுவுடன் சென்று விட்டதே.

மனைவியைப் பிரிந்த ஆண் கிரவுஞ்சப பறவையின் துயரக் கனல் கனிந்த குரல் தானே வால்மீகியின் இதயத்தில் காவியம் இயற்றும் கனிவைக் கொடுத்தது!

அத்தகைய கனிவைத்தான் தியாகுவின் பிரிவும், ஏக்கம் கலந்த பார்வையும், யமுனா வின் குற்றச்சாட்டில் நிலை குலைந்துபோன அவன் முகபாவமும் தோற்றுவித்தன; இப்பொழுது யமுனா நிலைகுலைந்து போனாள்.

* * *

தியாகுவைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளச் சம்மதம் கேட்ட போது, யமுனா தன் தந்தையிடம் உள்ள நிறைவோடு சம்மதம் தெரிவித்தாள். தான் முன்பு மதுரையில் அவனை அவமதித்த தவறுக்கு இதுதான் தகுந்த பிராயச்சித்தம் என்று அவள் நினைத்தாள் போலும். மணப் பந்த லில்கூடத் தியாகுவோடு குதூகலமாக அவள் இணைந்து நின்ற காட்சி எல்லோ ருடைய கண்களுக்கும் விருந்தாயிருந்தது.

பழைய நினைவுகளில் எத்தனை நேரம் தான் லயித்திருக்க முடியும்? யமுனாவின் நினைவு தானாகவே நிகழ்காலத்துக்கு வந் தது. உடனே கணவனிடம் போய்விட வேண்டும் என்னும் எண்ணத்தில், தன்னை ஊருக்கு அனுப்பி விடும்படி தகப்பனாரைத் துளைத்து விட்டாள்.

தியாகுவிடம் தான் கோபித்துக்கொண்டு பிறந்தகத்துக்கு வந்தது சரியல்ல என் பதை நினைத்து யமுனா பெருக்கிய கண்ணீர் யமுனையின் பிரவாகம்போல் இருந்தது

'அவர் தாமாகவே வந்து அழைத்துப் போவார் என்று நான் நினைத்தது தவறு. நான் வீணாக அவரை மனம் நோக அடித்து விட்டுப் புறப்பட்டு வந்து விட்டேன். என் தவறுக்கு நானே தான் பரிகாரம் தேடவேண்டும் நானே புறப்பட்டுப் போய் அவர் காலில் விழுந்து மன்னிப்புக் கேட் கிறேன்' என்று மனத்தில் உறுதி செய்து கொண்டு, யமுனா ஊருக்குப் புறப்பட ஆயத்தமானாள்.

"திடீரென்று புறப்பட்டால் என்னம்மா செய்வது? நான் லீவு எடுத்துக் கொண்டு உன்னுடன் வருவதற்கு அவகாசம் வேண் டாமா? இரண்டு நாள் பொறுத்துக் கொள்" என்று அவள் தகப்பனார் எவ் வளவோ தூரம் அவளிடம் சொல்லிப் பார்த்தார். யமுனா ஒரே பிடிவாதமாக அன்றே ரயிலேற்றி விடும்படி வற்புறுத் திப் புறப்பட்டு விட்டாள்.

விடியற் காலையில் சென்னைக்குப் போய்ச் சேர்ந்த யமுனா ஒரு ரிக்ஷாவில் கணவன் வீட்டுக்குப் போனாள்.

திடீரென்று முன்னறிவிப் பில்லாமல் வந்த யமுனாவைக் கண்ட தியாகு ஆச்சரியத் தால் திகைத்து விட்டான். யமுனா அவன் காலடியில் விழுந்து வணங்கினாள். அப் போது அவள் தளிர்க் கரங்களைப் பற்றித் தூக்கிய தியாகு அவள் கண்களில் நீர்ப் பிரவாகத்தைக் கண்டு திகைத்துவிட்டான்.

"யமுனா, ஏன் அழுகிறாய்? நானே இரண்டு நாளில் புறப்பட்டு அங்கு வந்து உன்னைத் திகைக்க வைக்க எண்ணி யிருந் தேன். நீ என்னைத் திகைக்க வைத்து விட்டாய்!" என்று கூறி அவளை அணைத்த படி அவளது கண்ணீரைத் துடைத்தான்.

"என்னை மன்னித்து விடுங்கள்...அசட் டுத் தனமாக உங்கள் மனத்தை நோக வைத்து விட்டேன்" என்றாள் யமுனா.

"அசடே, இதில் மன்னிப்பதற்கு என்ன இருக்கிறது? நான்தான் உன் மனசை நோகச் செய்து விட்டேன். அந்த நாடகத் தில் எனக்கு ரொம்ப நல்ல பெயர். ஆனால் எனக்கு மட்டும் திருப்தியில்லை. நீ இல்லா மல் நாடகம் எனக்குத் திருப்தியாகவே இல்லை......அது இருக்கட்டும்......யமுனா, நீ எப்படிக் கோபம் தணிந்து நீயாகவே புறப்பட்டு வந்தாய்?"

"நீங்கள் சொன்ன வார்த்தைகள்தான் என் மனசுக்கு ஆறுதலை அளித்து, உங்க ளிடம் திரும்பி வருவதற்குத் தைரியத்தை யும் அளித்தன."

"யமுனா, நான் என்ன சொன்னேன்? எனக்கே நினைவில்லையே!"

"நன்றாய் நினைத்துப் பாருங்கள். ஒரு முறையல்ல, பல முறை சொன்னீர்கள்... இப்பொழுது மறந்து விட்டீர்கள். நான் சொல்லட்டுமா?"

"சொல், யமுனா, சொல்!"

"ஆகா, சொல்கிறேன். 'இப்பொழுது உன் மனம் சரியாயில்லை. என்னை விட்டுப் பிரிந்து போகிறேன் என்கிறாய். ஆனால் ஒன்றுமட்டும் நினைவில் வைத்துக்கொள்... உனக்காக இந்த வீட்டுக் கதவுகள் மட்டும் அல்ல, என் இதயக் கதவும் என்றும் திறந்திருக்கும்......' இந்த வாசகங்களை நீங்கள் பலமுறை சொல்லவில்லையா? அதற்குள் மறந்து விட்டீர்களா?"

"யமுனா, இது நான் நடித்த நாடகத் தில் வரும் வசனமல்லவா? இதுதானே உனக்கு என்னிடம் கோபமூட்டியது?"

"...ஆமாம். அதுவேதான் இப்பொழுது உங்களிடம் திரும்பி வந்து விடுவதற்குத் தைரியத்தையும் அளித்தது."

"யமுனா, நான் பாக்கியசாலி. என் நாடக வசனமே உன் மனசுக்கு ஆறுதல் அளித்து, தைரியத்தையும் கொடுத்து உன்னையும் என்னிடம் கொண்டு வந்து சேர்த்து விட்டது. இல்லையா?" என்று கேட்டுத் தியாகு யமுனாவைத் தன்னருகில் இழுத் துக் கொண்டான்.

பரவசமடைந்த யமுனாவுக்கு அவனுடன் ஒன்றும் பேசத் தோன்றவில்லை.

*10 சைக்கிள் வியாபாரிகளில் 8 பேர்கள்

# ஹெர்குலிஸ்

தான் நீங்கள் கொடுக்கும் பணத்திற்குத் தகுந்த பெறுமானம் அளிக்கிறது என்கிறார்கள்



நீங்கள் குறைந்த விலைக்கோ அல்லது அதிக விலைக்கோ சைக்கிள் வாங்கலாம், ஆனால் ஹெர்குலிஸைக் காட்டிலும், கொடுக்கும் பணத்திற்குத் தகுந்த பெறுமானமுடைய வேறு ஒரு சைக்கிளை பெறமுடியாது. இந்த உண்மையை அறிந்துதான் பத்து சைக்கிள் வியாபாரிகளில் எட்டுபேர்கள் 'நீங்கள் கொடுக்கும் பணத்திற்கு ஹெர்குலிஸ் தகுந்த பெறுமானம் அளிக்கிறது' என்கிறார்கள். அவர்களுடைய புத்திசாலித்தனமான ஆலோசனையைப் பின்பற்றி ஹெர்குலிஸ் சைக்கிளையே வாங்குங்கள்

* ஒரு தனிப்பட்ட ஆராய்ச்சியின் மூலம் ஸ்தாபிக்கப் பட்டுள்ளது.

சைக்கிளில் முதலீடு செய்வது ஒரு சிறந்த மூலதனம் போலாகும்

# ஹெர்குலிஸ்

நீங்கள் கொடுக்கும் பணத்திற்குத் தகுந்த பெறுமானம் அளிக்கிறது

தயாரிப்பாளர்கள் : டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ்

TIC 3512 (A)



# மைசூர் மல்லிகை

**ஜயலக்ஷ்மி நரசிம்மன்**

**வா**னவெளியில் குமுறலும், இடியும் அதிகமாயிருந்தன. சோவென்ற பெருஞ் சப்தத்துடன் மழை பெருந்தாரையாய்ப் பெய்து கொண்டிருந்தது. சூறாவளியைப் போல் சுழன்று சுழன்று பேய்க் காற்று அடித்தது! இந்த இயற்கை யன்னையின் கோர தாண்டவத்தைப் பார்த்த வண்ணம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள் சாரதா. கூடத்தில் தொட்டியில் படுத்திருந்த குழந்தை சிணுங்கியது. அதைக் கண்டு பரபரப்புடன் ஓடித் தொட்டில் ஆட்டி அதைச் சமாதானப் படுத்தினாள். குழந்தையும் உறங்கிற்று. சுவரில் மாட்டியிருந்த கடிகாரம் ஒன்பது மணி யடித்து நிறுத்தியது. வழக்கமாய் ஏழு மணிக்கெல்லாம் வரும் தன் கணவன் இன்னும் வராததால் எங்கு, எவ்விடம், இப்பெரு மழையில் அகப்பட்டுத் திண்டாடுகிறாரோ என்றெண்ணி வேதனைப் பட்டாள்.

அவளையுமறியாது இலேசாகக் கண் மூடி விட்டாள். படபட வென்று கதவு இடிக்கும் சப்தம் கேட்டுக் கண் விழித்தவள் திடுக்கிட்டுப் போய்க் கதவைத் திறந்தாள். சொட்டச் சொட்ட நனைந்த உடையுடன் ஜயராமன் உள்ளே நுழைந்தான். கதவைத் தாளிட்டுக் கொண்டு அவன் பின்னால் வந்த சாரதா வேறு உலர்ந்த உடைகளை எடுத்துத் தந்தாள். ஜயராமனும் கையிலிருந்த பொட்டலத்தை அவளிடம் கொடுத்து விட்டு, ஈர உடையைக் களைந்து வேறு உடை உடுத்துக் கொண்டு சோபாவில் அமர்ந்தான்.

சாரதா அவன் கொடுத்த பொட்டலத்தைப் பிரித்தாள். கம்மென்ற மணத்துடன் பூச் செண்டுபோல் கொத்தாய் வெண்மையான புஷ்பங்கள் இருந்தன! சாரதா அதைப் பார்த்துப் பிரமித்தாள். "இதென்ன பூ, நான் பார்த்ததே இல்லையே!" என்றாள் ஆச்சரியத்துடன்.

"நீ மட்டும் தானா! நானும்தான் இதுவரை பார்த்ததே யில்லை. வெகு நாளாய்ப் பார்க்காதிருந்த என் பள்ளிக்கூடச் சிநேகிதன் சீனிவாசனை இன்று சந்தித்தேன். அவன் பிடிவாதமாய்த் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றான். அங்கு தோட்டத்தில் நிறைய இந்தச் செடிகள்தான் இருந்தன; இதென்னவென்று கேட்டதற்கு அவன் சொன்னான்: அவனுக்கு இந்தப் பூவினால்தான் கல்யாணமாயிற்றாம். அவன் மனைவி இதைத் தெய்வமாய்ப் போற்றுகிறாளாம். தன் மணம் நடந்த கதையை விவரமாகச் சொன்னான். பேச்சு சுவாரஸ்யத்தில் பொழுது போனதே தெரியவில்லை. நண்பன் மனைவி என்னைப் பலவந்தமாய் அங்கேயே சாப்பிடச் சொல்லி விட்டாள். வரும்போது உனக்காக இதைக் கட்டிக்கொடுத்தான். இதன் பெயர் மைசூர் மல்லிகையாம்."

சாரதா ஆச்சரியத்துடன் அப் பூவைப் பார்த்தவாறே அவனருகில் வந்து உட்கார்ந்தாள். "பூவால் கல்யாணம் நடந்ததென்றால் அதைத்தான் சொல்லுங்களேன்" என்று கேட்டாள். ஜயராமனும் கூறத் தொடங்கினான்.

★

**த**ஞ்சாவூர் ஜில்லாவில் மன்னார்குடி தாலூகா ஆபீஸில் குமாஸ்தாவாயிருந்தான் சீனிவாசன். எவரும் உற்றார் உறவினர் இல்லாததால் ஒரு இடத்தில் பணம் கொடுத்துச் சாப்பிட்டு வந்தான்.

அவ்வூருக்குத் தாசில்தார் ஒருவர் மாற்றலாகி வந்தார். அவர் வந்தவுடனேயே வழக்கமாய்ப்

பங்குனி மாதம் நடக்கும் ராஜகோபாலஸ்வாமி உற்சவமும் ஆரம்பமாயிற்று. எங்கும் இல்லாதபடி பதினெட்டு நாள் உற்சவமாதலால் ஊரே கலகலப்பாய் விளங்கியது. அன்று தமது பெண் கோவிலுக்குப் போக விரும்புவதால் சிறிது புஷ்பம் வாங்கி வரும்படி தாசில்தார் தலைமைக் குமாஸ்தா சிவராமனை அனுப்பினார். சிவராமனோ சீனிவாசனை அவ்வேலைக்கு ஏவினான். சீனிவாசன் கடைத் தெருவுக்குப் போகச் சோம்பல் பட்டுக் கொண்டு தான் குடியிருந்த வீட்டிலிருந்து சிறிது மைசூர் மல்லிகைப் பூவைப் பறித்துத் தாசில்தார் வீட்டுக்கு அனுப்பினான்.

மறு நாள் ஆபீஸுக்கு வந்த தாசில்தார், "நேற்று அனுப்பின பூ நன்றாக இருக்கிறதாம். தினம் கொஞ்சம் கொடுத்து அனுப்பி விடு" என்றார்.

அது போல் சீனிவாசனும் தினம் அப் பூவை அனுப்பி வந்தான். ஒரு நாள் பூவெடுத்துப் போக ஆள் வராததால் தாசில்தார் கோபிப்பாரோ என்று பயந்து அவனே பூவை எடுத்துக் கொண்டு போனான். அவன் போன சமயம் தாசில்தார் வெளியில் சென்றிருந்தார்.

உள்ளே நுழைந்த சீனிவாசன் வெளியில் யாரையும் காணாது தயக்கத்துடன் உள்ளே நுழைந்தான். அங்கு நாற்காலியில் உட்கார்ந்திருந்த ஒரு பெண் காலடியோசைகேட்டு திமிர்ந்தாள். சீனிவாசனைக் கண்டதும் எழுந்து, "யார்! என்ன வேண்டும்!" என்று கேட்டாள்.

"தினம் பூ அனுப்பும்படி தாசில்தார் சொல்லியிருந்தார். இன்று ஆளனுப்பாததால் நானே எடுத்து வந்தேன்" என்றான் சீனிவாசன்.

உடனே அப்பெண் புன்முறுவலுடன், "ஓ, நீங்கள்தானா பூ அனுப்புகிறவர்! இப்படி உட்காருங்கள்; எனக்காகத்தான் அப்பா பூ கொண்டு வரச் சொன்னது" என்றாள்.

சீனிவாசனும் அங்கிருந்த மேஜைமேல் பூவை வைத்தான். அப் பெண் உடனே அப் பூவை எடுத்து நாசியில்சேர்த்துத் தலையிலணிந்து கொண்டாள். "இப் பூமீது எனக்கென்னவோ அவ்வளவு மோகம் ஏற்பட்டுவிட்டது" என்றாள்.

சீனிவாசன் பிரமிப்புடன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்குத்தான் அங்கிருப்பதைத் தாசில்தார் பார்த்தால் என்ன சொல்வாரோ என்று அச்சமாயிருந்ததால் போய்விடலாமென்றெண்ணிச் சுற்று முற்றும் பார்த்தவாறே எழுந்திருந்தான். சீனிவாசன் எழுந்திருப்பதற்கும் தாசில்தார் வருவதற்கும் சரியாயிருந்தது.

அவர் உள்ளே நுழையும்போதே அப் பெண் "அப்பா, தினம் பூ அனுப்புகிறவர் இன்று நேரிலேயே வந்திருக்கிறார் அப்பா" என்றாள்.

சீனிவாசன் எழுந்தான். அவரோ, "சீனிவாசனா, உட்காரப்பா, ஆபீஸில்தான் உத்தியோக தோரணை, வீட்டிலெல்லாம் அது வேண்டாம்" என்றார்.

சீனிவாசனும் உட்கார்ந்தான். தாசில்தார் உடனே "கிரிஜா, போய் இலை போடச் சொல்லு, சீனிவாசனும் இங்கேயே சாப்பிடுவான்" என்றார்.

கிரிஜாவும் உள்ளே சென்றாள். "சீனிவாசா, இனி நீயே தினம் வா. உன்னை முதல் நான் பார்த்தபொழுதே அடக்கமானவனென்று தெரிந்துகொண்டேன்" என்றார். சீனிவாசன் அன்றிரவு அங்கேயே சாப்பிட்டு விட்டுத்தான் தன் வீடு சென்றான்.

★

அன்று முதல் தினம் தாசில்தார் வீட்டுக்குச்சென்று பூவைக் கொடுத்து விட்டுச் சற்று நேரம் கிரிஜாவிடம் பேசிவிட்டு வருவான்.

ஒரு நாள் மாலை கிரிஜாவும், சீனிவாசனும் பேசிக் கொண்டிருக்கும்போது ஒரு வாலிபன் உள்ளே வந்தான். அவனைப் பார்த்ததும் கிரிஜா "இதோ இவர்தான் என் அம்மாஞ்சி ராமமூர்த்தி" என்றாள்.

சீனிவாசனும் உடனே மரியாதையாக, "மிஸ்டர் ராமமூர்த்தி, வந்தனம்" என்றான்.

ராமமூர்த்தியோ அவனை ஏற இறங்கப் பார்த்து விட்டு உட்கார்ந்தான். அவன் பதில் ஒன்றும் சொல்லாதது சீனிவாசனை விடக் கிரிஜாவுக்கே அதிகம் உறுத்திற்று. "என்ன அம்மாஞ்சி, மரியாதைக்குப் பதில் மரியாதை செய்யாதிருப்பது உங்கள் பட்டணத்து வழக்கமோ!" என்று கேட்டாள்.

ராமமூர்த்தி அவளை விறைப்பாகப் பார்த்து விட்டு, "உன் அப்பா உனக்கு அதிகச் செல்லம் கொடுத்துக் குட்டிச் சுவராயடித்து விட்டார். வாய் ரொம்ப வளர்ந்திருக்கிறது!" என்று கூறிவிட்டு உள்ளே போனான்.

கிரிஜா ஏக்கத்துடன் சீனிவாசனைப் பார்த்தாள். "என் தாயார் இறக்கும்போது இவருக்கே என்னை மணம் செய்து வைக்கும்படி என் தந்தையிடம் சொன்னாளாம்" என்றாள்.

சீனிவாசன் திகைத்தான். விஷயம் இப்பொழுதுதான் அவனுக்கு விளங்கியது. "கிரிஜா, கலங்காதே. நீ ராமமூர்த்தியையே மணந்து கொள். அதுதான் உனக்கு நல்லது. உன் சகோதரனாக எப்போதும் நீ எங்கு

சென்றாலும் உன் வீடு தேடி வருவேன். நான் ஒரு ஏழைக் குமாஸ்தா" என்றான்.

அவன் குரலில் தொனித்த அமைதியைக் கண்டு பிரமித்தாள் கிரிஜா.

அதற்குமேல் அங்கு நிற்க மனமின்றிச் சீனிவாசனும் தன்னிருப்பிடம் சென்றான்.

★

மறுநாள் பொழுது விடியும் தருணம் தட தடவென வாசற் கதவிடிக்கும் சத்தம் கேட்டுப் படுக்கையினின்றும் எழுந்த சீனிவாசன் கதவைத் திறந்தான். வெளியே ராமமூர்த்தி நிற்பதைக் கண்டு திகைத்த அவன் தன் திகைப்பைக் காட்டாது, "உட்காருங்கள், இந்த அதிகாலையில் என்னை எதற்குத் தேடி வந்தீர்கள்!" என்று மரியாதையாகவே கேட்டான்.

ராமமூர்த்தி வாசல் திண்ணையிலேயே உட்கார்ந்தான். உடனே எடுத்த எடுப்பிலேயே "நீ இனி இங்கு இருக்கக் கூடாது. வேண்டுமானால் உனக்கு ஒரு சிபார்சுக் கடிதம் தருகிறேன். அதை நான் வேலை செய்யும் கம்பெனியில் காட்டினால் வேலை கொடுப்பார்கள். பட்டணம் போக ரயில் சார்ஜும் நான் கொடுக்கிறேன்" என்றான்.

சீனிவாசனுக்கு இது தூக்கி வாரிப்போட்டது. "நானிருப்பதால் உங்களுக்கு என்ன கெடுதல்!" என்று கேட்டான்.

"நீ இவ்வூரிலிருப்பதால் என் வாழ்க்கை பாழாகிவிட இருப்பதால்தான் சொல்கிறேன். இல்லாவிடில் உன் வீடு தேடி வர நானென்ன பைத்தியமா! நீ இருக்கும் மட்டும் கிரிஜா என்னை மதிக்க மாட்டாள். அவள் வாழ்வின் சந்தோஷத்துக்காகவும், என் அத்திம்பேரின் மன நிம்மதியின் பொருட்டும் நீ போய்விட வேண்டும்!" என்றான் ராமமூர்த்தி.

சீனிவாசன் சிரித்தான். "மிஸ்டர் ராமமூர்த்தி, உமது வாழ்வின் குறுக்கே நான் வர மாட்டேன். நான் வேண்டுமானால் உம் அத்திம்பேர் வீட்டுக்கு இனி செல்லவில்லை. இதற்காக ஊரைவிட்டுச் செல்ல வேண்டுமென்று நீர் கேட்பது நியாயமில்லை. என்னால் பழகின இடத்தைவிட்டுப்போவது முடியாத காரியம்" என்று தீர்மானமாய்ச் சொன்னான்.

ராமமூர்த்தி உடனே உக்ரமூர்த்தியாய் மாறினான். "உன்னால் ஊரை விட்டுப் போக முடியா விட்டால் என்னால் உன்னைப் போகச் சொல்ல முடியும்" என்று கோபத்துடன் கூறிவிட்டுப் போய் விட்டான்.

நெடுநேரம் கற்சிலைபோல் அசைவற்று நின்றான் சீனிவாசன். பின் வருவது வரட்டுமென்று சமாதானமடைந்து தன் வேலையைக் கவனிக்கச் சென்றான். அன்று முதல் தாசில்தார் வீட்டுப் பக்கமே செல்லவில்லை. பூவை மட்டும் அனுப்பி வந்தான். ஒரு நாள் தபாலில் அவனுக்கு ஒரு பெண் எழுதிய கடிதம் வந்தது. ஒரு சமயம் கிரிஜா எழுதியிருக்கலாமென நினைத்தான். ஆனால் பெயர் வேறாயிருந்தது. நாளாக ஆக, புதுப் புதுப் பெண்கள் பெயர் போட்டு வெவ்வேறு ஊரிலிருந்து வர ஆரம்பித்தது. இவன் வெளியில் போயிருக்கும் போது வந்த சில கடிதங்களை அண்டை அயலாருள்ளவர்கள் பார்த்துப் பலவிதம் பேசவாரம்பித்தனர். இதனால் மனம் முறிந்த சீனிவாசன் தன் வேலையை ராஜினாமா செய்துவிட்டுப் பட்டணம் பக்கம் பார்த்துக் கிளம்பிவிட்டான்.

★

நாட்கள் பறந்தன. அன்று வெள்ளிக்கிழமை. காலையிலேயே எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்துவிட்டுத் தலையை உலர்த்த மாடித் தாழ்வாரத்துக்கு வந்தாள் கிரிஜா. தூரத்தில் மரங்கள், கட்டடங்கள் நடுவில் ராஜகோபால ஸ்வாமியின் கோவில் கோபுரம் ஆகாயமளாவி நின்றது தெரிந்தது. அதையே உற்றுக் கவனித்த கிரிஜாவுக்கு அவளையறியாது கண்களில் கண்ணீர் பெருகிற்று. "என் இதயத் தவிப்பை அச் ஸ்வாமியாவது பார்த்து நீக்க மாட்டாரா!" என்று ஏங்கித் தவித்தது அவள் உள்ளம்.

அச்சமயம் ராமமூர்த்தி அங்கு வந்தான். உண்மையில் சீனிவாசன் மேல் துவேஷம் கொண்டு அவனை விரட்டியடித்தும், அவன் போய்விட்டும் கூட கிரிஜா அவனையே நினைத்து வருந்துவது அவன் மனத்துக்குச் சங்கடமாயிருந்தது. "கிரிஜா, ஏன் அழுகிறாய்! உனக்கென்ன கஷ்டம்!" என்று கேட்டான்.

கிரிஜா ஒன்றும் பதில் சொல்லவில்லை. மீண்டும் ராமமூர்த்தியே "கிரிஜா, என்னை ஏன் வெறுக்கிறாய்! அந்த சீனிவாசன் உன் மனத்தைக் கலைத்துவிட்டுப் போய்விட்டான். அவன் பசப்பலை நம்பி நீ ஏமாந்துவிட்டாய்" என்றான்.



அச்சுத் தொழிற்கலையை அபிவிருத்தி செய்யும் நோக்கத்துடன் மத்திய சர்க்கார் நடத்திய போட்டியில் 'மார்கு' பத்திரிகைக்கு முதற் பரிசு கிடைத்துள்ளது. அதை அப் பத்திரிகையின் வியாபார மானேஜரும் டாடா கமர்ஷியல் பிரஸ்ஸின் ஜெனரல் மானேஜருமான ஸ்ரீ எஸ். ராமு, நவம்பர் 8ந் தேதி நடந்த பரிசளிப்பு விழாவுக்கு விஜயம் செய்த நமது உபஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்களிடமிருந்து பரிசு பெறுவதை மேலே படத்தில் காணலாம்.

---

கிரிஜா கோபத்துடன் திரும்பினாள். "நீங்கள் சொல்லுவது தவறு. அவர் உண்மையில் என்னை மணக்க நினைக்கவே யில்லையே! என்னைச் சகோதரியாய் பாவிப்பதாயும், உங்களை நான் மணந்தால் நான் சுகமாயிருக்கலாமென்றும், தான் ஏழை குமாஸ்தா வென்றும் கூறினார்" என்றாள்.

ராமமூர்த்தியின் தலை சுழன்றது; சீனிவாசன் அயலான்! கிரிஜா தன்னை மணக்கும்படி கேட்டும் அவளைச் சகோதரியாய் எண்ணியிருப்பதாய்ச் சொன்னதைக் கேட்டு வியப்படைந்தான். அந் நிமிடமே அவன் மனசிலிருந்த பொறாமைத் திரை அகன்று விழுந்தது. சட்டென்று கிரிஜாவின் கையைப் பிடித்துக் கொண்டான். "கிரிஜா, என்னை மன்னித்துவிடு. அவனை நான்தான் பொய்யாகக் கடிதங்கள் எழுதி ஊரை விட்டு விரட்டினேன். இன்று தான் அவன் குணம் தெரிந்தது. அவனை எப்படியாவது தேடிப் பிடித்து உன்னை அவனுக்கே மணம் முடித்து வைக்கிறேன். இதில் உனக்குச் சந்தேகமிருக்குமானால் இம்மாதமே நான் வேறு பெண்ணை மணந்து கொள்கிறேன். இது சத்தியம்" என்றான்.

அதை ஆமோதிப்பது போல் காலை பூஜையின் மணியோசை கோயிலிலிருந்து காற்றில் தவழ்ந்து வந்தது. கிரிஜா இரு கைகளையும் கூப்பி அஞ்சலி செய்தாள்.

காலப் பறவை இரண்டு தடவை தன் சிறகை யடித்துக் கொண்டது. அந்த இரண்டு வருடத்தில் தன் உழைப்பின் மிகுதியால் ஒரு கம்பெனிக்கே முதலாளியாய் ஆகிவிட்டான் சீனிவாசன். அவ்வளவு பணமிருந்தும் விவாகம் செய்து கொள்ள மட்டும் மனம் வரவில்லை. ஒவ்வொரு சமயம் தோன்றினாலும் கிரிஜாவின் ஏக்கம் பிடித்த முகம் தோன்றி அவ் வெண்ணத்தைத் தடை செய்து விடும்.

ஒரு சமயம் சீனிவாசன் கம்பெனி விஷயமாய்க் கடலூர் சென்றிருந்தான். ஒரு நாள் அவன் தங்கியிருந்த ஜாகையில் பையன் ஒருவன் கடிதம் ஒன்றைக் கொடுத்து விட்டுப் போனான். அதைப் படித்த சீனிவாசன் ஆச்சரியத்தால் திகைத்தான். அதில் ஒரு விலாசம் எழுதி அங்கு வந்து பார்க்கும்படி குறிப்பிட்டிருந்தது. கையொப்பம், 'ராமமூர்த்தி' என்றிருந்தது. சீனிவாசனுக்குப் பழைய சம்பவங்கள் யாவும் நினைவுக்கு வந்தன. தன்னை மோசம் செய்தவனைப் போய்ப் பார்ப்பதா வென்று எண்ணினாலும் அவன் ஊரைவிட்டு விரட்டியதால் தானே தன்னால் இந் நிலைக்கு வர முடிந்தது என்று தோன்றவே அன்று சாயங்கிரமே கடிதத்தில் குறிப்பிட்ட பங்களாவுக்குச் சென்றான்.

வாசல் தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்த தாசில்தார் அவனைக் கண்டதும் ஆவலுடன் வரவேற்றார். ராமமூர்த்தி கையில் குழந்தையுடன் அங்கு வந்தவன் "வா அப்பா, சீனிவாசா, இரண்டு வருஷங்களாய் உன்னை எங்கெல்லாம் தேடினேன்!" என்றான். பிறகு உள்ளே திரும்பி. "கிரிஜா" என்று கூப்பிட்டான்.

கிரிஜா உள்ளிருந்து வந்தவள் சீனிவாசனைக் கண்டதும் தடை கட்டிய நாகம்போல் நின்று விட்டாள். அன்று மலர்ந்த தாமரை போல் ஒளி வீசும் அவளைக் கண்டு பிரமித்தான் சீனிவாசன். "கிரிஜா, சுகமா! உன் பாலனுடன் உன்னைக் காண வேண்டுமென்றிருந்தது" என்றான்.

கிரிஜாவின் முகம் மாறியது. "என்ன, என் பாலனா! எனக்கு இன்னும் விவாகமே ஆகவில்லையே! என் இஷ்ட தெய்வம் இன்று தானே என்னைக் காண வந்தார்!" என்றாள்.

தாசில்தார் சீனிவாசன் திகைப்பதைப் பார்த்துச் சிரித்தார். "சீனிவாசா, அவளுக்கு உன்னைத் தவிர எவரையுமே கல்யாணம் செய்து கொள்ள இஷ்டமில்லை. நீ ஊரை விட்டுப் போனதுமே ராமமூர்த்தி தன் தவறை உணர்ந்து என்னிடம் மன்னிப்புக் கோரி எப்படியும் உன்னைக் கண்டுபிடித்து உனக்கே கிரிஜாவை மணம் செய்விப்பதாய்ச் சபதம் செய்தான். அதன்படி செய்தும் விட்டான். கையிலிருப்பது அவன் பாலனே" என்றார்.

சீனிவாசனுக்கு ஏற்பட்ட வியப்பும், பிரமையும் நீங்க வெகு நேரமாயிற்று. அதன்பின் அங்கேயே யிருந்தான். சென்னைக்குத் திரும்பும் போது கிரிஜாவையும் மணம் செய்து அழைத்துக் கொண்டு வந்தான். இதுதான் பூவால் நடந்த கல்யாணம்.

ஜயராமன் கதையை முடித்து விட்டுச் சாரதாவின் முகத்தைப் பார்த்தான். மைசூர் மல்லிகையைப் போலவே அவன் முகம் மலர்ந்திருந்தது. சாரதா அவன் கொண்டு வந்த பூவைத் தொடுத்து உடனே தலையில் வைத்துக் கொண்டாள்.

சாரதா சாளரக் கதவைத் திறந்தாள். இயற்கையின் கோர தாண்டவம் நின்று வானம் நிர்மலமாய் மாறித் தண்மதி பிரகாசித்துக் கொண்டிருந்தது. வெள்ளிபோல் ஜ்வலிக்கும் நிலவையும், சாரதாவின் முகத்தையும், அவள் தலையிலணிந்த வெண் மலரையும் மாறி மாறிப் பார்த்தான் ஜயராமன். கணவன் தன்னைக் கவனிப்பது கண்டு நாணத்துடன் அப்பால் நகர்ந்தாள் சாரதா.

# இரண்டும் வாட்டர்புருப் கடியாரங்கள் — அவை ரோலெக்ஸ் தயாரிப்புகளுந்தான்



ஆடவருக்கேற்றது டியூடர். அதன் வாட்டர் புருப் கேஸ் உள்ளிருக்கிற நேர்மையான 17 ஜுவல் யந்திரத்தை தூசி, அழுக்கு, ஈரம் புகாமல் பாதுகாக்கின்றது. வெளியே அது வல்களுடைய பெண்மணிகளுக்கு டியூடர் ஆரிஸ்டர் கடியாரத்தை சிபார்சு செய்வோம் — வருடக்கணக்கில் சேவைபுரியும். எமது டியூடர் கடியாரங்களின் எல்லா நிறுசுகளையும் வந்து பாருங்கள் — நேரில் வரமுடியாதவர்களுக்கு ஒரு இலவச காட்லாக் அனுப்புவோம்.



## டியூடர்

கடியாரங்கள்
ஜெனிவா, ஸ்விட்ஸர்லாந்து, தயாரிப்புகள்

தென்இந்தியாவில் ஏக விநியோகஸ்தர்கள்:

**மெஸர்ஸ் பி. ஆர் & ஸன்ஸ் லிட்.,**

மவுண்ட் ரோட், மதராஸ்

R. 735

# பழைய பேர்வழி!

ரா. ஷீ.

கரீமை உங்களுக்குத் தெரியாது. ஆம், தெரிந்திருக்கவும் நியாயம் இல்லைதான். கரீம் என்னும் புனிதப் பெயரைத் தாங்கும் அந்தப் பெரியார் யார், எப்படிப்பட்டவர் என்று என்னைக் கேளுங்கள், சொல்கிறேன். என்னைக் கூடக் கேட்காதீர்கள். என் மனத்தைக் கேளுங்கள். அதுதான் உங்களுக்குச் சரியான பதில் சொல்லும்.

இந்த உலகத்தில் எத்தனை யெத்தனையோ அறிவாளிகளைப் பார்த்திருக்கிறேன்; மலை விழுங்கி மகாதேவர்களுடனெல்லாம் பழகும் வாய்ப்பு எனக்குக் கிட்டியிருக்கிறது. ஆனால் இந்தக் கரீமைப் போன்ற ஆட்களை நான், பார்த்ததேயில்லை. ஆள் என்றால் ஆள், அம்மாப் பேட்டை ஆள் என்பார்களே, அப்படிப் பட்டவன் கரீம். ஆங்கிலத்தில் ஒரு எழுத்து என்றால் ஒரு எழுத்துத் தெரியாது. ஆங்கிலப் பத்திரிகையைக் கையில் கொடுத்தால் நேராகப் பிடித்திருக்கிறோமா, தலைகீழாகப் பிடித்திருக்கிறோமா என்று கூட அவன் அறியான். ஆனால் இரண்டு ஆண்டுகள் 'காஸ்மாபாலிடன்' கிளப்பில் அங்கத்தினனாக இருந்திருக்கிறான் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! பார்ப்போரைப் பிரமிக்க வைக்கும் அளவுக்கு முதல் தரமான சூட்டை அவன் 'டிப் டாப்'பாக அணிந்து கொண்டு வருவான்.

'பிரிட்ஜ்' ஆட்டம் ஆடும் பொழுது அவனுக்கு 'நோ பிட்' 'டு நோ டிரம்ப்ஸ்' என்ற சொற்களை ஆங்கிலேயர்களும் வியக்கும் வண்ணம் உச்சரிக்கத் தெரியும். அவனிடம் இன்னொரு தனி விசேஷமும் உண்டு. அது அவனிடம் மணிக்கணக்காக ஆங்கிலம் பேசிப் பார்த்தால்தான் தெரிய வரும். 'எஸ்,' 'நோ' என்ற சொற்களை எங்கே எப்பொழுது உபயோகிக்க வேண்டும் என்பதை அவனைப் போல் அறிந்திருந்தவர்கள் யாருமே கிடையாது. இது விஷயத்தில் அவனுக்கு இணை அவன் தான். எங்கேயாவது ஒரு இடத்திலாவது தப்பித் தவறித் தவறு ஏற்பட வேண்டுமே, அது தான் அவனிடம் கிடையவே கிடையாது.

எத்தனையோ நாட்கள் வரை ஜனங்கள் அவனைப் பெரும் பட்டதாரி என்றே எண்ணி வந்தார்கள். ஐயா ஆங்கிலக் கல்விக்கு அருகில் கூடப் போகவில்லை என்ற விஷயம் வெட்ட வெளிச்சமாக்கப் பட்ட பொழுதிலும்கூட அவர்களுக்கு இலேசில் நம்பிக்கை உண்டாக வில்லை. அரபி, பார்ஸி ஆகிய மொழிகளிலும் அறிவு அவ்வளவு பிரமாதம் என்று சொல்லி விடுவதற்கில்லை. தாய் மொழிக்கே தாளம் என்றால் மற்ற விஷயங்களைப் பற்றி அதிகம் சொல்வானேன்! இருந்தாலும் கவியரங்கத்தின் மத்தியில் நடு நாயகமாக அமர்ந்து தலையாட்டி ரசித்து 'பேஷ், பேஷ்!, பலே பேஷ்!' ஆகிய சொற்களை அவன் அள்ளி விடும்பொழுது அவனைப் போன்ற ரசிக சிகாமணி இந்த உலகத்தில் வேறு யாருமே இருக்க முடியாது என்றுதான் எண்ணத் தோன்றும். படித்துத் தேர்ந்த பண்டிதர்களுடன் உட்கார்ந்து இலக்கிய சர்ச்சை செய்யும்பொழுது அவன் வாரி வழங்கும் அபிப்பிராயங்களைக் கேட்டால், அவனைப் போன்ற அபார மேதை உலகத்தில் ஓரிருவர் தான் இருப்பார்கள் என்று முடிவு கட்டி விடுவீர்கள்.

அவன் என்ன செய்கிறான், ஏது செய்கிறான்! ஏதாவது தொழிலில் ஈடுபட்டிருக்கிறானா அல்லது உத்தியோகத்தில் இருக்கிறானா என்று என்னைக் கேட்டு விடாதீர்கள். இது வரை அது யாருக்குமே தெரியாத பரம ரகசியம். ஆனால் எப்பொழுது பார்த்தாலும் ஏதாவது ஒரு நல்ல வேலையோடு இருப்பவன் போலவே அவன் தோன்றினான்.

நன்றாக உண்டு உடுத்தி வாழ்கிறான். பெரிய மனிதர்களோடு பழகுகிறான். ஒவ்வொரு ஆபீஸிலும் இரண்டொருவரையாவது தவறாமல் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறான். ஒவ்வொரு இலாக்காவிலும் அவனுக்கென்று ஒரு சில நண்பர்கள் இருந்தார்கள். இதையெல்லாம் பார்க்கும் பொழுது அவனை அசகாய சூரன் என்று ஒப்புக் கொள்ளாமல் எப்படி இருக்க முடியும்!

ஆனால் ஒருநாள் என்னடா வென்றால், ஆள் அடியோடு மாயமாக



மறைந்து விட்டான். அதனால் நண்பர்கள் அவனைப் பற்றித் தலைக்கு ஒரு விதமாக வாயில் வந்தபடி யெல்லாம் பேசிக் கொள்ளலாயினர்.

"நான் முன்னமேயே சொல்லவில்லையா! ஆள் பலே அழுக்கன்!" என்றான் ஒருவன்.

"இந்த ஆட்டம் பாட்டமெல்லாம் எத்தனை நாளைக்கு, அப்பா! கடன் தலைக்குமேல் ஏறி விட்டது. கடன்காரர்களின் தொல்லை தாள முடியாமல் எங்கேயாவது போய்த் தூக்குப் போட்டுக் கொண்டிருப்பான். வேறு என்ன!" என்றான் இன்னொருவன்.

பொதுவாக ராணுவத்தில் சேர்ந்திருப்பான் என்றுதான் எல்லோருமே அபிப்பிராயம்



கொண்டிருந்தார்கள். ஆனால் அனீஸுக்கு மட்டும் எங்கேயாவது தண்டனை கிடைத்து அவன் சிறையில் அடைபட்டுக் கம்பி எண்ணிக் கொண்டிருப்பான் என்ற எண்ணம்.

கரீம் மறைந்து, கரீமின் நினைவு மறைந்து இரண்டு வருஷங்களுக்குமேல் ஆகிவிட்டன. அப்பொழுது நான் லாகூரில் இருந்தேன். ஒரு நாள் அனீஸ் அவசரம் அவசரமாக என்னிடம் ஓடி வந்தான். முகத்தில் குமிழியிட்டுக் கொண்டிருந்த சிரிப்பை அவனால் அடக்க முடியவில்லை. என்னைப் பார்த்துப் போவதற்காக லாகூருக்கு வந்திருந்த அனீஸை நான் வேலை பார்த்து வந்த இலாக்காவிலேயே ஒரு உத்தியோகம் வாங்கிக் கொடுத்து என்னுடனேயே வைத்துக் கொண்டிருந்தேன். சொல்லப் போகும் விஷயத்துக்கும் சொல்லும் விஷயத்துக்கும் துளிக்கூடச் சம்பந்தம் இல்லையே என்று எண்ணுகிறீர்கள். ஒரு குறிப்புக்காகச் சொல்லி வைத்தேன். இல்லாவிட்டால் அனீஸ் இங்கே எப்படி வந்து சேர்ந்தான் என்று கேட்க மாட்டீர்களா!

எதற்காக அனீஸ் இப்படிச் சிரிக்கிறான்! மூச்சு விடக்கூட முடியாமல் அவனுக்குச் சிரிப்பு இப்படிப் பொத்துக் கொண்டு வரக் காரணம் என்னவா யிருக்கலாம்! விவரம் விளங்காமல் நான் திகைத்து நின்றேன். அனீஸ் சிரித்துக் கொண்டே நின்றானே தவிர, விஷயத்தைச் சொல்லவில்லை. எனக்கு ஆத்திரம் வந்து விட்டது. அவனை அதட்டி, "என்ன விஷயம்! ஒன்றும் சொல்லாமல் இப்படிச் சிரித்தால் என்ன அர்த்தம்!" என்று கடிந்தேன்.

"உம் ததுல் ஹுக்மா!" என்றவன் மறுபடியும் வயிற்றைப் பிடித்துக் கொண்டு சிரிக்க ஆரம்பித்து விட்டான்.

'உம் ததுல் ஹுக்மா' என்றால் என்ன அர்த்தம் என்றுதானே கேட்கிறீர்கள்! வைத்திய விசாரதன் என்று பொருள்.

அவன் சிரிப்பு ஓய அரை மணி நேரம் பிடித்தது. "கரீம் உயிருடன்தான் இருக்கிறான். நாம் நினைத்ததுபோல் சிறையில் இல்லை. இதே லாகூரில்தான் இருக்கிறான். அதுவும் மிக மிகப் பிரமாதமான வைத்தியனாக இருக்கிறான். வைத்தியசாலை ஒன்று ஆரம்பித்து நடத்துகிறான். வைத்தியசாலை வெகு நன்றாக நடந்து வருகிறது. இந்தத் தொழிலில் அவனுக்குக் கொள்ளை லாபம் கிடைத்து வருகிறது!" என்று அடுக்கிக் கொண்டே போனான்.

எனக்கு ஒரே ஆச்சரியம்! "ஆமாம், ஒன்றும் படிக்காமல் அவன் எப்படி வைத்தியனாயிருக்க முடியும்!" என்று கேட்டேன்.

"'ஒழுங்கு முறையுடன் யூனானி வைத்தியம் படித்தேன்; படித்துப் பட்டம் கூட வாங்கியிருக்கிறேன்' என்று அவன் சொல்கிறான்!" என்றான் அனீஸ்.

"அது சரி, அனீஸ்! வைத்திய சாஸ்திரம் படிக்கிற தென்றால் கொஞ்சமாவது எழுத்து வாசனை இருக்க வேண்டாமா! அவ்வளவு தூரம் அவனுக்கு அறிவு ஏது!" என்று வியப்புடன் கேட்டேன்.

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. நீங்களே அவனிடம் நேரில் கேட்டுக் கொள்ளுங்கள். ஆனால் நான் இந்தக் கண்களாலேயே பார்த்தேன். அவனுடைய வைத்தியசாலை களை ஜோராக நடந்து கொண்டிருக்கிறது. பிரமாதமான பெரிய அறை. அழகான விரிப்பு. சாய்மானமும் திண்டும் போட்டுக் கொண்டு ஜம்மென்று உட்கார்ந்திருக்கிறான். எதிர்த்தாற் போல் 'ஹுக்கா' வைத்திருக்கிறது. அவன் சிஷ்யர்கள் அவன் சொல்லும் மருந்தை எழுதிக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். நோயாளிகள் ஈ மொய்ப்பதைப் போல் கூடியிருக்கிறார்கள். பணத்தை வாங்குவதும் பெட்டியில் போடுவதுமா யிருக்கிறான். இன்று இரவு என்னையும் உங்களையும் விருந்துக்கு அழைத்திருக்கிறான்!" என்று மூச்சுவிடாமல் சொல்லி முடித்தான் அனீஸ். அதுமட்டுமில்லை. அன்று மாலை அவனது மிகப் பெரிய பங்களாவுக் கெதிரே கொண்டு போய் என்னை நிறுத்தி, "இந்தப் போர்டைக் கொஞ்சம் படித்துப் பாருங்கள்!" என்றான்.

படிக்கப் படிக்க அது ஹனுமார் வால்போல் மிகவும் நீண்டு கொண்டிருந்தது. அந்த மகாராஜாக்கள் இந்த மகாராஜாக்கள் என்று பல மகாராஜாக்களின் பெயரைப் போட்டு, அவர்களுக்கு அரசாங்க வைத்தியராக இருந்த இன்னாருடைய பேரன், இன்னாருடைய பிள்ளை என்றெல்லாம் எழுதி வைத்திய சாஸ்திரம் சம்பந்தமாக எத்தனை யெத்தனை பட்டங்கள் உலகத்தில் உண்டோ, அத்தனை பட்டங்களையும் பொறித்திருந்தது.

அத்தனை பெரிய போர்டைப் படிப்பதென்றால் நோயற்றவனுங்கூட நோயாளியாகிவிட

வேண்டியதுதான். ஏனெனில் அதை ஒரு மூச்சில் படிக்கத் தொடங்கிய எனக்குப் பெருமூச்சு வாங்கத் தொடங்கி விட்டது. என்னைப் போலத்தானே பிறரும் இருக்க வேண்டும்! ஆனால் நல்ல வேளையாக — அது யாருடைய செயலோ தெரியாது, கடவுளுடைய செயலாக இருந்தாலும் இருக்கலாம். அல்லது 'உம்ததுல் ஹுக்மா' கரீமினுடைய செயலாக இருந்தாலும் இருக்கலாம். நான் முழுதும் படித்து முடிப்பதற்கு முன்பே 'ஹில்மன்' கார் ஒன்று வந்து நின்றது. 'உம்ததுல் ஹுக்மா' கரீம் அவர்கள் ஒரு வேலை நோயாளிகளைப் பார்த்து வருவதற்காக, அதாவது 'விஸிட்'டுக்காகப் போய் விட்டு அப்பொழுதுதான் திரும்பிக் கொண்டிருந்தாரோ, என்னமோ எனக்குத் தெரியாது! எங்களைப் பார்த்ததும் 'உம்ததுல் ஹுக்மா'வாகச் சந்திக்காமல் சாதாரண நண்பன் கரீமாகவே பழகினான் என்பதைக் குறிப்பிட வேண்டும். "ஏன், பிரதர்! நீ எத்தனை நாளாக லாகூரில் இருக்கிறாய்!" என்று என்னைக் கேட்டான்.

நாங்கள் பேசிக் கொண்டே வீட்டுக்குள் நுழைந்தோம். அதற்குள் நான் லாகூருக்கு வர நேர்ந்த விவரம், எப்பொழுது வந்தேன், எப்படி வந்தேன் என்பது போன்ற விஷயம் ஆகியவற்றை ஆதியோடு அந்தமாக அவனுக்கு எடுத்துரைத்தேன்.

நாங்கள் போய் ஹாலில் உட்கார்ந்தோம். "ஏன் அப்பா, கோணங்கி! நீ கல்யாணம் செய்து கொண்டு விட்டாயா! இல்லை, முன் போல் ஒண்டிக் கட்டையாகத்தான் இருக்கிறாயா!" என்று கேட்டான் கரீம்.

ஆகா! அந்தராத்மா என்று ஒன்று இருக்கிறது என்பது எவ்வளவு உண்மை! என்னவோ, ஏனோ எனக்குத் தெரியாது. அந்தச் சமயத்தில் என் புத்தியில் அப்படித் தோன்றிற்று. அவ்வளவுதான் நான் தற்சமயத்துக்குச் சொல்ல முடியும். அதற்குள் அவசரப்படாதீர்கள். என்ன சொன்னேன் என்பதை இப்பொழுதே சொல்லி விடுகிறேன்.

"ஏன் கேட்கிறாய், போ! கல்யாணம் என்று ஒன்று செய்து கொண்டேனே, எதற்காகத்தான் செய்து கொண்டேனோ, தெரியவில்லை! நிம்மதியோடு ஒண்டிக் கட்டையாக இருந்தவனுக்கு எதற்காக இந்த வம்பும் தும்பும்! விருதுப்பட்டி சனியனை விலைக்கு வாங்கிக் கொண்ட கதையாக முடிந்து விட்டது. அவள் வீட்டுக்கு வந்த நாளாக ஒரு நாள் என்றால் ஒருநாள் சுகமாயில்லை. எப்பொழுதும் படுத்த படுக்கைதான்! அந்த வியாதி மூஞ்சி......" என்று ஆரம்பித்தேன்.

அதைக் கேட்ட அனீஸ் என்னைக் கூர்ந்து கவனித்தான். நான் வாயைப் பொத்திக் கொண்டு சும்மா இருக்குமாறு அவனுக்குச் சமிக்ஞை செய்தேன். என் சமிக்ஞையைப் புரிந்து கொண்டு நல்லவேளையாக அவனும் மௌனம் சாதித்தான்.

"என்ன பிரதர், இது! இப்படிப் பேசுகிறாயே!" என்றான் கரீம்.

"என்றைக்காவது அவளுக்கு உடம்பு சரியாயிருந்தால் தானே!" என்றேன் நான்.

"என்ன! உடம்பு சரியில்லையா! என்ன உடம்பு! என்ன செய்கிறது!" என்று வெகு அக்கறையுடன் விசாரித்தான் கரீம்.

"என்ன சொல்வேன், கரீம்! அவளுக்கு நான் செய்யாத வைத்தியம் இல்லை; கொடுக்காத மருந்து இல்லை. ஆனால் நோய் என்னவென்று பிடிபட்டால்தானே! நீதான் நமக்கு வேண்டியவனாயிற்றே. வைத்தியம் வேறு கற்றுக் கொண்டிருக்கிறாய். நீ பார்த்துச் சொன்னால் சரி!" என்றேன்.

"இப்பொழுதே வேண்டுமானாலும் நான் பார்க்கத் தயார். இல்லாவிட்டால் நாளைக் காலை இங்கே அழைத்து வா! நான் பார்த்துச் சொல்கிறேன்! இதற்கு நீ என்னைக் கேட்க வேண்டுமா!" என்றான் கரீம்.

"நீ எதற்கு அப்பா சிரமப்பட வேண்டும்! நாளைக் காலையில் நானே அவளை அழைத்து வருகிறேன். வியாதியை முளையிலேயே கிள்ளி விடுவதுதானே நல்லது! கவனிக்காமல் முற்ற விடுவது அழகாகுமா!" என்றேன்.

வெகு நேரம் வரை அரட்டை யடித்துக் கொண்டிருந்து விட்டு நாங்கள் விருந்துண்டோம். நேரம் ஆகிவிடவே, கரீமிடம் விடை பெற்றுக் கொண்டு நானும் அனீஸும் வீட்டுக்குப் புறப்பட்டோம். அனீஸுக்குச் சிறிதும் பொறுமையில்லை. கரீமின் வீட்டைத் தாண்டி வெளியே வந்ததுதான் தாமதம்; என்னைப் பார்த்து, "ஆமாம், இது என்ன வேடிக்கை! சும்மாவுக்கேனும் ஒரு மனைவியைச் சிருஷ்டித்



துக் கொண்டீர்கள். கற்பனையில் சிருஷ்டித்துக் கொண்ட அந்த மனைவிக்கு வியாதியையும் வேறு சிருஷ்டித்துக் கொண்டீர்கள். இதெல்லாம் என்ன!" என்றான் அனீஸ்.

"போகப் போகப் பார்! தானாகப் புரியும்!" என்றேன் நான்.

"நீங்கள் சொல்வதற்கு என்ன அர்த்தம்!"

"என்ன அர்த்தமா! ஆள் நன்றாக வேஷம் போடுகிறான். வைத்தியம் என்றால் என்ன என்று கூட இவனுக்குத் தெரியாது. நான் இது சம்பந்தமாகச் சத்தியம் வேண்டுமானாலும் செய்யத் தயார். அந்தக் குட்டை உடைப்ப

தற்காக ஒரு தீர்மானம் செய்திருக்கிறேன். அது என்ன, தெரியுமா! நான் நாளைக்கு என் மனைவியை இவனிடம் அழைத்துப் போகப் போகிறேன். இவன் கொஞ்ச நாட்கள் அவளுக்கு வைத்தியம் பண்ணப் போகிறான். அப்பொழுது நீ வேடிக்கை பார். அப்புறம் உனக்கு எல்லாம் தானாகப் புரிந்துவிடும்!" என்றேன்.

"அது சரி, மனைவிக்கு என்ன ஏற்பாடு செய்யப் போகிறீர்கள்!" என்று அனீஸ் பொறுக்க மாட்டாமல் கேட்டான்.

"நீ ஒரு சுத்த அசடு. அதுதான் நீ இருக்கிறாயே!" என்றேன்.

அனீஸ் நடந்து வந்தவன் திடுதிப்பென்று நின்று விட்டான். "நான் இருக்கிறேனா! என்ன நீங்கள் சொல்கிறீர்கள்! உங்களுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா!" என்று கேட்டான். அவன் முகத்தைப் பார்த்தால் என்னைப் பைத்தியம் என்றே எண்ணிவிட்டான் என்று தோன்றியது. அவன் விழிக்கும் விழியைப் பார்த்தபோது எனக்கு 'அவன் பைத்தியமா, நான் பைத்தியமா!' என்றே சந்தேகம் உண்டாகிவிட்டது.



"நான் சொல்வது என்னவென்றால் நாளைக்கு உன்னை ஒரு மூடி போட்ட வண்டியில் அவனிடம் அழைத்துச் செல்வேன். நம் பெண்களின் பழக்கப்படி நீ 'புர்க்கா' அணிந்திருப்பாய். அவன் உன்னைப் பாராமலே உன் கையைப் பிடித்து நாடி பார்ப்பான். என்னிடம் நிலைமையை விசாரித்துக் கேட்டு அறிவான். மருந்து எழுதிக் கொடுப்பான். முறைப்படி வைத்தியம் நடக்கும். ஒரு நாள் அம்மாதிரி நீ என்னை அழைத்துப் போனால் நான் ஒரு நாள் உன்னை அம்மாதிரி அழைத்துப் போகிறேன். என்னை அழைத்து வரும் நாள் எல்லாம் நான் எங்கேயோ கொஞ்சம் வேலையாகப் போயிருக்கிறேன் என்றும் அதனால் நீ அண்ணியை அழைத்து வந்ததாகவும் சொல்லிக்கொள். மற்ற நாட்கள் நான் பார்த்துக் கொள்கிறேன்!" என்று விளக்கமாகக் கூறினேன்.

அதைக் கேட்ட அனீஸ் ஒரு ஆள் உயரம் துள்ளிக் குதித்தான். "இது பிரமாத வேடிக்கையாகத்தான் இருக்கும். பேஷ், பேஷ்! நான் இப்பொழுதே தயார்!" என்று மகிழ்ச்சியுடன் சம்மதித்தான்.

மறு நாள் நான் அனீஸை மூடி போட்ட வண்டியில் கரீம் வீட்டுக்கு அழைத்துச் சென்றேன். மூளைக் குறைவுள்ள நோயாளிகள் ஏகமாகக் கூடியிருந்தார்கள். மூளைக் குறைவுள்ள என்று சொல்லி விட்டேனே என்பதற்காக என்மீது யாரும் கோபிக்காதீர்கள். அடிமுட்டாளை அசகாயசூரன் என்று எண்ணி வந்தவர்களை மூளையுள்ளவர்கள் என்று என்னால் எப்படி ஒப்புக்கொள்ள முடியும்! அதனால் தான் அவர்களை மூளைக் குறைவுள்ளவர்கள் என்று சொன்னேன்.

எங்களைப் பார்த்தானோ, இல்லையோ, மற்ற நோயாளிகளைப் பார்ப்பதை அப்படியே நிறுத்தி விட்டுக் கரீம் ஓடோடியும் வந்து எங்கள் வண்டிக்கருகில் நின்று கொண்டான். "சுருக்கமாக நான் உடல் நிலையைச் சொல்லி விடுகிறேனே!" என்று நான் ஆரம்பித்தேன்.

விழிகளை உருட்டி ஒரு தடவை என்னைப் பார்த்து விட்டு, ஒரு அதட்டல் போட்டான் கரீம். பிறகு, "உனக்குக் கொஞ்சங்கூடப் புத்தி இல்லை யப்பா! நீ பேசாமல் இரு. எனக்கு எல்லாம் தெரியும்!" என்று சொல்லி விட்டு, "அண்ணி! வணக்கம்!" என்றான்.

"நான் வண்டிக்குள் எட்டிப் பார்த்தேன். வந்த சிரிப்பை அனீஸால் அடக்க முடியவில்லை. அவன் செய்த முயற்சியில் விழிகள் பிதுங்கி வெளியில் வந்து கொண்டிருந்தன. நான் செயற்கைக் கோபத்தை வரவழைத்துக் கொண்டு, "வணக்கம் தெரிவிப்பதற்கு என்ன!" என்று வண்டிக்குள் பார்த்துக் கடிந்து கொண்டேன்.

"சம்பிரதாயங்களும் உபசார வழக்குகளும் அப்புறம் ஆகட்டும். இப்பொழுது விஷயத்தைச் சொல்லு!" என்றான் கரீம்.

"இந்த வியாதி இவளுக்குக் கிட்டத்தட்ட ஒரு வருஷமாக இருக்கிறது!" என்று நான் ஆரம்பித்தேன்.

என்ன இருந்தாலும் கரீம் அப்பொழுது வைத்தியன் அல்லவா! என் பேச்சுக்கு இடையே குறுக்கிட்டு, "நீ சொல்லிக் கொண்டு வா! நான் நாடி பிடித்துப் பார்க்கிறேன்!" என்று கையை வண்டிக்குள் விட்டான். அனீஸ் தன் கையை நீட்டினான். நான் வியாதியைப் பற்றி வர்ணிக்கலானேன்.

"ஆரம்பத்திலே வெறும் ஜலதோஷமாகத் தான் இருந்தது. ஆனால் கொஞ்ச நாட்கள் ஆனதும் 'என்சைக்கிளோபீடியா' அடிக்கடி வரத் தொடங்கியது!" என்றேன். கரீம் நான் சொல்வதைப் புரிந்து கொண்டவன் போல், "சரி, அப்புறம் மேலே சொல்லு!" என்றான்.

"'என்சைக்கிளோபீடியா' அடிக்கடி வரவே, பலஹீனம் அதிகரித்து விட்டது!"

கூந்தல் பெருகினால்
விதவிதக் கொண்டைகளை
ஜோடிப்பது வெகு எளிதே!

# கேசவர்த்தினி



கேசவர்த்தினி கொண்டு கூந்தலைப் பெருக்கிக் கொள்ளுங்கள். இனி பொடுகைத் தலையில் சமப்பானேன்? தலை அரிப்பை நிறுத்துங்கள். இள நரையைத் தடுங்கள். நரையையும் தள்ளி வையுங்கள்.

மறைந்துள்ள கூந்தலழகை
**கேசவர்த்தினி**
கொண்டு எடுத்துக் காட்டுங்கள்

**ஷாம்புவினால் கூந்தலை சுத்தமாகவும் சுகந்தமாகவும் ஆக்குங்கள்**

**கேசவர்த்தினி அணா 14. ஷாம்பு அணா 14. தபால் செலவு வேறு. எங்கும் கிடைக்கும்**

**கேசவர்த்தினி ப்ராடக்ட்ஸ், கோயமுத்தூர்** No. 5

# INDIGESTION

பிலிப்ஸ் தயாரிப்பான மில்க் ஆப் மக்னீஷியா உதவியால் அற்புதமாக நிவாரணம் பெறுங்கள். மிகவும் துரிதமாக, திறமையாக செயலாற்றும் உப்புச் சேர்க்கை கொண்ட பிலிப்ஸ், வயிற்றில் அமித அமிலத்தைச் சமனப்படுத்துகிறது. உடனே வலியையும், வேதனையையும் நிவர்த்திக்கிறது! இருந்த இடத்திலேயே நிவாரணத்திற்கு பலபேர் இனிய மணம் நிரம்பிய வில்லைகளை விரும்புகின்றனர். ஒவ்வொரு பிலிப்ஸ் வில்லையும் ஒரு தேக்கரண்டி திரவத்துக்கு சமமானதும் அதே திறமையும் வாய்ந்தது.




**MILK OF MAGNESIA**

**A PRODUCT OF**

# PHILLIPS

"ஆமாம், ஆமாம். அது வந்தால் அப்படித் தானே ஆகும்! மேலே சொல்லு!" என்று அவசரப்படுத்தினான் கரீம்.

"இந்த வியாதிக்கு ஹகீம் எம். என். அமீன் சாகப் இல்லை! அவர்தான் வைத்தியம் செய்தார். ஆனால் விடமின் 'டி' குறைவு ஏற்பட்டுக் கோளாறாக முடிந்து விட்டது!"

"அடாடா! என்ன அசட்டுத்தனம் பார்த்தாயா! ஹக்கீம் அமீன் சாகப் முதலிலேயே அதைக் கவனித்துத் தடுத்திருக்கணும்!" என்று கரீம் சொல்லவே, வண்டிக்குள்ளிருந்து 'கிக்கிக்கி' 'கக்கக்கா' என்ற குரல் வந்தது.

வண்டவாளம் வெளிப்பட்டு விடாமல் இருக்க வேண்டுமே என்று எண்ணி நான் உடனே என் புராணத்தைத் தொடங்கி விட்டேன். "இப்பொழுதுள்ள நிலைமை என்னடா வென்றால் சிறிது நேரத்துக் கொருதரம் 'டிரான்ஸ்மிட்டர்' வந்து விடுகிறது. அதனால் தான் இப்படி......" என்றேன்.

"அதுதான் பார்த்தாலே தெரிகிறதே! நீ சொல்ல வேறு வேண்டுமா! நாடி 'படபட' வென்று அடித்துக் கொள்கிறது. ரத்தக் கொதிப்பும் கொஞ்சம் அதிகமாகத்தான் இருக்கிறது!" என்றான் கரீம்.

"இந்த ஊருக்கு வந்த பிறகு டாக்டர் மூம்தாஜிடம் காண்பித்தேன். பழைய காலத்துக் 'கான்ஸ்டான்டிநோபு'ளாக இருக்குமோ என்று அவர் சந்தேகப்படுகிறார்!" என்றேன்.

கரீமினுடைய கெட்டிக்காரத்தனத்தை ஒரு முறை இங்கே சொல்லித்தான் ஆகவேண்டும். 'கான்ஸ்டான்டிநோபுள்' என்கிற வார்த்தையைக் 'கான்ஸ்டிபேஷன்' என்பதாகப் புரிந்து கொண்டு, "ஓகோ! மலச்சிக்கலும் கொஞ்சம் இருக்கிறது என்கிறாயா!" என்றான்.

"கொஞ்சம் என்ன! ரொம்ப அதிகம். அதோடு வீட்டுக்கு விலக்காயிருக்கும் காலத்தில் வயிற்றுவலி பொறுக்க முடிவதில்லை. அதோடு குழந்தைப் பருவத்தில் ஒரு தடவை 'வலாடி வாஸ்டக்' என்னும் வியாதி வந்து இவளைப் படாதபாடு படுத்தி விட்டது. என்ன செய்வேன், போ!" என்றேன்.

நான் சொன்னதைக் கவனமாகக் கேட்ட கரீம், "அப்படியா! அப்போ கர்னை ஒரு தடவை பார்க்கச் சொல்லிச் சில விஷயங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்!" என்றான்.

"நான் இவளை லேடி டாக்டரிடம் கூடக் கொண்டு போய்க் காண்பித்திருக்கிறேன். அவள் என்ன சொல்கிறாள் என்றால் இதெல்லாம் 'பிளிக்ஸி'னால் வந்த கெடுதல் என்கிறாள்!" என்றேன்.

"அவள் கிடக்கிறாள். வெறும் உளறல். எனக்கு அப்படியெல்லாம் ஒன்றும் இருக்கிறதாகத் தெரிய வில்லை. நான் மருந்து எழுதித் தருகிறேன். கடவுள் புண்ணியத்திலே ஒரே வாரத்தில் எப்படி மாறுதல் தெரிகிறது என்று பார். என்ன வெல்லாமோ பெரிய பெரிய வியாதிகளின் பெயரைச் சொல்லி உங்களைப் பயமுறுத்தி யிருக்கிறார்கள். அதெல்லாம் ஒன்றுமே இல்லை. ஒரு வேளை மூன்றடி இருந்திருக்குமோ, என்னவோ! இப்பொழுது துளிக் கூட அவற்றின் குறி தெரியவில்லை. ரத்த விருத்திக்கும் பலம் ஊறுவதற்கும் நல்ல மருந்தாகக் கொடுத்து விட்டோமானால் குடல், இருதயம், சுவாசப் பை எல்லாம் சரியாக

வேலை செய்ய ஆரம்பித்து விடும். உண்மையைக் கேட்கப் போனால் நாம் இவர்களுக்குப் பல விருத்திக்குத்தான் ஏதாவது மருந்து கொடுக்க வேண்டும்!" என்றான் கரீம்.

"ஹக்கீம் சாகப் ரெடியார்ட் கிப்ளிங் இருக்கிறாரே!......" என்று ஆரம்பித்தேன் நான்.

"அதெல்லாம் ஒன்றும் இல்லை. விட்டுத் தள்ளு. நீ பேசாமல் இரு. நான் மருந்து எழுதித் தருகிறேன். எப்படியாகிறது என்று பார்!" என்றான் கரீம்.

அவனிடம் மருந்தை வாங்கிக் கொண்டு வீட்டுக்குத் திரும்பி வந்தோம். அனீஸின் நிலை வெகு மோசமாகி விட்டது. சிரித்துச் சிரித்து அவனுக்கு வயிறு புண்ணாகிவிட்டது. கண்களிலிருந்து நீர் வற்றாத ஊற்றாகப் பெருகிக்கொண்டிருந்தது. சிரித்த சிரிப்பில் அவனுக்குக் கை கால்கள் எல்லாம் வெலவெலத்துப் போய் விட்டன. ஒருவிதமாகச் சிரிப்பு அடங்கிய பின், "இந்தமாதிரி வேடிக்கை பண்ணினால் சிரித்துச் சிரித்து நான் செத்தே போய் விடுவேன். இனிமேல் என்னால் ஆகாது!" என்று கூறினான்.

"சரி, நீ வேண்டாம். நான் வண்டிக்குள் இருக்கிறேன். நீ விவரத்தைச் சொல்லு. என்ன, சம்மதமா!" என்று கேட்டேன்.

அனீஸ் கைகளால் காதுகளைப் பொத்திக் கொண்டு, "ஊஹூம், என்னால் முடியாது. சிரிப்பை உங்களைப் போல் அடக்கிக் கொண்டு எனக்குச் சொல்ல வராது. இந்தக் கரீம் பலே கைகாரன்தான். காஸ்மாபாலிடன் கிளப்பில் அங்கத்தினனாயிருந்தது போலவே, பிரிட்ஜ் ஆட்டம் ஆடியது போலவே வைத்தியனாகவும் வேஷம் போடுகிறான். எல்லாம் தெரிந்ததாகப் பாவித்து நடிக்கிறான்!" என்றான்.

"ஆனால் ஒரு வேடிக்கை பார்த்தாயா! எங்கேயும் தன்னுடைய குறையைக் கொஞ்சமும் காட்டிக் கொள்ளாமல் 'மேக்கப்' பண்ணிக் கொண்டு போகிறான்!" என்றேன்.

"இருந்தாலும் ஏதாவது வைத்தியப் புஸ்தகத்தைப் புரட்டிப் பார்த்திருப்பானோ என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. இல்லாவிட்டால் ரத்த விருத்தி, குடல், இருதயம், சுவாசப்பை என்பது போன்ற வார்த்தைகளையெல்லாம் கணக்காகச் சொல்ல வராதல்லவா!" என்றான் அனீஸ்.

"அனீஸ்! நீ அடிமுட்டாள். இதையெல்லாம் மருந்து விளம்பரங்களைப் பார்த்துப் பார்த்துத் தெரிந்து கொண்டிருக்கிறான். நான் எழுதி வேண்டுமானாலும் தருகிறேன். சீட்டாட்டத்தின் பொழுது 'கோ பிட்', 'டு கோ டிரம்ப்ஸ்' என்ற வார்த்தைகளையெல்லாம் இவன் அநாயாசமாகச் சொல்லவில்லையா! அப்படித்தான் இதுவும்!" என்றேன்.

"அது கிடக்கட்டும். கடைசியில் நம்முடைய இந்த வேடிக்கை எதில் கொண்டு போய் விடும்!" என்றான் அனீஸ்.

"வேடிக்கை எதில் கொண்டுபோய் விடும்! நல்ல பலனையேதான் அளிக்கும். அப்படி அளிக்காவிட்டாலும் நம்மைச் சுத்த மண்டுகள் என்று எண்ணி இவன் ஏமாற்ற முயற்சிக்கிறானே, அதற்காவது விடிவு காலம் பிறக்கும். நாம் பார்ப்பதற்குப் பைத்தியமாகத் தோன்றினாலும் புத்தியில் பொல்லாதவர்கள் என்பதைப் புரிந்து கொண்டு விடுவான்! பிறருக்குப் புரிக்

தாலும் புரியாவிட்டாலும், நாம் நன்றாக அவனை அறிந்திருக்கிறோம் என்பதை அவனுக்குப் புரியும்படியாகவாவது செய்துவிட வேண்டும் அல்லவா!" என்றேன்.

மறுநாள் நான் வண்டிக்குள் இருந்தேன். அனீஸ் தன் அண்ணியின் தேக நிலையைப் பற்றிச் சொல்பவனாக வந்தான். நர்ஸ் பார்த்து என்ன சொன்னாள்! ஏது சொன்னாள்! முதல் நாள் மருந்து சாப்பிட்ட பின் உடல் நிலை எப்படியாயிற்று! இது போன்ற விவரங்களை அவன் சொல்ல ஆரம்பிப்பதற்கு முன்பாகவே, கரீம் வண்டிக்கருகில் வந்து என் நாடியைப் பிடித்துப் பார்க்கலானான். "கருப்பையில் 'இண்டர் சேஷனல்' தகராறுகள் ஏற்பட்டிருக்குமோ என்று நர்ஸ் சந்தேகப்படுகிறாள்!" என்றான் அனீஸ்.

"அதுதான் விஷயம். நான் சந்தேகப்பட்டது சரியாகத்தான் போயிற்று. ஆனால் நேற்றைக் காட்டிலும் இன்று நாடி நன்றாயிருக்கிறது!" என்றான் கரீம்.

அதைக் கேட்டதும் அனீஸுக்கு அடக்க மாட்டாத சிரிப்பு வந்து விட்டது. 'கட கட' வென்று சிரித்துக் குப்புற விழுந்தே புரளத் தொடங்கி விட்டான்.

என்ன விஷயம் என்று கரீமுக்கு விளங்க வில்லை. வியந்து சிலையாகச் சமைந்து நின்றான். அவனது அந்த வியப்பைப் போக்குவான் வேண்டி நானே வண்டிக்குள்ளிருந்து வெளியே வந்தேன். என்னைப் பார்த்ததும் இன்னும் பிரமித்துப் போய், "இது என்ன அப்பா, விளையாட்டு!" என்று கன கடுமையாகக் கடிந்து கொண்டான் கரீம்.

அனீஸ் சிரித்துக் கொண்டே, "கரீம்! நீ ரொம்ப ரொம்பக் கெட்டிக்காரன், அப்பா! உண்மை வைத்தியனாகவே பிரமாதமாக நடிக்கிறாயே!" என்றான்.

கரீம் அப்பொழுதும் முகத்தைக் கம்பீரமாக வைத்துக் கொண்டு, "நான் தான் முன்னாடியே சொன்னேனே! நாடியைப் பார்த்தால் ஆண் பிள்ளை நாடியாகத் தோன்றுகிறது. வியாதி சொல்கிறதைப் பார்த்தால் பெண்பிள்ளையினுடையதாகத் தோன்றுகிறது. அதனால்தான் என்னடா விஷயம் என்று எனக்குக் கடைசி வரை புரியாமற் போய்விட்டது!" என்றான்.

சிரித்த சிரிப்பில் அனீஸுக்கு உயிர் போய் உயிர் வந்தது. "இந்தக் கரீமைக் கொலை பண்ணினாலும் பாவமில்லை. வண்டவாளங்கள் எல்லாம் வெளி வந்த பின்னரும் தன் வேஷத்தை வேஷம் என்று ஒத்துக் கொள்கிறானா, பார்த்தீர்களா!" என்றான்.

"இப்படியெல்லாம் பயங்கர விளையாட்டா விளையாடுகிறீர்கள்! இருக்கட்டும், உங்களை ஒரு கை பார்த்து விடுகிறேன்!" என்று எங்களைக் கறுவினான் கரீம்.

இவன் என்ன எங்களைப் பார்ப்பதற்கு இருக்கிறது! நாங்கள்தான் இவனை ஒரு கை பார்த்து விட்டோமே! இருந்தாலும் ஒருவனுக்கு இன்னொருவன் தன் குட்டை உடைத்து விட்டால் கோபம் வராமல் இருக்குமா!

என்னதான் இருந்தாலும் வைத்தியர் கரீம் மறக்க முடியாத ஒரு நபர் என்பதில் மட்டும் சந்தேகம் இல்லை. இதை எந்தக் கோவிலில் வேண்டுமானாலும் அல்லது மசூதியில் வேண்டுமானாலும் சத்தியம் செய்து நான் சொல்லத் தயார். ஆனால் கரீமைப் புரிந்து கொண்டு விட்ட நேயர்கள் அதற்கு இடம் வைக்க மாட்டார்கள் என்று எனக்குத் தெரியும். என் எண்ணம் நியாயமானது தானே! (ஆதாரம்:— 'ஜெனகத் தானவி' எழுதிய உருதுக் கதை)

## டி. கே. சி. யின் கடிதங்கள்

திருக்குற்றாலம்
7—2—46

ஒரு மாதம் வரை சென்னையிலேயே இருக்க நேர்ந்து விட்டது. பாட்டு, நடனம், சினிமாப்படம் இவைகளைக் கொண்டு ஆனந்தமாய் நாட்கள் கடந்தன.

28-1-46 அன்று நான் இங்கு வந்து சேர்ந்தேன். உடல் ரொம்பவும் தேறி இருக்கிறது. வியக்க வேண்டிய காரியமே. ஆனாலும் மூன்று நாள் ஜலதோஷம் தொண்டைக்கட்டு வந்து தொந்தரவு செய்து கொண்டிருக்கிறது.

......இடத்தில் "பேபல் கோபுரம்" ஒன்று இன்று முதல் 11ம் தேதி வரை முனைந்து கட்டிக் கொண்டிருக்கிறார்கள். நானும் ஒரு செங்கல் உதவ வேண்டும் என்று கட்டளை பிறந்திருந்தது. அதாவது ஒரு புஸ்தகசாலையைத் திறக்க வேண்டும் என்பதாக. 'உடல் சரியாக இல்லாததால் வர இயலவில்லை' என்று தந்தி அடித்து விட்டேன்.

நம்மோடு ஒருவகையாய்ப் பழகியவர் தானே திருமூலர். அவர் காலமும் இந்தக் காலத்தை ஒட்டியே ஒரே இருட்டடிப் பாய்த்தான் இருந்திருக்கிறது.

"குருடும் குருடும்
குருட்டாட்டம் ஆடி
குருடும் குருடும்
குழி வீழும் ஆறே"

இந்த வாக்கியத்தையும் அதன் வேகத்தையும் கார்லைல் ஆசிரியர் கேட்டால் எப்படி எல்லாமோ கூத்தாடுவார்.

மிக்க அன்புடன்
டி. கே. சிதம்பரநாதன்

# பாக் செய்யப்படாத வில்லைகளை வாங்குவதில் ஜாக்கிரதையாய் இருங்கள் !



பாக் செய்யப்படாத வில்லைகள் வயிற்றுக் கோளாறு செய்யும் அமிலப் பொருள்களை உண்டாக்கக்கூடியதால், புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லைகளை ஆவியினின்றும் நீர்த்திவலைகளினின்றும் பாதுகாக்கும் பொருட்டுத் தனித்தனியாக சீல் செய்யப்பட்டிருக்கிறது. ஆகையால் புதிய 'ஆஸ்ப்ரோ' அபாயமில்லாதது. இது இருதயத்தையோ, வயிற்றையோ பாதிக்காது. அப்பழக்கம் ஏற்படுத்தக் கூடிய மருந்துகள் இதில் கிடையாது.

நவீன முறையில் சிறப்பாகத் தயாரிக்கப்பட்ட புதிய 'ஆஸ்ப்ரோ' துரிதமாக வேலை செய்கிறது. அதனால் தலைவலி, உடம்புவலி, ஜலதோஷம், ஜுரம் முதலியவைகளினின்றும் நிவாரணமளிக்க, சாப்பிட்ட மூன்று வினாடிகளில், அதனுடைய வேலையைத் துரிதமாக ஆரம்பிக்கிறது.

## அபாயமில்லாத துரித நிவாரணம் உங்களுக்குக் கிடைக்கும் — புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லை




'ஆஸ்ப்ரோ' வில்லைத் துண்டுகளையே வாங்குங்கள்.

★ வயிற்றுக் கோளாறு உண்டாக்கும் அமிலப் பொருள்களிலிருந்து காப்பாற்றும்.

★ எப்பொழுதும், எந்த சமயத்திலும், எந்த இடத்திலும் எளிதாக உபயோகிக்க கையில் எடுத்துச் செல்லக் கூடியது.

★ நியாயமான, ஆரோக்யமுள்ள மூன்று வில்லைகளின் விலை இரண்டு அணாதான்.

278

கடைகளில் விற்கப்படும் எல்லா 'ஆஸ்ப்ரோ' வில்லைகளும் புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லைகளே.

**எல்லோருக்கும் தெரியும் —**




ஆகையால்தான்
மற்றெந்தத்
தேயிலையையும் விட அதிகப்படியான ஜனங்கள்

**ப்ரூக் பாண்ட் தேயிலையையே**

வாங்குகிறார்கள்!

# அழியாத அன்பு



ஸ்ரீப்ரியா

அவசரம் அவசரமாக, சேலைத் தலைப்பில் சாவியை முடிந்து கொண்டு படியிறங்கித் தெருவில் நடக்கலானாள் கோமதி. அவளுடன் சுந்தரி மாமி, பார்வதத்தம்மாள் இருவரும் இருந்தனர். தெரு முனையில் நின்ற 'டாக்ஸி'யைப் பிடித்துக் கொண்டு அவர்கள் 'ஜம்'மென்று 'ஸ்ரீபுவனத்'தின் வாசலில் வந்திறங்கும் போது மணி இரண்டடித்து விட்டது. வாயில்புறத்திலிருந்து 'காம்பௌண்டை'த் தாண்டி வீட்டின் படியை மிதிக்கவே ஐந்து நிமிஷநடை பிடித்தது அவர்களுக்கு.

இவர்கள் மூவரும் அங்கே போய்ச் சேருவதற்கும், பங்களாவின் கதவு திறக்கப்படுவதற்கும் சரியா யிருந்தது.

"வாருங்கள், வாருங்கள்!" என்று லக்ஷ்மி மாமி அன்போடு அவர்களை வரவேற்றாள்.

"நேற்று உங்கள் அகத்தில் புடவைகளெல்லாம் வாங்கி வந்து விட்டதாகச் சொன்னாள் வேலைக்காரி தாயி. இன்றைக்கு ராத்திரி நீங்கள் ஊருக்குப் போகிறீர்கள் என்று வேறே சொன்னாள். புடவைகளைப் பார்க்க வேண்டுமென்று பறந்து வந்தோம். அப்புறம் ராத்திரி ஸ்டேஷனுக்கு வரமுடியாதோ, இல்லையோ!" என்று தங்களது வருகையின் காரணத்தைச் சுந்தரி ஸ்பஷ்டமாக அறிவித்தாள்.

சுந்தரிக்கு எப்போதுமே வெள்ளை மனசு. 'பட், பட்' டென்று நல்லதோ கெட்டதோ மனத்தில் வைக்காமல் கொட்டி விடுவாள். பீடிகை போடத் தெரியாது. இப்படிப் 'பளிச்' என்று 'உங்கள் ஜவுளியைப் பார்க்க வந்தோம்' என்று அவள் கூறியது மற்ற இருவருக்கும் அவ்வளவாகப் பிடிக்கவில்லை.

"அதற்கென்ன! சியாமளி, புடவைகளைக் கொண்டு வா, அம்மா" என்று பெண்ணுக்கு உத்தரவளித்து விட்டுக் காப்பி கொண்டு வர உள்ளே சென்றாள் லக்ஷ்மி மாமி. விரித்த பாயின்மேல் பிரித்துப் போட்ட புடவைகளை ஆராய்வதில் முனைந்தனர் கோமதி, சுந்தரி, பார்வதம் மூவரும்.

"இந்த நீலக் கெட்டிச் சரிகை நன்றாயிருக்கு. இதுதான் சியாமளிக்குத் தலை தீபாவளிப் புடவையா யிருக்கும்."

"இந்த 'மெரூன்' கலரைப் பாரேன். என்ன அழுத்தம் புடவை. மாமியின் சிவந்த மேனிக்கு இது ரொம்பப் பொருத்தமாயிருக்கும்!"

"ஏன், இந்த வாடா மல்லிகை நிறம் மட்டும் என்ன குறைச்சல்! இதுதான் சியாமளிக்குப் புக்ககத்தில் விடும் வைபவப் புடவையோ!"

சுந்தரியின் பரிகாசத்தில் முகம் சிவந்து தலை குனிந்தாள் சியாமளி.

இதற்குள் அருகிலிருந்த மாந்துளிர் நூல் புடவை ஒன்றைக் கண்ட கோமதி, "இது யாருக்கு? சமையற்காரிக்கா? ... ஆனால் விலை நாற்பது ரூபாய் போட்டிருக்கிறதே!" என்று இழுத்தபடி சொன்னாள்.

"இதுதான் அம்மாவுக்கு"— சியாமளியின் கணீரென்ற குரல் மூவர் முகத்திலும் ஆச்சரியக் குறி யிட்டது.

"பின் 'மெரூன்' கலர் யாருக்காம்!"— கோமதிக்குச் சியாமளி ஏதாவது பரிகாசம் செய்கிறாளோ என்ற சந்தேகம்.

"இது என் மாமியாருக்கு" — சியாமளி பதிலை முடிக்கு முன் லக்ஷ்மி மாமி பக்ஷணத் தட்டுகளுடன் வரவே அவளை மொய்த்துக் கொண்டு சரமாரியாகக் கேள்விகள் கேட்க ஆரம்பித்தனர் பெண்கள் மூவரும்.

"என்ன மாமி, உங்களுக்கு நூல் புடவையா!" என்று கேட்டனர்.

"ஆமாம், மாமி. நான் எப்போதும் தீபாவளிக்கு நூல் புடவைதான் எடுப்பது வழக்கம். அதிலும் கடந்த பதினெட்டு வருடங்களாக..."

"ஏன், அப்படி!"

"அதுவா! காப்பி சாப்பிடுங்கள், பிறகு சொல்கிறேன்!"

இமே பாயின் மீது எல்லாவற்றிற்கும் மேலாகக் கம்பீரமாக விரித்துக் கிடந்தது மாந்துளிர்ப் புடவை. நன்றாக முறுக்கேறிய அதன் சன்னமான நூலும் நம்பர் இழைகளை நீவிக் கொடுத்தபடி தனது பழைய சிந்தனை யிழைகளைப் பின்னலானாள் லக்ஷ்மி மாமி.

* * *

பதினெட்டு வருஷங்களுக்கு முன்பு சுந்தரமய்யர் இன்றுபோல் பங்களா வாசமும், கார் சவாரியும் செய்து கொண்டிருக்கவில்லை. ஒரு ஏழைக் குமாஸ்தாவாகத்தான் எங்கேயோ மூதுகொடியப் பேனாவினால் உழுது போராடிக் கொண்டிருந்தார். அவர் கொண்டு வந்து கொடுத்த இருநூறு ரூபாயில் அவரது பெற்றோர்களுக்கு அனுப்பியது போக மீதியைக் கொண்டு சுந்தரம், லக்ஷ்மி இருவரும் குடும்பம் நடத்தியாக வேண்டும். குடும்பச் செலவு இழுத்துப் பறித்துக் கொண்டு தானிருந்தது. லக்ஷ்மியும் கணவன் முகம் கோணாது கூடிய வரையில் செட்டும் கட்டுமாகக் குடித்தனம் நடத்தி வந்தாள். மணமாகி ஐந்து வருடங்களில் அவர்களிடையே ஒரு தகராறும் இன்றிச் சுமுகமே நிலவியது. கடைசியில் ஐந்தாம் வருட ஆரம்பத்தில், தான் பாட்டியாகப் போகும் செய்தி கேட்டு, தாயற்ற பெண்ணான தன் மருமகளைப் பரிந்து பாதுகாக்கச் சுந்தரமய்யரின் தாயார் ஆவலுடன் வந்தாள்.

அப்பொழுது தசரா சமயம். சுந்தரம் தன் நண்பர்கள் சிலர் வீட்டுக்கு லக்ஷ்மியை அழைத்

துப் போக நினைத்தார். தினமொருவர் வீட்டுக்கு விஜயம் செய்வதெனத் திட்டமிடப்பட்டது. லக்ஷ்மி அன்று மஞ்சள் குங்குமத்துக்குச் சென்றிருந்த வீட்டில் சீதா என்றொரு பெண் வந்திருந்தாள்.

முதல் சந்திப்பிலேயே சீதாவும், லக்ஷ்மியும் சரளமாகப் பழகலாயினர். சீதாவின் அழகிலும், முக்கியமாக அவளுடைய மேனிக்கேற்ப அலங்கரித்து நின்ற பச்சை நிறப் பட்டுப் புடவையிலும்தான் லக்ஷ்மி மயங்கினாள்.

மறுதினம் தனது ஒரே புடவையான, முதல் நாள் கட்டி அவிழ்த்த கத்திரிப்பூ நிறப் புடவையையே லக்ஷ்மி உதறிக் கட்டிக் கொண்டு புறப்பட்ட போது, அன்றும் சீதாவைச் சந்திக்க நேரும் என்று எண்ணவில்லை. அன்று சீதா கட்டியிருந்த கேசரிக் கலரில் கறுப்பு பார்டரும், இலை வடிவச் சரிகையும் போட்ட புடவை கண்ணைப் பறித்தது.

மூன்றும் தினம் தனது பழைய நைலான் ஸில்க் ஒன்றை 'இஸ்திரி'கூடப் போடாமல் லக்ஷ்மி கட்டிக் கொண்ட போது ஏனோ அவளையும் அறியாது ஏக்கம் நிறைந்த பெருமூச்சு ஒன்று வெளிப்பட்டது. காரணம், அன்று நல்ல கறுப்பில் கெட்டிச் சரிகை போட்ட புது மோஸ்தர்ப் புடவையில் சீதாவின் அழகைக் கண்டதுதான்.

அன்று சரஸ்வதி பூஜை. சீதாவின் வற்புறுத்தல் தாங்காமல் அவள் வீட்டுக்குச் சென்றாள் லக்ஷ்மி. அப்போது விஷவிருக்ஷத்துக்கு விதை விடப்பட்டது. லக்ஷ்மி போயிருந்த நேரத்தில் தான் சீதா வீட்டு வாடிக்கைப் புடவைக்காரன் தீபாவளிக்கான பல புது ரகப் புடவைகளுடன் அங்கு விஜயம் செய்திருந்தான்.

அவள் தனது மனசை எத்தனையோ சிரமப்பட்டு அடக்கியும் கடைசியில் கட்டுமீறிய ஆசை தலைதூக்கவே, கண்கள் வட்டமிட்டுப் பதிந்து நின்ற பொன் வண்டு நிறச் சேலையைக் கைகள் தாமாகப் புரட்டின. அதன் விலை எண்பது ரூபாய்!

குறிப்புணர்ந்த புடவை வியாபாரி, "எடு, அம்மணி! உனக்கு நல்லா யிருக்கும். நம்மகிட்டே புடவை எடுக்கிற முகூர்த்தம் ராஜாமாதிரி மகன் பிறப்பான்" என்று சாதுர்யமாகப் பேசி அதன் தலைப்பை எடுத்து விசிறிப் போட்டான். மின்சார ஒளியில் புடவையின் ஒளி லக்ஷ்மியின் கண்களில் பளிச்சென்று பிரதிபலித்து இதயத்தை மீட்டியது.

"அட, லக்ஷ்மிக்கு ரொம்பப் பொருத்தம்!"

சீதா புடவையை அவள் தோளருகே வைத்துப் பிடித்தாள். ஆசை வரியிட்டது முகத்தில்!

'பட்டுப் புடவை கட்டிக் கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டால் மாத்திரம் போதுமா! அதற்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டாமா!' லக்ஷ்மியின் உள்ளத்தில் ஓடிய நினைப்பு அவளை உடனே வீட்டுக்குப் போகத் தூண்டியது. வீட்டுக்கு வந்ததும் தன் கணவரிடம், தன் உள்ளங் கவர்ந்த பட்டுப் புடவையைப் பற்றித் தெரிவித்தாள். "சீதாகூட அந்தப் பட்டுப் புடவை எனக்கு ரொம்பப் பொருத்தமா யிருக்கிறது என்று சொன்னாள்."

"உனக்குப் பொருத்தமாயிருந்தால், அது நம் குடும்பப் பொருளாதார நிலைக்குப்பொருத்தமா யிருக்க வேண்டாமா!" என்று கேட்டு விட்டு அவள் கணவர் சுந்தரம் அசுவாரஸ்யமாக ஒரு கொட்டாவி விட்டார்.

லக்ஷ்மிக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. சுடுசொற்களைக் கொட்டித் தீர்த்தாள்.

தீபாவளி நெருங்கியது. சுந்தரம் வாங்கி வந்த நூல் புடவையை விரலாலும் தீண்டேன் என்று லக்ஷ்மி தீர்மானமாகக் கூறிவிட்டாள். அவளது வாடிய முகம், மெலிந்த உடல், ஏக்கம் நிறைந்த கண்கள் இவை சுந்தரத்தைக் கலங்கச் செய்தன. இந்தப் பெண்ணுக்கு ஏன் திடீரென இந்த ஆசை! இதுதான் மசக்கை என்பதோ!

அந்த நிமிஷமே சுந்தரம் நிம்மதி யிழந்தார். மனைவியின் ஆசையைப் பூர்த்தி செய்ய முடியாத தன் நிலையை நொந்து கொண்டார்.

மன உளைச்சலுடன் காலை எட்டு மணிக்கே வீட்டை விட்டுப் புறப்பட்டார். கடைசியில் தன் கட்சி தோற்ற துயரம் வயிற்றைச் சுருட்டி வேதனை செய்ய மூலையில் சோர்ந்து படுத்தாள் லக்ஷ்மி.

மாலை மணி ஏழடித்தது. லக்ஷ்மி கண் விழித்தாள். பிடிவாதமாக அன்று முழுவதும் ஆகாரம் சாப்பிடாததால் களைப்பு கண்ணைச் செருகிற்று. திடீரென ஒரு கவலை. காரியாலயத்திலிருந்து இன்னும் சுந்தரம் ஏன் வரவில்லை! முகத்தைக் கழுவிக்கொண்டு விளக்கேற்றினாள்.



மணி எட்டு, ஒன்பது... சுந்தரம் வரவில்லை! இனம் தெரியாத பயம் அவளைச் சூழ்ந்து கொண்டது.

"அம்மா! அவர் வரவே இல்லையா?"

"இல்லையே!"

"தினம் ஆபிஸ் விட்டவுடன் வந்து விடுபவர் இன்று இத்தனை நேரம் ஆக்கிறாரே! எனக்குக் கவலையாக இருக்கிறதே!"

"என்ன கவலை! அவன் என்ன குழந்தையா! தானாக வருகிறான்!" என்று சமா

தானம் செய்தான் மாமியார். என்ன கவலையென்று பேச்சுக்குச் சொல்லி விட்டாளேயொழிய அவளையும் கவலைவாட்டவேசெய்தது.

கடையிலே மணி பன்னிரண்டும் ஆயிற்று. அங்கங்கே ஒற்றைப் பட்டாசுகள் வெடித்து ஓய்ந்து விட்டன. இரண்டாம் காட்சி சினிமா பார்த்துச் செல்லும் ஒருவன், "ஏறுமாறானால் கூறாமல் சன்யாசம் கொள்" என்ற அடியைப் பாடிக்கொண்டே போகும் குரல் கேட்டது. திடீரென லக்ஷ்மிக்கு உடல் பதறியது. அப்படியும் இருக்குமோ! சுந்தரம், அவளுக்குப் பயந்து, தொல்லைகள் தாங்காது, அமைதியைத் தேடிப் புறப்பட்டு விட்டாரோ! இனி, அவள் கதி! அவள் வயிற்றில் வளரும் சிசுவின் கதி! இதென்ன கிணறுவெட்ட பூதம்போல்! லக்ஷ்மியின் நம்பிக்கை தளர்ந்தது.

பகட்டான பட்டுக்குப் பறந்தாள் அவள்! முறுக்கேறிய சன்னமான நூலிழையே நமக்குத் தகுதி என்றார் அவர். ஆனால் துருவங்கள் பிரிந்து நின்றன! பலன்...! லக்ஷ்மியின் கை தன்னையுமறியாது மஞ்சள் சரட்டைப் பற்றியது. நூலும் பட்டும் இரண்டுமே வேண்டாம். இந்தப் புனித மஞ்சள் நூல் அவளுக்கு நிரந்தரச் சின்னமாக இருந்தால் போதும்! நூலிழைகளில் ஆரம்பித்த பிரச்னை நூலிழையில் அவள் எதிர்காலத்தை ஊசலாடச் செய்து விட்டது!

சுந்தரம் வைத்துக்கொண்டா இல்லையென்றார்! இந்த ஞானோதயம் இத்தனை நேரம் எங்கிருந்தது! 'தேவி, அவருடைய நிரந்தர அன்பும், தீர்க்கமான மாங்கல்ய பலமும் கொடு' என்று உருக்கமாகப் பிரார்த்தனை செய்தவாறு வாயிற்புற ஜன்னலுடன் ஐக்கியமானாள் லக்ஷ்மி. தூரத்தே வரும் ஒவ்வொரு உருவத்தையும் கண்டு ஏமாந்தாள். மணி எங்கோ நாலடித்தது.

"லக்ஷ்மி, வா, அம்மா! பொறுப்பற்றவன் எங்கேயாவது சுற்றி விட்டு வருவான்" என்று சமாதானப்படுத்த முயன்றாள் மாமியார்.

லக்ஷ்மியின் மனம் உடைந்த அணையாயிற்று. "அம்மா" என்றலறி மாமியாரின் மார்பில் முகம் புதைத்தாள். அவள் வடித்த கண்ணீரில் பேதம் கரைந்தது. இதையே எதிர்பார்த்தது போல் வாசற்புறக் கதவு இடிக்கும் சப்தம் கேட்டது. துள்ளியோடினர் இருவரும்.

குளிரில் நடுங்கியபடி நுழைந்தார் சுந்தரம். லக்ஷ்மி ஓடி அவர் காலடியில் வீழ்ந்தாள்.

"என்னடா, எங்கே போனாய் இருக்கிறவர்களைப் பரிதவிக்க வைத்து விட்டு!"—தாயாரின் குரலில் கண்டிப்பும்,உரிமையும் கலந்து வந்தன.

"லக்ஷ்மி, மன்னிச்சுக்கோ. புடவை வாங்கத்தான் போனேன். முடிய வில்லை."

"என்ன, புடவையா! வேண்டவே வேண்டாம். நீங்கள்தான் வேண்டும். இந்த நூல்தான் வேண்டும்." வெறி பிடித்தது போல் மாங்கல்யத்தை இறுகப் பற்றினாள் லக்ஷ்மி.

"புடவைக்காகப் பணத்துக்குப் பல இடங்களில் அலைந்து சோர்ந்த சமயம்தான் முன்பு என்னிடம் கடன் வாங்கிச் சென்ற ராமுவின் நினைவு வந்தது. எதிர்பாராத வியப்பில் உன்னை ஆழ்த்த எண்ணி உடனே பூனா சென்றேன். ஆனால் சிறு தாமதத்தால் நான் திரும்ப நேரமாகிப் பணம் கிடைத்தும் புடவை இல்லையென்று ஆகி விட்டது" என்றார் சுந்தரம். லக்ஷ்மியின் கண்களில் நீர் சுரந்தது.



முன்பு அவர் வாங்கிய நூல் புடவையை உடுத்தித் தெய்வத்தை வணங்கியபோது லக்ஷ்மியின் மனத்தில் என்றுமில்லாத அமைதி நிலவியது.

அன்று வாங்கிய ஐம்பது ரூபாயில் தான் சாதாரண அளவில் ஆரம்பித்த துணி வியாபாரம் இன்று பெருகி 'லக்ஷ்மி ஸில்க் எம்போரியம்' ஆகவும், 'ஸ்ரீ புவனமாக'வும் வளர்ந்தது. வளர்ந்து பெருகிய செல்வத்துடன் செல்வி ச்யாமளாவும் வளர்ந்தாள்.

• • •

விஷயத்தை விளக்கிய லக்ஷ்மி, "கோமதி, அன்றைய தினத்திலிருந்து நான் தீபாவளிக்கு நூல் புடவைதான் வாங்குகிறேன். எனக்கு ஒரு ஞாபகார்த்தப் படிப்பினையாக, செல்வந்தரானபோதிலும் நேற்றைய நிலை மறக்காதிருக்க ஒரு சின்னம், இந்தச் செய்கை. எத்தனையோ பட்டுப் புடவை எவ்வளவோ சந்தர்ப்பங்களில் வாங்குகிறோம். தீபாவளியில் வழங்கினால் தானே! அதனால் இந்த 'மாந்துளிர்' தான் எனக்கு. என்ன, நன்றாயிருக்கிறதா, பர்வதம் மாமி! நாற்பது ரூபாய்தான்" என்று பேச்சை முடித்தாள்.

புடவை விலை நாற்பது ரூபாய்தான். ஆனால் அதன் பின்னிருக்கும் சக்தி, கணவரிடமுள்ள பக்தி, குடும்பப் பொறுப்பின் சின்னம்—நிரந்தரமான கணவரின் அன்புச் சின்னம் அடங்கிய தத்துவங்கள் கொண்ட இது நாலாறும் பெறுமே என்ற எண்ணம்தான் அந்தப் பெண்களின் மனத்தில் நிறைந்து நின்றது.

# சிவன் கீர்த்தனைகள்

ஸ்வர அமைப்பு : செம்மங்குடி சீனிவாச ஐயர்

**கீர்த்தனம் 15** ராகம்: தேவகாந்தாரி ஆதி தாளம்

**பல்லவி**

ஆரணப்பொருளே அபயமையா மெய் (யாரண)

**அனுபல்லவி**

பூரணனே ஜகத் காரணனே ஸர்வ
புவனபதி நீயே புகலிடமன்றோ (ஆரண)

**சரணம்**

கல்வினுள் தேரையும் கருப்பையுள் ஜீவனும்
காத்தருளும் கருணாகரனே
இல்லையென் பார்க்கெதும் சத்குருள்வோனே
எனதிருவிழிகளுக் கருளொளி உதவிய (ஆரண)

தேவகாந்தாரி ராகம் 29-வது மேளமாகிய தீர சங்கராபரணத்தில் பிறந்தது. பாஷாங்க ராகம், அன்னிய ஸ்வரம் கைசிகி நிஷாதம், சாயா ராகம். இதனைப் பெரியோர்களிடம் கேட்டுப் பாட வேண்டும்.

இதில் வரும் ஸ்வரங்கள்: ஷட்ஜம், சதுச்ருதி ரிஷபம், அந்தர காந்தாரம், சுத்த மத்யமம், பஞ்சமம், சதுச்ருதி தைவதம், கைசிகி நிஷாதமும், காகலி நிஷாதமும்.

இதன் ஆரோஹணம்: ஸ ரி ம ப த ஸ்
அவரோஹணம்: ஸ் நி த ப ம க ரி ஸ

த நி த பா என்ற இடத்தில் கைசிகி நிஷாதம் பேசும். ஸரிமபதநிஸ, பமதாநிஸ, ரிஸரி, மபதநா, நிஸ்ரி, ரிமகமாகரி என்ற பிரயோகங்கள் ராகச் சாயையைத் தருவதாகும்.

**பல்லவி** —1 களை

ஸா , நி த ப பா பா மா ம க ரி | ; ரி ஸா ரி ரி | க மா க ரி த ரி ||
ஆ - - ர - ணப்பொரு ளே - - | - அ ப ய மை | யா - - - மெய்

ஸ் நி தா தாநித பா பா பபமா ம க ரி | ; ம ரி ப மா | தா ; நி ஸ் ரி க் ||
யா - - ர - - ணப்பொரு - - ளே - - | - அ ப ய மை | யா - மெ ய் - -

*
ரிஸ்நித ; தாநித பா பா பமமா மகரி | ; ஸ ரி க ஸா | ரி ஸ ; ; ; ||
யா - - - - ர - - ணப்பொரு - - ளே - - | - அ ப ய மை | யா - - - -

**அனுபல்லவி**

*
; ப மா த தா நி ஸா , ஸா ஸா | ; , ரி ஸ் ஸா | ஸ் நி த நி த பா ||
- பூ - ர ண னே - - ஜ கத் | - - கா ர ண | னே - - - - -

; ப மா த தா நி ஸா, ஸா,க்ரிஸ்நித | ; நி ஸா ரி ரி | க்மாக் ரி ஸாரிக்ரிஸ்ஸா ||
- பூ - ர ண னே - - ஜ - - க - - த் | - கா - ர ண | னே - - - ஸர் - வ - -

*
; த ரி ஸ் ஸா நி ஸ் நி த தநித பா | ; ப தா ப பா | ம க ரி ம ப தா ||
- பு வ ன ப தி - - - - - நீ - - யே | - பு க ளி ட | ம ன் - றே - -

"ஆரணப்பொருளே"

**சரணம்**

*
; , தா த தா த நி த பா பா | ; மபா த பா | பமமா , க ரி ம ப த ||
- - க ல்வினுள் தே - - ரை யும் | - க ரு ப்பையுள் | ஜீ - - - - - வ னு ம்

*
; , த ரி ஸ் தா த நி த பா பா | ; ம பா த பா | பமமா , க ரி ரி ||
- - க ல் வி னுள் தே - - ரை யும் | - க ருப்பையுள் | ஜீ - - - - வனும்

; ஸ ரி க ஸா ரி ஸா ஸ நி தா | நி ஸா ரி ரி ஸ ரி | க மா க ரி ; ||
- கா - த்த ரு ளு ம் க - ரு | ணா - - க - ர | னே - - - -

இது அனுபல்லவிபோல்

இல்லையென்பார்க்கெதும் | சத்குருள் | வோனே ||
எனதிருவிழிகளுக் | கருளொளி | உதவிய (ஆரண) ||

* இந்த அடையாளம் கைசிகி நிஷாதத்தைக் குறிக்கும்.

# ரவிசந்திரிகா

## 37. கயிற்று நடனம்

சந்திரிகாவின் குழப்பங்களுக்கும், கற்பனைகளுக்கும் மீரானுடைய பம்பாய் விஜயம் முற்றுப் புள்ளி வைத்தது. அவர் வந்து சேர்ந்த ஒரு மணி நேரத்துக்குள் மாதுங்காவில் சாவித்திரி அம்மாளுடைய வீட்டு நிலவரத்திலேயே பெருங் கலக்கம் உண்டாகி விட்டது.

ரவிந்திரனுக்கு அதிர்ச்சியினால் மூளை பிசகி விட்டது என்று கேட்ட நிமிஷத்திலிருந்து சந்திரிகாவுக்கு இடி விழுந்தது போல் ஆகி விட்டது. சற்று முன்பு வரை காதல் என்றும் கல்யாணம் என்றும் எதிர்கால வாழ்க்கை என்றும், சுழன்று கொண்டிருந்த அவளுடைய மனம் அப்படியே ஸ்தம்பித்துப் போய் நின்று விட்டது. சாவித்திரி அம்மாளுக்கோ அவளுடைய படபடப்பெல்லாம் எங்கேயோ போய் ஒளிந்து கொண்டது. முகத்தில் எல்லையில்லாத சோகம் படர்ந்து விட்டது. ராமநாதனுடைய உள்ளத்தின் உணர்ச்சிகளோ முகத்திலிருந்து புரிந்துகொள்ள முடியவில்லை. மொத்தத்தில் அவனுக்கே அவனுடைய எதிர்காலம் புரியாமல் குழம்பிக் கொண்டிருந்தான் ராமநாதன்.

இத்தனை சிக்கல்களுக்கும் மத்தியில் எவ்விதக் குழப்பமும் இல்லாமல் ஓர் ஏகோபித்த முடிவு ஏற்பட்டது என்றால், அது சந்திரிகா திருச்சிக்குப் புறப்பட வேண்டிய விஷயமாகத்தான்!

"டாக்டர் சுரேஷிடம் உன்னைக்கொண்டு ஒப்படைக்க வேண்டியது என்னுடைய பொறுப்பு. அதன் பிறகு அவர் என்ன யோசனை சொல்கிறாரோ தெரியாது, அம்மா!" என்று சந்திரிகாவிடம் சொன்னார் உஸ்தாத், ஒரே கண்டிப்போடு.

சாவித்திரி அம்மாள் தம்பியைப் பார்த்தாள். அவனுடைய முகம் வெறிச்சென்று இருந்தது. சந்திரிகாவோ மறு நிமிஷமே திருச்சிக்குப் புறப்படத் தயாராக இருந்தாள்! "ரவீந்திரனுக்கு மூளைக் கோளாறு" என்று கேட்டதும், தானே அதற்குப் பொறுப்பாளி என்ற உணர்ச்சி அவளுடைய மனத்தை அத்தனை தூரம் அதிரச் செய்து விட்டது.





உஸ்தாத் மீரானுக்கு அந்த வீடு புதிது தான். அதன் சூழ்நிலைகளும் புதியவை தான். என்றாலும் அவருடைய பேச்சிலோ நடவடிக்கைகளிலோ எந்தவிதமான மாறுதலும் இல்லை. சகஜமாகப் பேசினார். சகஜமாக நடந்து கொண்டார். வழக்கமான கண்டிப்பும் உறுதியும் அவரிடம் அப்படியே இருந்தன.

சாவித்திரி அம்மாளும் ராமநாதனும் தனியாகப் பேசினார்கள். சந்திரிகாவைப் பற்றி விவரமாகச் சாவித்திரி அம்மாள் தில்லிக்கு, ராமநாதனுக்கு ஒரு கடிதம் எழுதினாள் அல்லவா? அந்தக் கடிதம் கிடைத்த மறுகணமே டாக்டர் சுரேஷுக்குச் சந்திரிகாவைப் பற்றித் தெரிவித்தது தானேதான் என்று ராமநாதன் சொன்னதும் சாவித்திரி அம்மாளுக்குக் கோபம் பிரமாதமாக வந்து விட்டது.

"பத்திரிகைக்காரர்களே இப்படித் தாண்டா தம்பி! இரகசியம் என்று ஒரு விஷயத்தை அவர்களால் வைத்துக்கொண்டிருக்க முடியாது! அதிலும் நீ அகில உலகச் செய்தி ஸ்தாபனத்தில் அல்லவா இருக்கிறாய்! அப்படியே டெலிபிரிண்டரில் வைத்து அந்தச் செய்தியை அடித்து விட்டால்தான் திருப்திப் படுவாய்! உன்னுடைய தொழில்டா அது! உன்னைச் சொல்லிக் குற்றம் இல்லை!"

இப்படிப் பேசினாள் சாவித்திரி அம்மாள். ராமநாதன் சிரித்தான்.

"அக்கா! பம்பாய்க்கு வந்து சேர்ந்த பிறகுதானே ஏதேதோ யோசனைகளைச் சொன்னாய் நீ. இதை யெல்லாம் நான் கண்டேனா? தவிரவும் அந்தப் பெண் சொல்லாமல் கொள்ளாமல் இப்படிக் காணாமல் போனது எத்தனை பெரிய தவறு. எத்தனை குழப்பங்களை உண்டாக்கி விட்டது அந்தச் சம்பவம். டாக்டர் சுரேஷ் எனக்கு எழுதிய கடிதத்தைப் பார்த்திருந்தால் புரியும் உனக்கு!"

"சரி, சரி! அந்தத் துப்பறியும் புலியினுடைய கடிதத்தை ஒன்றும் நான் பார்க்க வேண்டாம்! அதிகமாகப் படித்தவர்களுக்கே மூளை கிடையாது!"

இப்படி ஒரு போடு போட்டு விட்டு அந்த இடத்தை விட்டு நகர்ந்தாள் சாவித்திரி அம்மாள். இதன் பிறகு தனது அக்காளைச் சமாதானப் படுத்துவதற்காக ராமநாதன் எத்தனையோ சிரமப்பட்டான். கடைசியில் சாவித்திரி அம்மாளும் திருச்சிக்குப் போவது என்று முடிவான பின்புதான், கொஞ்சம் நிம்மதி ஏற்பட்டது!

ஆமாம்; ராமநாதனுக்கு 'லீவு' இல்லை. தில்லி ஆபீஸில் புதிதாகப் போய்ச் சேர்ந்திருப்பதால், லீவு நாட்களை நீடிப்பதற்கு இல்லை. ராமநாதனால் திருச்சிக்குப் போக முடியாது. இந்த நிலையில் என்ன செய்வது?

“உஸ்தாத்! நாளைக் காலையில் எங்கள் அத்தான் ‘காம்பி’லிருந்து திரும்புகிறார். நீங்கள் உங்கள் பிரயாணத்தை ஒரு நாள் ஒத்திப் போடுங்கள். ஏனென்றால் அக்காளும் திருச்சிக்கு வரவேண்டும் என்கிறாள். அவளுக்கு அங்கே முக்கியமான ஒரு காரியம் இருக்கிறது. அத்தானிடம் கலந்து பேசி நாளையே புறப்படலாம் என்று நினைக்கிறாள். நீங்கள் இருப்பதால், துணைக்குப் பயமில்லை. அவளைத் தனியாக அனுப்ப வேண்டிய திருக்கிறதே என்ற பயமும் அத்தானுக்கு இராது!”

உஸ்தாத் சிரித்தார். “என்ன ராமநாதன்? யார் யாருக்குத் துணை என்கிறீர்கள்? உங்கள் அக்காளுக்கு நாங்கள் துணையா! இல்லவே இல்லை. உண்மையில் உங்கள் அக்காள்தான் எங்களுக்குத் துணை! அவர்கள் வராவிட்டால் கூட, வரவேண்டும் என்று கட்டாயப் படுத்துவதாக அல்லவா இருக்கிறேன். பெண்கள் வண்டியில் நான் இந்தப் பெண்ணைத் தனியாக ஏற்றி வைத்து, பிறகு போகிற வழியில் எங்காவது காணாமல் போய் விட்டால், யார் ஜவாப்தாரி!”

இந்த வார்த்தைகளைச் சந்திரிகாவினால் கேட்கவே முடியவில்லை. அப்படியே வீறிட்டு அழுது விட்டாள்.

* * *

**ப**ம்பாயிலிருந்து சென்னை நோக்கிச் செல்லும் ரயில் வண்டி அதிவேகமாக ஓடிக் கொண்டிருந்தது. பெண்கள் வண்டியில் கூட்டம் இல்லை. இரண்டாவது வகுப்பு வண்டியானதால், சந்திரிகாவும் சாவித்திரி அம்மாளும் தவிர வேறு யாருமில்லை. அந்தத் தனிமை இப்பொழுது சந்திரிகாவுக்குப் பயங்கரமாக இருந்தது.

ரயிலுக்கு வெளியே, அது இரவு நேரமானதால், ஒரே இருட் படலமாக இருந்தது. வானத்தில் அங்கங்கே கண் சிமிட்டிய நட்சத்திரங்களைத் தவிர, சந்திர வெளிச்சம் பிரகாசமாக இல்லை. வண்டிக்குள்ளேயோ விளக்கை அணைத்து விட்டதால், சிறிய நீலச் சுடர் ஒன்றைத் தவிர வேறு பிரகாசம் இல்லை. சாவித்திரி உறங்கி விட்டாள். எத்தனை நேரம் உறங்காமல் இருப்பாள் சந்திரிகா?

பம்பாயிலிருந்து புறப்படுவது என்று தீர்மானித்ததும் மனத்தில் இருந்த குழப்பங்கள் எல்லாம் தீர்ந்து விட்டாற் போல ஒரு நிம்மதி ஏற்பட்டது சந்திரிகாவுக்கு. ஆனால் ரயிலில் ஏறி உட்கார்ந்ததுமோ குழப்பம் மீண்டும் ஆரம்பித்து விட்டது.

‘புத்தி சுவாதீனம் இல்லையென்றால், அது எப்படிக் குணமாகும்? எத்தனை பெரிய விபரீதம் நடந்து விட்டது! தான் திரும்பச் சென்றால் நிலைமை எப்படிச் சீர்



திருந்தும்? ஆனாலும் யோசனை இல்லாமல் தன்னை அங்கே வரவழைக்க மாட்டாரே, டாக்டர் சுரேஷ்!'

இப்படி ஒரு சிந்தனை. மறு விநாடி மீண்டும் கவலை.

'நான் திருச்சியிலிருந்து ஓடி வந்தது எத்தனை பெரிய பிசகு? அதனால்தானே இத்தனை குழப்பங்கள்! இத்தனைக்கும் மத்தியில் ஒரு வாரமாக இந்த சாவித்திரி அம்மாள் வேறு எத்தனை குழப்பம் குழப்பி விட்டாள்! ஆனால் பாவம், ரொம்ப நல்லவள்! எனக்குத் துணையாகத் தானே இப்பொழுது இத்தனை நெடும் வழி பிரயாணம் செய்து வருகிறாள்!'

ஏதேதோ சிந்தனைகளுக்கு மத்தியில் சந்திரிகா கண்ணை மூடினாள்.

கரு மேகங்கள் படர்ந்த வானத்தில் நட்சத்திரங்கள் மின்னுகின்றன. பிறைச் சந்திரன் அந்த இருளிலே கீறி விடப் பட்ட ஒரு சிறு ஒளி வளைவு போல மேகத்திலே மிதந்தது. இதோ அந்த மேகங்களுக்கு ஊடே கயிறு கட்டி யிருக்கிறது. அதில் சந்திரிகா நடக்கிறாள்.

எங்கிருந்தோ புல்லாங்குழலின் ஒலி வருகிறது. அடடா! எத்தனை சுகமான இன்னொலி அது. சந்திரிகாவின் இடது கையிலே ஒரு வர்ணக் குடை. அதை விரித்துப் பிடித்திருக்கிறாள். இதோ அந்தக் கயிற்றின் மேல், புல்லாங்குழலிலிருந்து வரும் இன்னொலியின் வளைவு நெளிவுகளுக்குத் தகுந்தாற்போல் கயிற்றிலே நடனம் ஆடுகிறாள் சந்திரிகா! மேகங்கள் அவளைச் சுற்றி மிதந்து செல்கின்றன. நட்சத்திரங்கள் எல்லாம் ஒளிக் குமிழ்களாக அவளைச் சுற்றிப் பிரகாசிக்கின்றன. வானத்திலே பறக்கும் விமானத்தைப் போல, புல்லாங்குழலின் தெய்விக இசையானது மேகங்களையும், நட்சத்திரக் கூட்டங்களையும், பிறைச் சந்திரனையும் தழுவிக் கொண்டு 'விர்' என்று எவ்விச் செல்கிறது. கயிற்றில் நடப்பது போலவே தெரியவில்லை சந்திரிகாவுக்கு. தன்னை மறந்த ஒரு நாத உலகிலே சங்கீத மயக்கத்திலே தானும் தனது சரீரமும் ஐக்யமாகித் தவழ்ந்தாள் சந்திரிகா.



இதோ! திடீரென்று எங்கிருந்தோ ஒரு கை அந்தப் புல்லாங்குழலைப் பிடிக்க வருகிறது. என்ன இது! திடீரென்று ஒலி முறிந்து விட்டது! ஒலி நின்ற மறு விநாடி. சந்திரிகாவின் இடது கையிலே இருந்த குடை அங்குமிங்கும் திணறுகிறது. கையும் காலும், ஆடுவதற்குப் பதிலாகப் பதறுகின்றன. தாளம் தவறியது. கயிற்றிலே இதுவரை நின்ற சமன் கெட்டது. இதோ! இதோ! தலை குப்புற —

விசில் ஊதிய வண்ணம் ஆடி ஆடிச் சென்று கொண்டிருந்த ரயிலில் இரண்டாவது வகுப்பு வண்டியின் மெத்தையிலிருந்து உருண்டு விழுந்து விட்டாள் சந்திரிகா! நல்ல வேளை! மேல் மெத்தையாக இருந்திருந்தால் பலமாக அடிபட்டிருக்கும். மேல் மெத்தையில் சாவித்திரி அம்மாளுடைய பெட்டியும், கூஜாவும் உட்கார்ந்து கொண்டிருந்தன. பக்கத்து மெத்தையில் அந்த அம்மாள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள்!

* * *

உஸ்தாத் மீரான் பம்பாய்க்குச் சென்ற காரியம் வெற்றிகரமாக முடிந்தது. என்றாலும் திருச்சி சம்பந்தப்பட்டவரை அவர் அங்கிருந்து அப்பொழுது போனது பெரிய விபரீதத்துக்குக் காரணம் ஆகிவிட்டது.

பாலக்கரையிலே பண்டிகைச் சமயம் அது! பெரிய பெரிய பணக்காரர்களும், திருச்சி நகரத்து மௌல்விகளும், பக்கீர்களும் ஒன்று சேர்ந்து முனைந்து கொண்டாடுகிற அல்லாப் பண்டிகை அது! வழக்கமாக ஊர்வலத்தில் சிலம்ப விளையாட்டுக்கள் மும்முரமாக நடக்கக் கூடிய பெரு நாள் அது. வேறு யாரும் சொல்லியிருந்தால் உஸ்தாத் அந்தச் சந்தர்ப்பத்தில் திருச்சியிலிருந்து கிளம்பியிருக்க மாட்டார். ஆனால் டாக்டர் சுரேஷ் அல்லவா கண்டிப்பாக அவரைப் பம்பாய்க்கு அனுப்புகிறார்! முடியாது என்று சொல்ல முடியாதே! தவிரவும் தனக்குப் பிறகு தன்னுடைய சிலம்ப வாரிசாக விளங்கப்போகும் மஜீத் மருமகனை வந்த பின்னர், அவர் சிலம்பப் பள்ளிக் கூடத்தைப் படிப்படியாகக் கை கழுவ விரும்புகிறார் அல்லவா! இதெல்லாம் காரணமாகத்தான் பம்பாய் புறப்படும் போது மனம் சஞ்சலப்படாமல் இருந்தார்

ஆனால் அவர் திருச்சிக்குத் திரும்புவதற்குள் பெரிய விபரீதம் நேர்ந்து விட்டது.

பண்டிகையின்போது உஸ்தாதின் பள்ளிக் கூடத்துச் சிலம்பப் பிள்ளைகளை மஜீத் அணிவகுத்துச் சென்றபோது, பாலக் கரைத் திருப்பத்தில் எல்லாரும் நின்று கொஞ்சம் "கை வரிசை"களைக் காட்ட முனைந்தார்கள். அப்போது உய்ய கொண்டான் கரையில் எங்கிருந்தோ கல் வந்து விழுந்தது. மஜீத் கொஞ்சம் நிதானித்தான். "ஆட்டம் தொடர்ந்து நடக்கட்டும்!" என்று சமிக்ஞை செய்தான். ஐந்து நிமிஷத்தில் மீண்டும் எங்கோ ஒரு மறைவிடத்திலிருந்து இரண்டு மூன்று கற்கள் வந்து விழுந்தன. என்ன செய்யலாம் என்று யோசிப்பதற்குள், ஐந்தாறு எருத் துண்டுகளும், இரண்டொரு முட்டைகளும் சிலம்பக் கூட்டத்துக்குள்ளே வந்து சிதறின. மஜீதுக்குக் கண் சிவந்தது. ஆனாலும் உஸ்தாத் ஊரில் இல்லையே. பள்ளிக் கூடத்தைஅப்படியே ஆட விட்டு விட்டுத் தான் கல் வந்த திசையை நோக்கி நடந்து சென்று, பிறகு அதன் விளைவாக ஏதாவது குழப்பம் நேர்ந்தால் என்ன செய்வது? நாகரத்தினமும்குப்புசாமியும் சேர்ந்துதான் ஏதோ வம்பு பண்ணுகிறார்கள் என்று தெளிவாகத் தெரிந்தது. சிலம்பப் பிள்ளைகள் எல்லாம் சீறிக் கொண்டு நின்றார்கள். ஆனாலும் தான் இப்பொழுது பொறுமையோடும் பொறுப்பு உணர்ச்சியோடும் நடந்து கொள்வதுதான் புத்திசாலித்தனம் என்று நினைத்தான் மஜீத். "சரி, மேலே செல்லுங்கள்!" என்று சொல்லி விட்டு அந்த இடத்தை விட்டு நகரும்படியாகச் சிலம்பப் பள்ளிக்கூடத்துக்குக் கட்டளை இட்டான் மஜீத்.

அன்று சிலம்ப ஆட்டம் உற்சாகம் இல்லாமல் எப்படியோ போயிற்று. பண்டிகையில் எந்தக் குழப்பமும் வரக்கூடாது என்று காவலியாரும் மற்றவர்களுமாக மஜீதையும் சகாக்களையும் அரவணைத்துக் கொண்டு சென்றார்கள். ஆனால் மஜீதின் மனத்தில் சொல்லொணாத ஆத்திரம் உண்டாயிற்று. தானே தனதாக முதன் முதல் வெளியே கொண்டு செல்லும் சிலம்ப கோஷ்டிக்கு இப்படி ஒரு அவமானம் நேர்ந்ததை அவனால் தாங்க முடியவில்லை. ஒரு நாள் முழுதும் சிந்தனை செய்து, தன் சகாக்களோடும் கலந்து யோசித்துப் பார்த்தான். உஸ்தாத் வரும் வரை பொறுமையாக இருக்க வேண்டும் என்று எவ்வளவோ முயன்றான். முடியவில்லை. காரணம், அந்தச் சிலம்ப கோஷ்டியில் ஒரு சீடன் மறுநாட் காலை நாகரத்தினத்தைக் கடைவீதியிலே பார்த்தானாம். "என்னடா! நேற்றுச் சிலம்ப ஆட்டம் எப்படி?" என்று எகத்தாளமாக அவன் கேட்டானாம். அதன் பேரில் வார்த்தை தடித்ததாம். நாகரத்தினம் மஜீதைப்பற்றி அந்தச் சீடனிடம் மிகவும் மரியாதைக் குறைவாகப் பேசி விட்டுப் பகோன் வீட்டை நோக்கி விரைவாக நடந்து விட்டானாம்!



இதைக் கேட்ட மறுவினாடி மஜீதுக்கு இரத்தம் கொதித்தது. கையும் காலும் கோபத்தினால் ஆடின. 'விறு விறு' என்று நேரே பகோன் வீட்டை நோக்கி நடந்தான்.

பகோன் வீட்டில் பேச்சு முறுகியது. பகோன் ஒருவன் நடுவில் இருந்திராவிட்டால் நாகரத்தினம் அன்று நொறுங்கிப் போய் இருப்பான் என்று பலரும் பேசிக் கொண்டார்கள்.

"நீ என்னோடு கை கொடு! பாலக்கரைச் சவுக்கத்தில் சிலம்பப் போட்டியிலே இறங்குவோம்! எவன் தோற்கிறானோ, அவன் அன்றிலிருந்து ஜெயித்தவனுக்கு அடிமை! என்ன சொல்லுகிறாய்?" என்று சவால் விட்டான் மஜீத்.

"சிலம்பப் போட்டி" என்றதும் நாகரத்தினத்துக்கு மனத்துக்குள் நடுக்கம் கொடுத்தது.

"தம்பி! இந்தச் சிறு காரியத்துக்கு நீயும் நானும் கோதாவில் இறங்க வேண்டியதில்லை. உன் சீடன் ஒருவனை இறக்கு. நானும் என் சீடன் ஒருவனை இறக்குகிறேன். எந்தப் பள்ளிக்கூடத்துப் பையன் தோற்கிறானோ, அந்தப் பள்ளிக்கூடம் ஜெயித்த பள்ளிக்கூடத்துக்கு அடிமை!" என்றான் நாகரத்தினம்.

"உன்னுடைய சீடனா! நாகு, நீ என்றைக்குடா உஸ்தாத் ஆனாய்? அட

கல்லடிச் சண்டியனே!" என்று சீறினான் மஜீத். பகோரான் கையமர்த்தினான்!

"பகோரான்! அவனுக்காக நீ சிலம்பம் ஆடுவாய் என்று நினைத்துத்தான் நாகரத்தினம் இந்தமாதிரிப் பேசுகிறான்! தெரிந்ததா?" என்றான் மஜீத். கோபம் இன்னும் தணியவில்லை அவனுக்கு.

பகோரான் மஜீதைத் தனியாக அழைத்துப் போய்ப் பேசினான். தான் எந்தக் கட்சியிலும் சேரப் போவதில்லை என்று அப்புலிங்கத்திடம் கொடுத்திருந்த சபதத்தைக் குறிப்பிட்டுப் பேசினான் பகோரான். இதன் பேரில் ஒரு முடிவு ஏற்பட்டது. அதாவது நாகரத்தினத்தின் பிரதிநிதியாகக் குப்புசாமி கோதாவிலே இறங்குவது என்றும், மஜீத் தான் நிற்கலாம், அல்லது தன் பிரதிநிதியை நிறுத்தலாமென்றும் முடிவாயிற்று! பாலக்கரையில் புகழ் பெற்ற வியாபாரிகள் மூவர் இந்தப் போட்டிக்கு முடிவு சொல்லும் மத்தியஸ்தர்கள் என்றும் தீர்மானம் ஆகிற்று. இத்தனையும் ஆன பிறகுதான் அப்புலிங்கத்தின் காதுக்கு விவரம் எட்டிற்று. அவனுக்கு ஒன்றுமே ஓடவில்லை. டாக்டர் சுரேஷோ சொக்கிகுடிக்குப் போயிருந்தார். உஸ்தாத் மீரானோ பம்பாயிலே இருந்தார்! எனவே, அப்புலிங்கத்துக்கு ஒரே குழப்பமாக இருந்தது.

திருச்சி வீதியின் சுவரில் எல்லாம் அச்சடித்த விளம்பரத் தாள்களை ஒட்டிவிட்டான் நாகரத்தினம். லால்குடி மண்ணிலே பயிராகிய பணம் எல்லாம் பாலக்கரைக் கட்டடச் சுவர்களிலே கொட்டை எழுத்துக்களில் 'போட்டாப் போட்டி' விளம்பரமாகக் கண்ணைக் குத்தியது.

"போட்டாப் போட்டி!
காட்டாச் சிலம்பம்!"

"நடன பலாட்டிய
நரவீர சிங்கங்கள்!"

"பாலக்கரைச் சவுக்கத்தில்
பலமான போட்டி!"

இந்த விளம்பரங்களைப் பார்த்துவிட்டு, மஜீதின் ஆட்களும் எதிர் விளம்பரங்கள் அச்சடித்து ஒட்டினார்கள்.

"உயிருக்கு அஞ்சான்
உஸ்தாத் சீடன்!"

"மீரான் சீடன்
மேலான பயில்வான்!"

"கல்லடி வீரனுக்குக்
காலாடி சீடனு?"

என்றெல்லாம் விளம்பரத் தாள்கள் திருச்சி நகரத்தையே ஒரு கலக்குக் கலக்கிக் கொண்டிருந்தன. மலைக் கோட்டையிலும், மணிக் கூண்டிலும், பாலக்கரை பஜாரிலும், பீம நகர்த்தெரு வீதிகளிலும், புத்தூர், தென்னூர், உறையூர், பொன்மலை,- எங்கே பார்த்தாலும் விளம்பரங்களும் எதிர் விளம்பரங்களும், சவால் வீச்சுக்களும், சண்டியர் பேச்சுக்களுமாக ஒரே அமர்க்களமாக இருந்தது. அப்போதுதான், உஸ்தாத் மீரான் திருச்சி ஜங்ஷனிலே வந்து இறங்கினார். சந்திரிகாவையும், சாவித்திரி அம்மாளையும் ஒரு 'டாக்ஸி'யிலே ஏற்றி டாக்டர் சுரேஷின் வீட்டுக்கு அனுப்பிவிட்டு, தான் ஒரு குதிரை வண்டியில் ஏறலாம் என்று குதிரை வண்டிகள் நின்ற திசைப் பக்கம் திரும்பினார். கடகட என்று ஐந்தாறு குதிரை வண்டிகள் 'போட்டாப் போட்டி' போட்டுக் கொண்டு இவரை நோக்கி வந்தன. உஸ்தாத் மீரான் ஏறிட்டுப் பார்த்தார். ஒவ்வொரு குதிரை வண்டியின் கூண்டுக்கு மேலும் விளம்பரத்தாள் ஒட்டியிருந்தது.

"மீரான் சீடன் மேலான பயில்வான்"

"உயிருக்கு அஞ்சான் உஸ்தாத் சீடன்!"

இதைப் பார்த்து ஒன்றுமே புரியாமல் மீரான் குதிரை வண்டியின் எதிரே ஒரே திகைப்பிலே நின்றார். அதே சமயம் டாக்ஸியில் டாக்டர் சுரேஷின் பங்களாவுக்கு வந்து சேர்ந்த சாவித்திரி அம்மாளும் சந்திரிகாவும் திக் கல்லை பிடித்தது போலத் துணுக்குற்று நின்றார்கள். காரணம், டாக்டர் சுரேஷின் பங்களாவில் வெளித் தாழ்வாரத்திலே போட்டிருந்த நாற்காலியில் லால்குடிப் பண்ணையார் கனகசுந்தரம் உட்கார்ந்திருந்தார். அவருக்கு அருகிலே நின்று ஏதோ தீவிரமான ஒரு விஷயத்தைப் பேசிக் கொண்டிருந்தது வேறு யாருமில்லை, பண்ணையார் கனகசுந்தரத்தின் மகளும், ரவீந்திரனுடைய மனைவியுமான கல்யாணிதான்!

(தொடரும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram

"இந்த அழகு தரும் சோப் தனிவிதமானது"

புதியது!
நறுமணமுள்ளது!
ப்ரீஸ்






"ஆக்டமர் கலந்துள்ளது"

* உடலிலுண்டாகும் துர்கந்தத்தை நீக்குகிறது

உங்களை புத்துணர்ச்சியுடன் இருக்கச் செய்கிறது!

* சருமத்திலுள்ள கிருமிகளை கொல்லுகிறது

சருமத்தை ஆரோக்கியத்துடனிருக்க பாது காப்பளிக்கிறது!

ஆக்டமர் (பைதியோனல்) மான்ஸான்டோவின் புதுமையான பாக்டீரியோஸ்டாட். அது கிருமிகளை கொல்லக் கூடிய சிறந்த சக்தியை உடையதாயிருந்தாலும், சருமத்திற்கு மென்மையைத் தரக்கூடிய ரசாயனப் பொருள்.




விலை 8 அணாதான்

உள்ளூர் வரிகள் நீங்கலாக

ப்ரீஸ்-ஆக்டமர் கலந்த அழகு தரும் சோப்

BZ. 1-50 TM [illegible]

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon